*அனைத்திந்திய நூல் வரிசை*

# குஜராத்தி ஓரங்க நாடகங்கள்

**தொகுப்பு ஏ.எம். ராவல்**

இந்தி வழி தமிழாக்கம்
**சரஸ்வதி ராம்னாத்**



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# பொருளடக்கம்

# முன்னுரை

குஜராத்தி நாடகங்களின் வரலாறு அண்மைக் காலத்தியதுதான். மிகப் பழமையானது அல்ல. பாரத நாட்டின் ஏனைய இந்திய மொழிகளைப் போலவே குஜராத்தியிலும் ஆங்கில ஆட்சியின் போது, ஆங்கில இலக்கியத்தின் தொடர்பினால், கடந்த நூற்றாண்டின் பிற்பகுதியில், வசன இலக்கியம், நாவல், நாடகம் போன்ற இலக்கிய வடிவங்கள் போலவே, நாடக இலக்கியமும் உருவாகியது. இடைக் காலத்தில் குஜராத்தியில் ஒருசில வடமொழி நாடகங்கள் இயற்றப்பட்டன. அவற்றில் சில மேடையிலும் நடிக்கப்பட்டன. ஆனால் பொது மக்களின் மொழியிலே வழங்கப்பட்ட நாடக வகை 'பவாயி' தான். கேரளத்தின் கதகளி, மகாராஷ்டிரத்தின் லலித், மற்றும் தசாவதார கூத்து நாடகம், உத்திர பிரதேசத்தின் ராமலீலா, வங்கம், மற்றும் ஒரிசாவின் ஜாத்திரா, விரஜ பூமி எனப்படும் மதுராவின் ராசலீலை போலவே குஜராத்தின் பவாயி, குறிப்பிடத்தக்க நாட்டிய வகையாகும். புராணக் கதைகள், மான பட்டர்களின் வருணனைக் கதைகள், பாணர்கள்-சாரணர்களின் வீரமிக்க நாடோடிக் கதைகள், மேளா- பஜன் மண்டலிகள், பொம்மலாட்டம், மற்றும் கர்பா நடனங்களைப் போல இடைக்காலத்தில் மக்களின் வாழ்க்கைக்குச் சுவையூட்டுவதில் 'பவாயி'க்குப் பெரும்பங்கு உள்ளது. நாடகங்கள் தோன்று முன்னர், நாடக மேடைகளில் 'பவாயி' தான் இடம் பெற்றிருந்தது.

கிராமப்புறங்களில் 'பவாயி' நாடக அரங்கு. திறந்த வெளி மேடை தான். பார்வையாளர்கள் சுற்றிலும் அரை வட்ட வடிவமாய் அமருவார்கள். நடுவில் பவாயியின் 'வேஷ்' ஆட்டம் நடைபெறும். இதை பவாயி நாட்டிய அமைப்பின் ஒரு பகுதி எனலாம். ஆனால் ஒவ்வொரு பகுதியும் ஒரு சிறிய அளவில் தனிப்பட்ட நாடகமே. ஓர் இரவில் பல வேஷங்கள் நடிக்கப்படுகின்றன. இவற்றின் கதைக் கரு மிக இலகுவானது. நிகழ்ச்சிகளும், உரையாடல்களும் அவ்வப்போது இயற்றப்படுகின்றன. இடையே, 'அபோலா', 'ஹரியாலி' போன்ற உணர்ச்சிமிக்க பஜன்கள் 'நீதிகளை வலியுறுத்தும் கவிதைகள்' இடம் பெறுகின்றன. பவாயியில் நடனத்திற்கும், இசையைப் போலவே முதன்மை தரப்படுகிறது. பார்வையாளர்களின் கண்களுக்கும் செவிகளுக்கும் விருந்தளித்து அவர்களை மகிழ்விக்கும் வண்ணம் கதா

பாத்திரங்களின் உடைகள், நடிப்பு, ஆடல்-பாடல்கள், உரையாடல்கள் அமைகின்றன; பிராம்மணன், யோகி, வியாபாரி, பக்கிரி, முஸ்லீம் மியான், இராஜ புத்திரன், சிப்பாய் முதலியோர், அவரவர் பேச்சு மொழியில் பேசுகிறார்கள்; 'ரங்கலா', 'ஜுடன்' என்று வழங்கும் நடிகனின் நகைச் சுவைகள் தரமாக அமைகின்றன. வேஷ் எனும் ஆட்டத்தின் கதைக்கரு புராணத்திலிருந்து எடுத்த போதிலும் அதில் தற்காலத்திய சமூகப் பிரச்சினைகள் யதார்த்தமாக நகைச் சுவை உணர்ச்சியுடன் சித்தரிக்கப்படுகின்றன. மக்களுக்காக, இயற்றப்பட்டு, மக்களால் நடிக்கப்பட்ட பவாயி 'வேஷ்'களில் காதலும் நகைச் சுவையும் மட்டுமே முக்கிய இடம் பெறுவதால் சில சமயங்களில் சித்தரிப்புகளில் நகைச் சுவை மிகைப்பட்டு சமூக நிலை மிகைப்படுத்தியும் சில நேரங்களில் மேலோட்டமாகவும் காட்டப்படுகின்றன.

ஆங்கிலேயர்களின் ஆட்சிக் காலத்தில், ஆங்கிலக் கல்வியின் காரணமாக, படித்தவர்களின் இரசனையில் மாறுதல் ஏற்பட்டது இயல்பே. எனவே, 'பவாயி' அவர்களுக்கு அவ்வளவாக ரசிக்கவில்லை. இந்தியாவில் பணி புரிந்த ஆங்கிலக் கம்பெனி அலுவலர்களை மகிழ்விப்பதற்காக இங்கிலாந்திலிருந்து வந்திருந்த நாடகக் குழுக்கள் பம்பாயில் நடத்திய நாடகங்களும், இதற்காக நிறுவப்பட்ட நாடக மேடைகளும்தான் நவீன நாடக அரங்கத்திற்கு வழி வகுத்தன. பம்பாயில் அமைக்கப்பட்ட நவீன நாடக அரங்குகள் மக்களிடையே பிரபலமாயின. எல்பிஸ்டன் கல்லூரியில் ஆங்கில நாடகங்களை மேடை ஏற்றிய பார்சி இளைஞர்கள், தங்களது படிப்பு முடிந்த பின்னும் ஆர்வம் குன்றாமல் தியேட்டர் கிளப்புகளை—நாடக மன்றங்களை உருவாக்கினர். இந்த மன்றங்கள் துவக்கத்தில் ஆங்கிலத்தில் நாடகங்களை நடித்தன, பிறகு அதே நாடகங்களை பார்சி மொழியில் மொழிபெயர்த்து மேடை ஏற்றின. அதன்பின் குஜராத்தி உருது நாடகங்களை மேடை ஏற்ற தொழில் முறையிலான பார்சி நாடகக் கம்பெனிகள் உருவாயின. சில பார்சி நாடகக் கம்பெனிகள், நாடெங்கும் சுற்றுப் பயணம் செய்து, நாடகம், நாடகமேடை இவ்விரு துறைகளிலும் புரட்சி ஏற்படுத்தின எனலாம். இதன்பின் உற்சாகமும் ஆர்வமும் மிக்க குஜராத்தி இளைஞர்கள். இப்புதிய துறையின்பால் கவரப் பட்டனர். பல குஜராத்தி நாடகங்களும் நாடக மண்டலிகளும் தோன்றின. நவீன குஜராத்தி நாடக அரங்கம் உருவாகவே, நாடகாசிரியர்கள், அதன் தேவைகளுக்கேற்ப புதிய முறையில் நாடகங்களை இயற்றலானார்கள். கல்லூரிப் படிப்பினால் ஷேக்ஸ்பியரின் ஆங்கில நாடகங்கள், காளிதாசன், பவபூதி போன்றவர்களின் வடமொழி நாடகங்கள், நாடக இலக்கணத்தை படித்த மக்களுக்கு அறிமுகப்படுத்தியதுடன் அவர்களுக்கு ஊக்கமும், ஆக்கமும் தந்து உதவின.

துவக்க காலத்தில் எழுதப்பட்ட குஜராத்தி நாடகங்களில், வழி வழியாய் வந்துள்ள 'பவாயி' நாடகத்தின் செல்வாக்குடன், வடமொழி ஆங்கில நாடகங்களின் தாக்கமும் காணப்பட்டன. பவாயின் செல்வாக்கை, 'ரங்கலா'விலும்,

தொழில் முறையில் நடிக்கப்பட்ட நாடகங்களில் 'காமிக்' என்ற பெயரில் பிரபலமான 'ப்ரஹசன்' எனும் நகைச்சுவை வடிவத்திலும் காணலாம். ஐந்து, அல்லது அதற்கு மேற்பட்ட அங்கங்கள், நாந்தி போன்ற அறிமுகங்கள், காட்சி ஜோடனை இடையிடையே வரும் சுலோகங்கள் இன்பமான முடிவு, நாடக முடிவில் கூறப்படும் பரத வாக்கியம் இவை வடமொழி நாடகங்களின் முக்கிய அம்சங்கள். குஜராத்தி நாடகங்கள், கிரேக்க, மற்றும் ஷேக்ஸ்பியர் நாட கங்களைப் போல கவிதை வடிவில் எழுதப்படவில்லை என்றாலும், வசனக் கவிதை உருவத்தில் இருந்தன எனலாம். இந்த வசனக் கவிதை நடையும் வடமொழி நாடகங்களை ஒட்டியதுதான் ஆனால், வடமொழி நாடகங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது மேலை நாட்டு நாடகங்களின் பாணியைப் பின் பற்றும் கவர்ச்சி அதிகமாக இருந்தது. குஜராத்தி நாடகங்களில் 'நாந்தி' (அறிமுகம்) தவிர்க்கப்பட்டதும், நாடகக் கதையில் உள் மன வெளிப்புற போராட்டங்களுக்கு முக்கியத்துவம் அளித்ததும் மேலைநாட்டு நாடகத் துறையின் தாக்கத்தினால்தான். நடிப்பு முக்கியமாக உள்ள பாத்திரங்களுக்கு முக்கியத்துவம் தரப்பட்டது. வடமொழி நாடகங்களில் விலக்கப்பட்ட துன்ப முடிவு, குஜராத்தி நாடகங்களில் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இதன் பின்ன ணியில் ஆங்கில நாடகத்தின் செல்வாக்கைக் காணலாம். "டிராஜிடி" அதாவது துன்ப முடிவு இந்திய நாடகப் பரம்பரைக்குப் பழக்கமானது அல்ல. வடமொழி நாடகங்கள், வாழ்விலுள்ள கருணை ரசத்தைத் தொடவில்லை என்பது இதன் பொருளல்ல. அபிஜ்ஞான சாகுந்தலம், 'உத்தர ராமசரிதம்', மிருச்சகடிகம், போன்ற நாடகங்கள் கருண ரசத்தின் எல்லையையே தொட்டுவிட்ட போதும் இந்த நாடகங்கள் இன்பமுடிவையே கொண்டுள்ளன. 'காந்தா' போன்ற நாடகம் வடமொழி மரபையொட்டி எழுதப்பட்ட போதிலும் அதன் முடிவு துன்பியலாக இருந்தது, மேலைநாட்டு நாடக பாணியின் தாக்கத்தினால்தான்.

1850லிருந்து 1900வரை குஜராத்தி மொழியில் நாடகம் என்ற பெயரில் வெளி யிடப்பட்டிருக்கும் நூல்களில், பல புதிய எழுத்தாளர்களுடன் கூட, தல்பத்ராம் நர்மதா சங்கர், நவல்ராம், இரண சோட்பாயி, உதயராம் மணிலால் த்விவேதி, ஹரிலால் துருவ், பீமராவ் திவேடியா, போன்ற இலக்கிய கர்த்தாக்களின் பெயர்களையும் குறிப்பிடலாம். புதிய நாடகாசிரியர்கள் பழைய இலக்கிய கர்த்தர்களை எவ்வளவு தூரம் கவர்ந்திருந்தனர் என்பதை இதிலிருந்து அறிந்து கொள்ளலாம். குஜராத்தி நாடகத்தின் துவக்க காலத்தில் முதலிரண்டு கால கட்டத்தில் 'மித்யாபிராம்' (தல்பத்ராய்) 'லலிதா துக்தர்சக்' (இரண சோட்பாயி) 'வீரமதி' (நவல்ராம்) 'பிரதாக நாடக்' (கணபத்ராம்) 'காந்தா' (மணிலால் த்வி வேதி) போன்றவர்களின் படைப்புகள் சிறப்பானவை. பரம்பரை நாடக மான 'பவாயி', வடமொழி நாடகங்கள், ஷேக்ஸ்பியரின் நாடக பாணி, முதலியவற்றின் செல்வாக்கை, கடந்த நூற்றாண்டின், பிற்பகுதியில் படைக்கப்பட்ட நாடகங்களில் காண முடிகிறது. இக்கால கட்டத்தில் எழுதப் பட்டு, மேடை ஏற்றப்பட்ட நாடகங்களின் கதைக்கரு, பெரும்பாலும் புராண,

இதிகாசங்களை அடிப்படையாகக் கொண்டிருந்தன. அந்தக் கால கட்டத்தில் சமூகச் சீர்திருத்தக் கருத்து புதிய விழிப்பை ஏற்படுத்தியது. நாட்டுப்பற்றும், தேசிய உணர்வும் ஒரு சில நாடகங்களில் ஆங்காங்கே விரவிக் காணப்பட்டன.

இலக்கியப் படைப்பாளர்களான, நர்மத், இரணசோட்பாயி, காபர்ஜீ, மணிலால், முதலியவர்களின் நாடகங்கள் மேடையில் நடிக்கப்பட்டன. ஆயினும் தொழில் ரீதியான நாடக மேடைகள், இலக்கியக் கர்த்தாக்களின் தயவை மட்டும் நாடி, நிலைபெற முடியாது. நாளுக்குநாள் அதிகரித்து வந்த நாடகங்களின் தேவையைப் பூர்த்தி செய்ய தனிப்பட்ட நாடகாசிரியர்களின் வர்க்கம் தோன்றியது. இவர்களில் நத்தூராம் சுக்லா, டாஹ்யாபாயி தோல்ஷாஜீ, பூல்சந்த்ஷா, மூல்சங்கர் மூலாணி, நருசிங் வித்யாதர் போன்றவர் களின் படைப்புகளில், உரையாடல்கள் மற்றும் பாடல்களிலும் கூட இலக்கிய மணம் வீசுகின்றது. ஆனால் அக்காலத்திய நாடக இரசிகர்களைத் தொழில் ரீதியாக இயங்கிய நாடக மேடைகள் கவர்ந்தன. 'கவிஞர்கள்' என்று பிரபல மான புது ரக நாடகாசிரியர்கள் இரசிகர்களை கவர்ந்தனர். ஆகவே, நாளடைவில் இலக்கிய கர்த்தாக்களின் நாடகங்கள் நாடக மேடைகளில் எடு படவில்லை. இதே போல் மேடை நாடகங்களும் இலக்கியத் தகுதி அற்றவை யாகக் கருதப்பட்டன. மேடை நாடகங்கள், இலக்கிய பூர்வமான நாடகங்கள், இவ் விரண்டிற்குமிடையே ஏற்பட்ட இந்த விரிசலால், இரு சாராருக்கும் தீமையே விளைந்தது. இலக்கியப் படைப்பாளர்கள், நாடக மேடையின் நுட்பங்களை அறியாதவர்களாக இருந்ததால் அவர்களது படைப்புகள் நாடக மேடைக்கு ஏற்றவையாக அமையவில்லை. இதனால் நாடக அரங்கம் அவர் களது படைப்புகளை இழக்க நேரிட்டது. 1900க்குப் பிறகும் இந்நிலைமை இவ்வாறே நீடித்தது. 1930க்குப் பிறகு திரைப்படங்கள், நாடக மேடைக்கு பெரும் பாதிப்பை ஏற்படுத்தின. எனினும் இதற்குள் தொழில் ரீதியான நாடக மேடை மிகவும் வெற்றிகரமாக, ஜனரஞ்சகமாக பிரபலமடைந்து விட்டிருந்தது.

இந்நிலையில் இலக்கியப் படைப்பாளர்களை, நாடகத்துறையின்பால் ஈர்க்க எவ்வித தூண்டுதலும் இருக்கவில்லை. இருப்பினும் இலக்கிய உலகம் நாடகத்தின்பால் முற்றிலும் கவனம் செலுத்தாமலும் இருக்கவில்லை. 1900க்கும் 1930க்கும் இடையில், வடமொழி நாடகங்கள் மற்றும் ஷேக்ஸ்பியர் நாடக பாணிகளின் கலவையிலே உருவாக்கப்பட்ட 'ராயிநோபர்வத்', மற்றும் 'டாலன்பாணி' என்ற பெயரில் பிரபலமான வசனக் கவிதை நடையில் காதல் உணர்ச்சியும் காவியப் பண்பும் நிறைந்த இந்துகுமார்-பாகம் 1, (ரமண பாயி நீலகண்ட்) 'ஜயா அனேஜயந்த்' (கவி நகான்லால்) என்ற நாடகங்கள் குஜராத்தி மொழிக்குக் கிடைத்துள்ளன. இவை தவிர தவி தகான்லால் இதே முறையில் பத்து, பன்னிரெண்டு நாடகங்களை எழுதியுள்ளார். 1920க்கும் 1930க்கும் இடைப்பட்ட பத்தாண்டுகளில், சிறந்த கவிஞர்களான 'காந்த்', 'பல்வந்த்ராம் டாகுர்' ஆகிய இருவரின் நாடகங்கள் வெளியாயின. 'காந்த்' தொழில்ரீதியான

நாடக மேடையின்பால் அதிக கவனம் செலுத்தினார். ஆனால் 'உக்தி ஜவானி' என்ற டாகுரின் நாடகம் யதார்த்தவாதத்தை நோக்கி அடி எடுத்து வைத்துள்ளது. இதன்பின் புதிய கருத்துக்களைக் கையாளும் நோக்கு மெல்ல மெல்ல அதிகரித்துக் கொண்டே போயிற்று. விருவிருப்பும் சண்டைகளும் நிறைந்த கதை, பொழுது போக்குக்காகச் சேர்க்கப்பட்ட 'டேப்ளோ' காட்சிகள், முக்கியமான கதையுடன் தொடர் பில்லாத, ஆனால் சிரிக்க வைப்பதற்காகவே இணைக்கப்படும் 'காமிக்', நடிப்பு, உரையாடல்களில் மிகையான நாடகத்தன்மை, பொருத்தமற்ற இடங்களில் திணிக்கப்பட்ட கவிதை நயமில்லாத பாடல்கள், பார்வையாளர்களிடமிருந்து 'ஒன்ஸ்மோர்' பெறவேண்டி வலியப் புகுத்தப்பட்ட உத்திகள் இவற்றுடன் முன்னேறிய தொழில் ரீதியிலான நாடகங்கள், பண்பட்ட ரசனையுடைய ரசிகர்களை முகம் சுளிக்க வைத்தன. வடமொழி, மற்றும் ஷேக்ஸ்பியர் நாடகங்களும் அவர் களுக்கு, உற்சாகம் தரவில்லை. கடந்த நூற்றாண்டில் ஐரோப்பாவில் இப்சன் எழுதிய பிரச்னை நாடகங்கள் அடைந்த வெற்றியும், அதன் பின் வளர்ச்சி பெற்ற ஓரங்க நாடகங்களும் நம்முடைய இளைய தலைமுறை எழுத்தாளர் களைக் கவர்ந்தது இயல்பானதே. பட்டபாயி உமர் வாடியா, பிராண ஜீவன் பாடக், யஷ்வந்த் பண்ட்யா, முதலியவர்கள் தங்களது சிறிய நாடகங்களில் இதன் பாதிப்பை வெளிப்படுத்தினர். இவர்களின் மூலமாகத்தான் புதிய ஓரங்க நாடகங்கள் அறிமுகமாயின.

குஜராத்தில் அமெச்சூர் நாடக மேடையும் இதே காலகட்டத்தில் தான் ஏற்பட்டது. நாடகத்தில் ஆர்வமும் நடிப்பாற்றலும் மிகுந்த, பண்பட்ட ரசனை யுடைய இளைஞர்கள், மூலமாக மேடையேற்றப்பட்ட இலக்கியத் தரமுள்ள நாடகங்கள் தான் இதன் துவக்கமாகும். இதன் மலர்ச்சியில் சந்திரவதன் மேஹ்தாவின் பங்கு குறிப்பிடத்தக்கது. இவரும், இவருடைய நண்பர்களும் நாடக மேடையில் நடித்தனர். இதற்கென நாடகங்களை அவரே எழுதினார். சந்திர வதன் மேஹ்தாவை போலவே கன்ஹையாலால் முன்ஷி இதில் அதி கமாகப் பங்கு கொண்டார். இருவரும் களிப்பூட்டும் அம்சங்கள் நிறைந்த இன்பியல் நாடகங்கள், மெய்சிலிர்க்க வைக்கும் நாடகங்கள், எனப் பல வகையான நாடகங்களைப் படைத்தனர். அமெச்சூர் நாடக மேடையும் இவற்றை விரும்பி வரவேற்றது. இலக்கியத்தரம் மிகுந்த நாடகங்கள், மேடை நாடகங்கள் இவ்விரண்டிற்குமிடையே இருந்த இடைவெளியை நிரப்ப இவ்விரு நாடகாசிரியர்களும் ஆற்றிய பணி மகத்தானது. இவ்விருவரின் நாடகங்களிலும், நாடக மேடைக்குரிய கலை நுணுக்கங்கள், தகுதிகள் போதிய அளவு இருந்ததால் இது சாத்தியமாயிற்று. 1930க்குப் பிறகு துவங்கப் பட்ட தொழில் முறை நாடக மேடையின் சரிவிற்குப் பின்னர், அமெச்சூர் நாடக மேடை நாளுக்கு நாள் வளர்ச்சி பெற்று முழு மூச்சுடன் இயங்கத் துவங்கியது. பள்ளிகள், கல்லூரிகளின் ஆண்டுவிழாக்களின் நிகழ்ச்சிகளில் நாடகங்கள் முக்கியமான இடம்பெற்றதால், பம்பாய், அகமாதாபாத், சூரத், படௌதா, போன்ற நகரங்களில் தேர்ந்த ரசனையும், ஆர்வமும் கொண்ட

அமெச்சூர் நாடக குழுக்கள் தோன்றின. நாடகம் எழுதுவது, வெளியிடுவது, நடிப்பது போன்ற துறைகளில் புதியதொரு சூழ்நிலையை உருவாகியது. பின்னர் கல்வி, மற்றும் பொழுது போக்கு சாதனமாக விளங்கிய ரேடியோவும் அமெச்சூர் தியேட்டரைப் போலவே நாடகப் படைப்பிலக்கியத்தை தூண்டு விக்க உதவியது. இதன்பலனாக, பிரபல எழுத்தாளர்களும் இளையதலை முறையினரும் தரமான முழு நேர நாடகங்களையும், ஓரங்க நாடகங்களையும் இயற்றினர். பிற மொழிகளிலிருந்து மொழி பெயர்த்தனர். இவற்றில் பல மேடை ஏற்றப்பட்டன. இதனால் குஜராத்தி நாடக இலக்கியம் வெகுவாக வளர்ச்சி பெற்றது.

குஜராத்தி கவிதை, நாவல், சிறுகதையின் வளத்தோடு ஒப்பிடும் போது நாடகத் துறை வளம் குறைந்ததுதான். ஆனால் பொதுவாக ஏனைய சகோதர மொழிகளிலும் ஏறக்குறைய இதே நிலைதான் காணப்படுகிறது. நாடகத்தின் இலக்கியத்தரமான வடிவம்தான் இதற்கு காரணம். இலக்கிய நயம் மிகுந்த நாடகங்களை மேடை யேற்றும்போது ரசிகர்களை மகிழ வைக்க வேண்டு மானால், நாடகாசிரியருக்கு இலக்கிய நயத்தின் கூடவே நாடகக் கலைப் பற்றிய நுட்பமான பார்வை இருக்க வேண்டும். அதாவது நடிப்பு, அரங்க அமைப்பு, அரங்க மேடையின் கலை நுட்பங்கள், பற்றிய அறிவு, ஆகியவை இன்றியமையாதவை. மேலும் எழுத்தாளர் திரைக்குப் பின்னாலிருந்து கொண்டு பாத்திரங்கள் மற்றும் நாடகக் காட்சிகளை, மிகச் சிக்கனமாக, விரு விருப்புடன் யதார்த்தமாக உருவாக்க வேண்டியிருக்கிறது. நாடகம் எழுதுவது மிகவும் கடினமான பணி. அயராத உழைப்பும், கற்பனை வளமும் இதற்கு தேவை. இது மட்டு மின்றி உற்சாகமுள்ள அரங்க மேடையின் ஒத்துழைப் பின்றி இது வெற்றி பெற இயலாது.

முன்பே குறிப்பிட்டது போல குஜராத்தி ஓரங்க நாடகம் 1921க்கும் 1930க்கும் இடையில் துவங்கியது. அதாவது வங்காளி, மராத்தி, இந்தி போன்ற சகோதர மொழிகளில் ஓரங்க நாடகங்கள் தோன்றுவதற்கு பத்து ஆண்டுகளுக்கு முன்னரே குஜராத்தியில் இதன் துவக்கம் ஏற்பட்டுவிட்டது. மேலே குறிப்பிட்ட அமெச்சூர் நாடக மன்றங்கள், ரேடியோ ஆகியவற்றின் உதவி 1930க்குப் பிறகு எழுதப் பட்ட ஓரங்க நாடகங்களுக்குக் கிட்டியது. ஆனால் ஆரம்ப கால ஓரங்க நாடகங்களுக்கு இந்த ஆதரவு இல்லை. ஆரம்ப காலத்து படைப்புகளின் சிறப்பு அதன் எழுத்தாளர்களுடைய படைப் பாற்றலுக்கே உரியதாக இருந்தது. ஆஸ்கார், ஒயில்டு, கால்ஸ் வொர்த்தி, ஷா போன்றவர்களின் நாடகங்களைப் படித்ததின் பயனாக அதே பாணியில் நாடகங்கள் இயற்றப் பட்டன. குஜராத்தியில் முதலில் ஓரங்க நாடகங்கள் எழுதிய பட்டு பாயி உமர் வாடியா கூறுவது போல குஜராத்தி ஓரங்க நாடகங்கள் வடமொழி ஓரங்க நாடகங்கள் அல்லது பவாயி பாணியைச் சேர்ந்தவையல்ல, இவை மேனாட்டு ஓரங்க நாடகங்களின் ரகத்தைச் சார்ந்தவையாகும். இடைக்கால ஐரோப் பியாவில் ஏசுலீலைகள், நீதி நாடகங்கள் போனற பிரதான நாடகங்களுக்கு இடையில் மர்மம் மற்றும் அற்புத சாகசங்கள் நிறைந்த 'இன்டர்லூட்' என்று

வரும் குட்டி நாடகம், பிரதான நாடகத்திற்கு முன்வரும் 'கர்ட்டன் ரெய்சர்'ம் பின்னர் வரும் 'ஆஃப்டர்பீஸ்' என்ற முறையில் வரும் குட்டி நாடகத்தின் பாணியில் புதியபடைப்புகள் தோன்றின. அயர்லாந்தில் வீசிய இலக்கிய காற்றினால் இது பயனடைந்து, ஊட்டம் பெற்று, வளர்ச்சி அடைந்த இந்த குட்டி நாடக வடிவத்திற்கு 'லிட்டில்' மற்றும் 'ஆர்ட்' தியேட்டர்கள் பொதுஜன அங்கீகாரத்தையும் இலக்கிய அந்தஸ்தையும் அளித்தன. பட்டுபாயி உமர் வாடியா போன்ற துவக்க கால ஓரங்க நாடகாசிரியர்கள் ஓரங்க நாட கத்திற்கு ஒரு அங்கம் என்ற வரைமுறையை ஏற்றிருந்தனர். ஆனால் இந்த ஒரு அங்கத்தை நாலைந்து காட்சிகளாகப் பிரித்துக் கொண்டனர். நவீன அரங்கமும், யதார்த்தமாக இருக்க வேண்டுமென்ற எண்ணமும் இயல்பான, இயற்கையான காட்சி அமைப்புகளையும், ஜோடனைகளையும் ஏற்படுத்த உதவின. இம்மாதிரியான காட்சி ஜோடனைகளுக்கு அதிக செலவு பிடித்த தால், குறைந்த பட்சக் காட்சிகளில் நாடகத்தை நடத்துவது நடைமுறையில் அவசியமானதாகி விட்டது. இதனால் நாடகத்தின் கலை அம்சம் மங்கிக் கொண்டே வந்தது. மூன்று அங்க நாடகங்கள்கூட இரண்டு அல்லது மூன்று செட்டுகளில் முடிந்து போயின. ஓரங்க நாடகங்களின் சிறிய அமைப்பின் காரணமாக ஒரேசெட், ஒரே இடம், ஒரே காலத்தில் நிகழக்கூடியதாயிருக்க வேண்டுமென வலியுறுத்துவது, நாடகத்தை கட்டுக்கோப்புடன் எளிமையாக்க வசதியாக அமைந்தது. இக்காரணத்தினால் மேலைநாட்டு ஓரங்க நாடகங்கள், ஒரே இடத்தில் நிகழ்வனவாய், அதாவது, இடம், காலம், செயல் இம்மூன்றும் ஒருங்கிணைந்த முறையில் அமைக்கப்பட்டன.

துவக்க கால குஜராத்தி ஓரங்க நாடகாசிரியர்கள் இப்சனின் பாதிப்பிற்குட் பட்டிருந்ததால், அவர்கள் அங்கங்களை, காட்சி களாகப் பிரித்து, அவற்றின் சிறிய உருவத்தை தோற்றுவிக்க முயன்று தங்களுடைய திறமைகளைக் காட்டி னார்கள். ஆனால் 1930க்குப் பின்னர் வந்த ஓரங்க நாடகாசிரியர்கள் ஒரே களத்தில் நிகழும் மேலைநாட்டு நாடகங்களின் தொகுப்பான 'மேரியட்' 'மாயோர்கா' மற்றும் மூல நூல்களைப் படித்ததினால் தங்களது ஓரங்க நாடகங்களுக்கு அதே போன்ற வடிவத்தைத் தரலாயினர். குறைந்த பட்ச கதா பாத்திரங்களைக் கொண்டு நாடகத்தை இயக்கி, நாடகத்திற்கேற்ற சூழ் நிலையை, உருவாக்கும் உரையாடல்களை நேர்த்தியாக அமைத்து, கட்டுக் கோப்புடன்கூடிய நிகழ்ச்சிகளையும் உருவாக்கி, தங்களது படைப்புகளை, கலைத்தன்மையுடன் அளித்தனர். 1930க்குப் பிறகு வந்த ஓரங்க நாடகா சிரியர்களுக்கு, இந்தச் சிறப்புயல்புகள் எவ்வாறு கைவந்த கலையாயிற்று என்பதற்கு உதாரணமாக இத்தொகுதியில் தரப்பட்டிருக்கும் ஓரங்க நாடகங்கள் விளங்குகின்றன. ரேடியோ மற்றும் மின் வசதிகள், கலை நுட்பம் மிகுந்த ஒளி அமைப்புகளுக்கு வழிவகை செய்ததால் ஒரே காட்சியில் நாடகம் முழுவதும் நடத்த வேண்டுமென்ற நிர்ப்பந்தத்திலிருந்து ஓரங்க நாடகங்களை விடுவித்து, ஆக்ஷனுக்கு வாய்ப்பளித்தன. ஓரங்க நாடகங்களின், கலை வடிவ வளர்ச்சியின் கடைசி படி இது தான். நாடகக் கதையில் நிகழ்காலத்தை கடந்த

காலத்துடன் இணைப்பதற்காக சினிமா, மற்றும் ரேடியோவில் பயன்படுத்தப் படும் பிளாஷ்பேக் உத்தி, வேறுபட்ட கால, தேசவர்த்தமானங்களைக் காட்ட இன்றியமையாதது. வெவ்வேறு காட்சிகளை இயற்றாமல், நாடக அரங்கம், ஒளி, ஒலி அமைப்புகள் மற்றும் நவீன சாதனங் களின் மூலம், இன்றைய ஓரங்க நாடகங்கள் ஆசிரியர்கள் எவ்வாறு அமைக்கின்றனர் என்பதற்கு இத்தொகு தியில் மூன்று உதாரணங்கள் உள்ளன.

நேஷனல் புக் டிரஸ்டு, இந்திய மக்களிடையே ஒருமைப்பாட்டுணர்வைத் தோற்றுவிக்க பல்வேறு மொழிகளிடையே இலக்கிய பரிவர்த்தனை செய்து நூல்களை வெளியிடும் முயற்சியை மேற்கொண்டுள்ளது. இத்திட்டத்தின் கீழ் பிரபலமான சில ஓரங்க நாடகாசிரியர்களின் படைப்புகளை இத்தொகுதியில் தந்துள்ளோம். ஏனைய இலக்கியங்களை ஒப்பிடுகையில் நவீனமான ஓரங்க நாடகத்தை குஜராத்தி மொழி எழுத்தாளர்கள் அணுகியமுறை குஜராத்தி மொழியில் ஓரங்க நாடகம் பெற்றுள்ள வளர்ச்சி, வெவ்வேறு சூழ்நிலைகளல் குஜராத்தின் பின்னணி என்பனவற்றைப் பற்றிய முழுமையான உணர்வு ஏற்படுத்தும் நோக்கத்துடன் இத்தொகுதி தயாரிக்கப்பட்டுள்ளது. பரம் பரையாக கூறப்பட்டு வந்த கதைகள், வரலாறு இவ்விரண்டின் இணைப்பிலே உருவான, கூர்ஜர வீரப் பெண்மணிகளின் தீரமிகுந்த வாழ்க்கை வரலாற்றை நாடகக் கரு வாகக் கொண்டிருக்கும் படைப்பு முதலில் தரப்பட்டுள்ளது. முதல் நாடகமான 'மைனா கூர்ஜரி'யை ஆசிரியர் நாடோடி கர்பா நடனம், தனது கற்பனை இவ்விரண்டையும் கலந்து உருவாக்கியுள்ளார். இதன்பின் 'சிவ மோகினி'யின் புராணக் கதை நாற்பது ஆண்டு களுக்கு முன்னர் ஒரு இளம் நாடகாசிரியரால் படைக்கப்பட்டதாகும. 'ஜாக்டனுமோதி' (பனித் துளிகள்) என்ற இந்த ஓரங்க நாடகம் புராணக் கதையைக் கருவாகக் கொண்டிருந் தாலும் இன்றைய ஓரங்க நாடகத்துடன் ஒட்டியதாகும். 'ஹம்சா' ஓரங்க நாடகம் வாசகர்களை சம காலத்திற்குக் கொணர்கிறது. இதில் தாம்பத்திய வாழ்வின் ஒரு பிரச்னை நவீன மனவியல் தத்துவத்தின் அடிப்படையில் அலசப்பட் டுள்ளது. இந்நாடகமும் 'மைனாகூர்ஜரி'யும் ஐந்து காட்சிகளாகப் பிரிக்கப்பட் டுள்ளன. இது குஜராத்தி ஓரங்க நாடகங்களின் ஆரம்ப நிலையைக் காட்டுவ தாகும். ஹம்சாவிற்கு அடுத்த ஓரங்க நாடகம் 'எதிரொலி'. உமாசங்கர் ஜோஷியின் படைப்பு. இவர் தனது முதன் முயற்சியிலேயே, ஓரங்க நாடகக் கலையில் குறிப்பிடத்தக்க வெற்றியை அடைந்துள்ளார். இந்நாடகத்திலும் வரும் தம்பதிகள் திரைக்கு பின்னாலேயே நிற்கின்றனர். அவர்களின் பேச்சு, நடவடிக்கைகள், பற்றிய அனுமானங்களை எதிரொலிக்கிறது குழந்தைகளின் விளையாட்டு. பிழைப்பிற்காக, பம்பாய் வந்து, 'சால்' எனப்படும் குடி யிருப்பில் வாழும் கீழ்மட்ட நடுத்தரவர்க்கத்தினரின் நகரவாழ்க்கை, குழந்தை களின் விளையாட்டில் சித்தரிக்கப்பட்டுள்ளது. மக்களின் சுற்றுப்புறச் சூழ் நிலையின் சித்தரிப்பும் மனோ தத்துவமும் சேர்ந்து இந்நாடகத்துக்கு சமுதாயக் கண்ணோட்டத்தை அளிக்கிறது. இதுதான் இதன் சிறப்பாகும்.

யதார்த்த நோக்குடன் சமுதாயத்தை சித்தரித்து காட்டுவதுடன் அதன் நன்மை மற்றும் தீமைகளையும் மனித இயல்புகள் குண நலன்களின் யதார்த்த

மான போக்குகளையும் அடுத்து வரும் நான்கு ஓரங்க நாடகங்களில் திறமை யுடன் சித்தரிக்கக் காணலாம். இப்படைப்புகளில் உரையாடல்கள் கதா பாத்திரங்களின் இயல்போடு ஒட்டியதாக இருப்பதால் உயிரோட்ட முள்ளதாகி நாடகத்திற்கேற்ற சூழலை உருவாக்கியுள்ளது. இருள், ஒளியின் அமைப்புகளின் மூலம் நாடக அரங்கில் மண்ணுலகம், விண்ணுலகக் காட்சி களை இணைத்து இரண்டும் நெருங்கிவரும்படியாக அமைந்துள்ளது அடுத்த ஓரங்க நாடகம். சமூகத்தில் சேவைமனப்பான்மை உள்ளவர் பரந்த மனப் பான்மை கொண்டவர் என்று கருதப்படும் உயர் வர்க்கத்தின் திரைக்கு பின்னால் உள்ள உண்மையான நிலையை இதில் திரை விலக்கிக் காட்டி யிருக்கிறார் ஆசிரியர் ஜயந்தி தலால். பைபிளில் செல்வந்தர்களைக் குறித்து கூறப்பட்டுள்ள ஏசுவின் வாக்கை, நாடகத்தின் தலைப்பாக 'சோயினூ நாக்கு' (ஊசியின் காது) அமைந் திருப்பது மிகவும் பொருத்தமே. சுதந்திரத்திற்காகப் போராடிய நமது மக்கள் அந்த இயக்கங்கள் காரணமாக 1930லிருந்து 1942 வரையிலுள்ள கால கட்டத்திலும், சுதந்திரம் பெற்ற பின்னர் பிரிவினையின் காரணமாக எத்தகைய துன்பங்களையும், கொடுமைகளையும் சகித்துக் கொள்ள வேண்டியிருந்தது என்பதையும், கதைக்கருவாகக் கொண்டுள்ள மூன்று ஓரங்க நாடகங்களுக்கு ஒன்றாகவே இதில் இடமளிக்கப்பட்டுள்ளது. இம்மூன்று நாடகங்களின் தலைப்புகளும் பொருத்தமானவை என்பதை அதனை படிக்கும் வாசகர்கள் புரிந்து கொள்ளுவார்கள். கடைசி நாடகத்தின் பாத்திரங்கள், கதை நடக்கு மிடமும் வங்கத்தைச் சார்ந்ததாக இருப்பினும் அதை எழுதியவர் கல்கத்தாவில் வாழும் குஜராத்தியராவர்.

இத்தொகுதியின் பின்னணியாக குஜராத் மாநிலம் அமைந்துள்ளது எனினும், இந்நாட்டின் ஏனை மாநிலங்களிலிருந்து இது வேறுபட்டதல்ல. இத் தொகுதியிலுள்ள படைப்புகள், சகோதர மொழிகளில் மொழியாக்கம் செய்யப்பட்டு, அப்பிரதேசங்களை அடையும் போது, அங்குள்ள வாசகர்கள், இவற்றில் சித்தரிக்கப்பட்டுள்ள வாழ்க்கை, மற்றும் மக்கள் பால், நெருங்கிய பிணைப்பையும் ஒருமித்த உணர்வையும் உணர்வார்கள் என்பதில் ஐய மில்லை.

இதில் தொகுத்து தரப்பட்டுள்ள ஓரங்க நாடகங்களின் கலைத் தன்மையை, சிறப்பை, வேறு மொழிகளின் ஓரங்க நாடகங்களுடன் ஒப்பிட்டும் பார்க்க முடியும். இதனை ஆய்ந்தறிந்து பாகுபடுத்திப் பார்க்கும் பொறுப்பு, வாசக ரசிகர்களிடமே விடப்பட்டுள்ளது. இத்தகைய ஒப்பியல் விமரிசனங்களின் மூலம் இரு தரப்பினருக்கும் நல்ல பயனுண்டாகும். என்னை இதற்குப் பொறுப்பாக்கிய நேஷனல் புக் டிரஸ்டாருக்கு மிகுந்த நன்றியுள்ளவனாக இருக்கிறேன்.

**ஏ. எம். ராவல்.**

# மைனா கூஜரி

## ரசிக்லால் சோட்டாலால் பாரிக்

**பாத்திரங்கள்**

மைனா

ரூபா

அம்தி சித்தி

மைனாவின் மாமியார்

ஷோபா

வேறு சில பெண்கள்

இளவரசன்

ஹீரா

அந்தண இளைஞன்

மற்றும் கிராம மக்கள்

# காட்சி 1

(கிணற்றைச் சுற்றியுள்ள மேடையில் இடைப் பெண்கள் கூடி நின்று தண்ணீர் இறைத்துக் கொண்டிருக்கின்றனர். கிணற்றடியெங்கும் பெண்கள் கூட்டம். சிலர் தண்ணீர் எடுக்க வருகின்றனர். சிலர் போய்க் கொண்டிருக் கின்றனர். பெண்களின் கலகலப்பான பேச்சினால் சூழல் மிக இனிமையாகத் தோன்றுகிறது.

இடைப் பெண்களில் பெரும்பாலானவர்கள் இளம் பருவத்தினர். இடுப்பி லிருக்கும் குடத்தை இறக்கி வைத்துவிட்டு எதிரேயுள்ள சாலையைப் பார்த்த வாறு பாதையோரமாக அமர்ந்துள்ளனர். அருகில் மலர்கள் பூத்துக் குலுங்கும் மல்லிகைச் செடிகள். மலர்களைப் பறித்துக் கொண்டிருக்கும் ரூபா பாடிக் கொண்டிருக்கிறாள்.)

***ரூபா:*** *கிணற்றங்கரையிலே—மச்சான்*
*கொத்துக் கொத்தா மல்லிகை*
*கைநிறையப் பறிப்பதற்கே—மச்சான்*
*புதருங்கொஞ்சம் சரியுமோ?*

**அம்தி சித்தி:** ரூபா—எந்தக் காதலனுக்காக மலர் பறித்துக் கொண் டிருக்கிறாயடி!

**ரூபா:** அம்தி சித்தி! வயசானாலும் பரிகாசம் செய்யும் பழக்கம் இன்னமும் உன்னை விட்டுப் போகலே. ஏதோ பாடினால் அதன்படியே நடக்கணுமா என்ன?

**அம்தி சித்தி:** எங்க காலத்தில் நடந்ததையெல்லாம் கவிஞர்கள் கூட கற்பனை செய்து பார்க்க முடியாது. இந்தக் காலத்துப் பெண் நீ, உனக்கென்ன தெரியும்?

**ரூபா:** அம்தி சித்தி! நீ சின்னப் பெண்ணாக இருந்த பொழுது எந்தக் காதலனுக்காக பூப்பறித்தாயாம்?

**அம்தி சித்தி:** உனக்கென்ன அதைப்பற்றி! நாங்கள் என்னென்னமோ செய்தோம். அந்தக் காலமே வேறுதான். அதோபார் ரூபா, இடம் காலியாகி விட்டது! போ! குடத்தை நிரப்பு இந்தா, அப்படியே என்னுடைய குடத்தையும் நிரப்பி விடு. ராத்திரியிலிருந்து இடுப்பில் ஒரே வலி. தண்ணீர் இறைக்க முடியவிலலை.

(ரூபா, மலர்களை அம்தி சித்தியின் அருகே வைத்துவிட்டு நீர் இறைக்கச் செல்லுகிறாள். ஷோபா தண்ணீர் எடுத்துக்கொண்டு அம்தி சிதிதியை நோக்கி வருகிறாள்)

**அம்தி சித்தி:** ஷோபா! கொஞ்சம் உட்காரேன், ரூபா வந்ததும் நானும் வருகிறேன்.

**ஷோபா:** சித்தி, நான் கொஞ்சம் அவசரமாய் போக வேண்டும். குழந்தை அழுதால் மாமியார் என்னைத் திட்டி நொறுக்குவாள்.

**அம்தி சித்தி:** சரி, கிடக்கு, கொஞ்சம் உட்காரேன். உன் மாமியார் என்ன கொஞ்ச நேரம் கூட பிள்ளையைப் பார்த்துக் கொள்ள மாட்டாளா? நான் தான் நிறுத்திக் கொண்டேன் என்று சொல்லுகிறேன்.

*(ஷோபா குடத்தை இறக்கிவிட்டு பூப்பறித்துக்கொண்டே பாடுகிறாள்)*

*கிண்ணத்தில் குங்குமப் பூவைக் கலந்து வைத்துள்ளேன் காதலரே*

*வண்ணத்தில் வண்ண மது கலந்துவிட்டது என் காதலரே*

**அம்தி சித்தி:** என்னடி! யாரைப் பார்த்தாலும் காதலனைப் பற்றியே பாடுகிறீர்களே! ஏண்டியம்மா! கல்யாணம் சந்தோஷமாக இல்லையா! காதலனைத் தேடி அலைகிறீர்களே!

**ஷோபா:**(சிரித்துக் கொண்டே) ஏன் சித்தி! கட்டியவன் காதலனாக இருக்கக் கூடாதா என்ன? உங்கள் காலத்தில் கட்டியவனும் காதலனும் வெவ்வேறாகத் தானிருந்தார்கள், அப்படித்தானே சித்தி?

**அம்தி சித்தி:** அடி போடி! விடு அந்தப் பேச்சை! உன் மாமியார் காலமும் என் காலமும் ஒன்றுதானே! உன் மாமியாரிடம் போய்க் கேளு!

**ஷோபா:** (மலர்களைப்பறித்து அம்தி சித்தியின் முன்னே வைக்கிறாள்) அம்தி சித்தி! நான் பறித்த பூவையும், ரூபா பறித்த பூவையும் மாலையாகக் கட்டி, உனக்குத் தான் போடப் போகிறோம். நீதான் எங்களுக்குக் காதலன்.

(ரூபா வருகிறாள். ரூபாவிடம்) ரூபா. நாம ரெண்டு பேரும் பறித்த பூக்களை எல்லாம் மாலையாகக் கட்டி அம்தி சித்திக்குப் போட்டு விடலாம். அம்தி சித்தி தான் நம் காதலன்.

**அம்தி சித்தி:** போதும் விடு! இதோ பார், ரூபா என் குடத்தை நிரப்பினாள். நீ கொஞ்சம் அதை இங்கே கொண்டு வந்து கொடேன்.

**ரூபா:** (குடத்தை எடுக்கச் செல்லும் ஷோபாவிடம்) ஷோபா! எல்லாப் பெண்களும் என்ன பேசிக் கொள்கிறார்கள் தெரியுமா? உனக்கு?

**ஷோபா:** (சட்டென்று நின்று) என்ன விஷயம்?

**ரூபா:** தில்லி பாதுஷாவின் படைவீரர்கள் நம்முடைய கோட்டையிலிருந்து சற்று தூரத்திலே தோட்டத்தில் கூடாரம் அடித்திருக்கிறார்களாம்.

**ஷோபா:** இல்லேயடி! பாதுஷா நமது கோட்டையை முற்றுகையிட வந்திருக்கிறார் போலிருக்கிறது.

**ரூபா:** அப்படி இல்லை. காபூலிலிருந்து தில்லிக்குப் போகும் வழியிலே கூடாரம் அடித்து தங்கியிருக்கிறார்கள். அவ்வளவுதான்.

**அம்தி சித்தி:** (இருவரும் பேச்சில் மூழ்கியிருப்பதைக் கண்டு) அடியே ஷோபா! இப்பொழுது மட்டும் நேரமாகவில்லையா, இப்போ உன் மாமியாயர் சண்டை போடமாட்டாளா?

(ஷோபா அம்தி சித்தியின் குடத்தை எடுத்து வருகிறாள். மூவரும் ஒயிலாக அவரவர் குடத்தை எடுத்துக் கொண்டு ஒன்றாகப் புறப்படுகின்றனர்)

**ரூபா:** அம்தி சித்தி! நீ தில்லி பாதுஷாவின் கூடாரத்தைப் பார்த்திருக் கிறாயா?

**அம்தி சித்தி:** நான் எத்தனையோ பார்த்திருக்கிறேன். ஆனால் எங்கள் காலமே வேறு.

**ஷோபா:** (கொஞ்சலாக ஆனால் பயம் நிறைந்த குரலில்) அம்தி சித்தி அப்படியானால் நாங்களெல்லாம் பார்க்க முடியாதா?

**அம்தி சித்தி** :ஊஹும். எங்க காலமே வேறே— அந்தக் காலத்தில்.

**ரூபா:** (சற்றே பயம் தெளிந்தவளாய்) வெட்கத்தை விட்டு விட்டால் நாங்களும் தான் போக முடியும். ஆனால் போகப் போவதில்லை.

(எதிரே தண்ணீர்க் குடங்களுடன் மூன்று பெண்கள் ஒரே வரிசையில் வருகின்றனர். அவர்களில் ஒருத்தி பாடிக்கொண்டே வருகிறாள், அவர் களிடையே அழகே உருவான மெல்லியலாள் மைனாவும் இருக்கிறாள். இரு புறத்திலிருந்து வருபவர்களும் எதிரெ திரே சந்திக்கின்றனர்) மைனா? பாதுஷாவின் பரிவாரங்கள் வந்திறங்கி இருக்கிறதாம்...தெரியுமா?

(எல்லாரும் நிற்கின்றனர்)

**மைனா:** ஆமாம்— உனக்கு யார் சொன்னது?

**ரூபா:** கிணற்றடியில் பெண்கள் பெண்கள் பேசிக் கொண்டார்கள் உனக்கு எப்படித் தெரிந்தது.

**மைனா:** என் சின்ன மைத்துனன். அவன் குதிரை சவாரி செய்யப் போன போது அங்கிருந்து இந்த சேதியைக் கொணர்ந்தான். பாதுஷாவின் பாசறை பார்க்க வேண்டிய காட்சியாம்.

**ஷோபா:** அவன் உனக்கு அருமை மைத்துனன் ஆயிற்றே. நீ பார்க்கப் போவாயா?

**அம்தி சித்தி:** இந்தக் காலத்துப் பெண்கள் அங்கெல்லாம் போகக் கூடாது. எங்கள் காலம் வேறு.

**மைனா:** அம்தி சித்தி— நாங்களெல்லாம் ஏன் போகக் கூடாது? நான் அவசியம் பார்க்கப் போகிறேன்.

(தன்னுடனிருக்கும் பெண்களிடம்) என்னடி சுகா? நீங்க எல்லாம் போகப் போறீங்க இல்லே! ஏண்டீ துல்ஹா!

**ரூபா-ஷோபா:** அப்படீன்னா நாங்களும் தான் வருவோம்!

(மகிழ்ச்சியின் மிதப்பில் தலை மீது குடமிருந்தாலும் ஒயிலாக உடலை அசைத்து ஆடிய வண்ணம்—பாடுகிறார்கள்)

"வாங்க வாங்களடி பெண்டுகளா! போய் வரலாமே சோக்காகவே!"

**அம்தி சித்தி:** அடியே! குட்டீங்களா! குடத்தை வழியிலேயே வெச்சுட்டுப் போயிடுவீங்களா! அந்த கூடாரத்தில் உங்களுக்கு என்ன வேலை? அதில் வந்து...

**ஷோபா:** சுகா! துல்ஹா! (சித்தியை அழகு காட்டிய வண்ணம்) அதில் வந்து. .அதிலென்ன இருக்கிறதாம். அம்தி சித்தி! நாங்க எல்லோரும் பார்க்கத்தான் போகிறோம்.

**அம்தி சித்தி:** (எரிச்சலுடன்) நல்லாப் போய்ப் பாருங்க! நானும் தான் பார்க்கிறேன் எப்படிப் போறீங்கன்னு? இப்பவே போய் உங்கள் மாமியார் களிடம் சொல்லுகிறேன்.

**ரூபா-ஷோபா:** (அம்தி சித்தியின் காதில் விழும்படியாக) நீங்க உங்கள் வழியைப் பார்த்துக் கொண்டு போங்க.

"மைனா நீபோய் தண்ணீர் எடுத்துக் கொண்டு வா. அது வரையிலும் நாங்க இங்கே நிற்கிறோம்.

**அம்தி சித்தி:** (இளம் பெண்கள் வயதைப் பற்றி கொஞ்சமும் கவலை யில்லாமல் இருப்பதைக் கண்டு சற்றே கோபத்துடன்) அடியே! இதற்குப் போய் கோபித்துக் கொள்வானேன்! உங்க புருஷன்மார் போகச் சொன்னால் போங்களேன் தாராளமாக. போயி பாதுஷாவுக்கு ராணிகளாயிடுங்க. எனக் கென்ன வந்தது? எவனோ வரப் போகிறான் போலிருக் கிறது அதற்காகத் தான் தனியாகக் காத்துக் கொண்டு நிற்கிறீர்கள்!

**மைனா:** (அம்தி சித்தி பெருத்த இடையூறு விளைவித்து விடுவாளோ என்ற *அச்சத்துடன் சாமர்த்தியமாக)*

"அம்தி சித்தி! அப்படியெல்லாம் ஏன் சொல்லுறே! நீ வேண்டா மென்றால் நாங்கள் போகவா போகிறோம்? ஆனால அம்தி சித்தி! நீயும் என் மாமியாரும் அன்னிக்கு ஒரு நாள் பாதுஷாவின் கூடாரத்தப் பார்க்கப் போயிருந்தீங்க இல்லே? (அம்தி சித்திதான் அப்படிப்பட்ட காரியமே செய்ததில்லை என்பது போன்ற பாவனையில் முகத்தை வைத்துக் கொள்ளுகிறாள்) அட! என்ன இது! நீங்க தானே சொன்னீங்க. நீங்களும் என் மாமியாரும் பாதுஷாவின் கூடா ரத்தப் பார்க்கப் போனீங்கன்னு... நீங்க ரெண்டுபேரும் எப்படி போனீங் கன்னு சொல்லித்தானாக வேண்டும். இதோ குடத்தை நிரப்பிக் கொண்டு உங்கள் வீட்டுக்கே வருகிறேன். பிறகு எப்படி சொல்லாமலிருப்பீங்களாம்? (ரூபா-ஷோபாவிடம்) போங்கடி! அம்தி சித்தியை வீடு வரையிலும் கொண்டு போய்விட்டு விட்டு வாங்க. (அவர்களுக்கு ஜாடை காட்டுகிறாள்.)

(நீரெடுக்க வரும் பெண்களின் ஒரு கும்பல் வருகிறது. ஒரு கும்பல் போகிறது. இரு கோஷ்டிகளும் தாளகதிக்கு ஏற்ப நடந்து செல்லுகின்றனர். மைனா பாடுகிறாள்)

(பாதுஷாவின் கூடாரத்தைக் காணச் செல்லப் போகிறோம் என்ற மகிழ்ச்சியில் ஆடுகிறாள்.)

*"வந்தவர் யாரோடீ—சகியே*
*காபூலை வெற்றி கொண்டு*
*வந்தவர் யாரோடீ—சகியே*
*தோட்டத்தில் தங்கியவர் சொல்லு சகியே*
*தில்லிக்கு பாதுஷாவா மந்திரியா*
*பாதுஷா தான் ஆனாலும் மந்திரி தான் ஆனாலும்*
*பார்க்கப் போவேனே நானே*
*தன்ன...ன்னா...னா*

# காட்சி 2

மைனாவும் அவள் தோழிகளும் பாதுஷாவின் முகாமைக் காணப் புறப்படுகின்றனர். காலை வேளை. ஏழு அல்லது எட்டு மணி இருக்கும். பெண்களின் முகத்தில் வழி நடந்த களைப்புத் தெரிகிறது. இளம் சூரியனின் செவ்வொளியில் அவர்களது முகங்கள் குங்கும சிவப்பாய் சிவந்துள்ளன. அவர்களது ஆடை அணிகளும் அலங்காரமும் தூசி படிந்திருந்தாலும் அவர்களது வனப்பு அலாதியான சோபையுடன் ஒளிர்கின்றது.

எல்லா இடைப் பெண்களும் தயிர் விற்கப் புறப்பட்டுள்ளனர். எல்லாருடைய தலையின் மீதும் தயிர்க் கலங்கள். மையாவின் தலையின் மீது சிவப்பு நிறக் கலம். மைனா பாடலின் ஒரு அடியை எடுத்துக் கொடுக்க மற்றவர்கள் உடன்பாடுகின்றனர்.

**மைனா:**

*விழித்தெழுந்தது கூர்ஜரதேசம்— இடையப் பெண்ணே*
*ஆடிப்பாடி வாழ்த்துவோமே கூர்ஜரப் பெண்ணே!*
*ஆரஞ்சு வண்ணப் பாகை அணிந்தவன்*
*அவன் தான் கூர்ஜர வீரனடி, கூர்ஜரப் பெண்ணே*
*தலைப்பாகையணிந்த வீரனவன்...*
*மாமரத்தில் பூத்த மாம்பிஞ்சு போல்*
*கூர்ஜர வீரனின் இடுப்பில் மின்னுதுபார் கச்சம்,*
*இனிப்பும் புளிப்பும் கலந்த மாம்பழம் போலவே*
*கூர்ஜரனின் வீரமது ஒளிருது பார்— கூர்ஜரப்பெண்ணே!*
*இளம் காற்று இனிதாக வீசுவது போலவே*
*எவருக்கும் கட்டுப்படாத வீரனவனனே*
*சுழல் காற்றது வீசியடிப்பதுபோலவே*
*கூர்ஜரவீரன் சுழன்றோடி வருவானே —கூர்ஜரப் பெண்ணே!*
*உன்னுடன் கை கோர்த்த வனும் வருவான்*
*அக்கினியை வலம் வருவான்—கூர்ஜரப் பெண்ணே!*

**ரூபா:** மைனா! பாடலை ஏன் பாதியிலேயே நிறுத்தி விட்டாய்? பாடி முடித்து விடு. கூடாரம் இன்னும் தூரத்தில் உள்ளது.

**மைனா:** இதற்கு மேலே எனக்கு நினைவில்லை.

**ரூபா:** மைனாவிற்கு பாட்டு மறக்குமா என்ன? இது சாத்தியமா?

**மற்ற இடைப் பெண்கள்:** இது சாத்தியமேயில்லை

**ரூபா:** (மைனாவிற்கு முன்னால் சென்றவள் பின்னால் திரும்பி அவள் முகத்தை ஏறிட்டுப் பார்த்து) மைனா! ஏன் இத்தனை தாமதமாகிவிட்டது? ஏதாவது கேட்டாயா?

**மைனா:** ஒன்றும் கேட்கவில்லையே! வாங்க, அந்த மா மரத்தினடியில் தயிர்க் கலங்களை இறக்கிவிட்டு கொஞ்சம் இளைப்பாறலாம்.

(மாமரத்தினடியில் தயிர்க் கலங்களை இறக்குகின்றனர். எல்லோரும் சேலைத் தலைப்பினால் முகத்தைத் துடைத்துக் கொள்ளுகின்றனர். ஒவ்வொரு பெண்ணும் ஒரு கடாரியும் விஷம் நிறைந்த சிறிய சிமிழையும் (கற்புச் சிமிழ்) தங்களது ஆடையில் ஒளித்து வைத்துக் கொள்கின்றனர். மைனா மட்டும் சற்று தனியே விலகி நின்று, கூடாரம் இருக்கும் திசையில் பார்த்துக் கொண்டிருக் கிறாள். ரூபா, மற்றும் ஏனைய இடைப் பெண்கள் சுற்றம் முற்றும் நின்று கொண்டிருக்கின்றனர்.)

**ரூபா:** மைனா? நீ இருப்பதால்தான் நாங்களெல்லோரும் தயிர் விற்கும் சாக்கில் பாதுஷாவின் கூடாரங்களைப் பார்க்க வந்து விட்டோம். அட! இதென்ன! உன் முகம் ஏன் இப்படி வாடி இருக்கிறது?

**ஷோபா:** மைனா? நீ வரும்பொழுது உன் மாமியார் ஏதேனும் கூறினாளா?

**ரூபா :** இல்லை, ஏதாவது ஞாபகம் வந்துவிட்டதா?

**மைனா:** (உணர்ச்சி மிகுதியினால் கண்ணீர் விடுகிறாள்.) என் மாமியார் குத்தலாகப் பேசினாள். அதற்காக நான் கூடாரத்தைப் பார்க்க போகாமல் இருக்க வேண்டுமா என்ன?

**ஷோபா**: என்ன சொன்னாள் உன் மாமியார்?

**மைனா:** மைனா பாதுஷாவின் ராணி ஆகப் போகிறாள். அதற்காகத்தான் கூடாரமடித்திருக்கும் இடம் தேடிப் போகிறாள்' என்றாள்.

**ரூபா:** இதற்கு நீ என்ன சொன்னாய்?

**மைனா**:' உங்க பிள்ளையை இப்படி அவமதிக்கலாமா'ன்னு கேட்டேன்.

**ரூபா** : ஊம்... அப்புறம்?

**மைனா:** கடுமையாக மீண்டும் அதையே சொன்னாள். நான் வந்து,

**ஷோபா**: என்ன சொன்னாய்?

**மைனா:** ஒன்றும் சொல்லவில்லையே!

**ரூபா-ஷோபா:** இருந்தாலும்...

**மைனா:** நானும் விடவில்லை, நன்றாகக் கேட்டேன். "உங்க பிள்ளைக்கு வீரமிருந்தால் நான் ஏன் பாதுஷாவுக்கு ராணியாக வேண்டும்? பாதுஷா என்னைச் சிறைப்பிடித்தால் அவர் என்னை மீட்டு வரமாட்டாரா? அல்லது என் மைத்துனன் ஹீரா இருக்கிறாரே. அவர் என்னை மீட்டு வருவார். என்றேன். (சில நிமிடங்களுக்குப் பிறகு சற்றே தீவிரத்துடன்) மாமியாரின் ஏச்சுப் பேச்சுக்களை நான் பொருட்படுத்தவில்லை. ஆனால் இந்த வாக்கு வாதங்களுக்கிடையே நான் சீவிச் சிங்காரித்துக் கொள்ளும்போது ஒரு அபசகுணம் நேர்ந்து விட்டது. அது இப்பொழுது நினைவு வந்தது அவ்வளவு தான். பரவாயில்லை. வாங்க போகலாம்.

(மைனா தனது ஆடைகளை சரிசெய்து கொண்டு கடாரியையும் கற்புச் சிமிழையும் வெளியிலே எடுக்க முற்படும்போது தான் அவ்விரண்டையும் வீட்டிலேயே மறந்து விட்டது நினைவு வருகிறது)

**மைனா:** ரூபா! என் கடாரியையும் கற்புச் சிமிழையும் வீட்டிலேயே மறந்து வைத்து விட்டு வந்து விட்டேன். அபசகுணம் பலிக்க ஆரம்பித்து விட்டதடி! (சற்றுப் பொறுத்து) ரூபா! நீங்க எல்லோரும் சென்று பாதுஷாவுடன் கூடாரங்களையெல்லாம் பார்த்து விட்டு வாருங்கள். தயிரையும் விற்று விட்டு வாருங்கள்.

**ரூபா-ஷோபா:** மைனா... நீ...

**மைனா:** இங்கேயே மாமரத்தின் நிழலிலிருந்து கொண்டு உங்களுக்காககத் காத்திருப்பேன்.

**ரூபா:** அதெப்படி முடியும்? உனக்காகத்தானே நாங்களெல்லோரும் இங்கு வந்திருக்கிறோம். நீ வரமாட்டேன் என்றால்?...

**மைனா:** நான் வரமாட்டேன் (சற்றே ஆவேசத்துடன் வானத்த ஏறிட்டு நோக்கியவாறு) என் கடாரி, கற்புச் சிமிழ் இரண்டையும் விட்டு விட்டு வந்து விட்டேன். இந்த இரண்டில் ஏதாவது ஒன்று என்னிடமிருந்தால் கூட நான் கட்டாயம் வருவேன் (சற்றே வேகம் தணிந்து) ரூபா! நீங்களெல்லாரும் செல்லுங்கள். ரூபா! நீ என்னுடைய தயிரையும் விற்று விட்டு வாடி! கலம் ரொம்ப கனமில்லை...என் நல்ல தோழியல்லவா நீ!

(இடைப் பெண்கள் மனம் வருந்துகிறார்கள். அவர்களது உற்சாகம் தணிந்து விடுகிறது.)

**ஷோபா:** மைனா, நீ இல்லாமல் நாங்கள் எப்படியடி போக முடியும்?

**மைனா:** என் மீது ஆணை—நீங்கள் கட்டாயம் போக வேண்டும். போய்ப் பாருங்கள் திரும்பி வந்து எனக்கு எல்லாம் சொல்லுங்கள். ஊரில் யாருக்கும் நான் பாதுஷாவின் முகாமை பார்க்கவில்லை என்று தெரியப்போவதில்ல. பிறகு எப்பொழுதாவது போய் கொள்கிறேன். அப்பொழுது கடாரியையும், கற்புச் சிமிழையும் மறக்க மாட்டேன். இந்த கூடாரம் என்ன ஓடி விடவா போகிறது? நீங்கள் புறப்படுங்கள். என் மீது ஆணை! ஊம். புறப்படுங்கள்.

(ரூபா மைனாவின் தயிர்ப்பானையையும் எடுத்துக் கொள்ளுகிறாள். எல்லா இடைப் பெண்களும் மெல்ல மெல்ல பாதுஷாவின் கூடாரங்களை நோக்கிச் செல்லுகின்றனர்.

மைனா மகிழம்பூ மரத்தினடியிலே நின்று கொண்டு தனது தோழிகள் செல்லுவதை பார்க்கிறாள். தோழிகள் கண்ணுக்கு மறைகின்றனர். இதன் பின்தான் மகிழம்பூவின் நறுமணம் அவளது கவனத்தை ஈர்க்கின்றது. மெய் மறக்கச் செய்யும் அதன் நறுமணம் உடலைப் புல்லரிக்கச் செய்கிறது. கொத்துக் கொத்தான மலர்களடர்ந்த ஒரு கிளையை மைனா பார்த்துக் கொண்டே இருக்கிறாள். மீண்டும் கூடாரங்கள் இருக்கும் திசையை நோக்குகின்றாள்.

**மைனா:** (தனக்குள் முணுமுணுக்கின்றாள்) கடாரி, கற்புச் சிமிழ் இரண்டையுமே விட்டு விட்டு வந்து விட்டேனே!

(கூடாரங்களிருக்கும் திசையிலிருந்து ரூபா தன்னுடைய சிவப்பு நிற தயிர்க் கலத்துடன் வருவதைப் பார்க்கிறாள். ஒரு துருக்கியப் படைவீரனும் உடன் வருகிறான். மைனா பிரமித்து நிற்கிறாள். சற்று தூரத்தில் அந்த துருக்கியனும் ரூபாவும் நின்று விடுகின்றனர். ரூபாவை தனக்கு முன்னால் செல்ல விட்டு அந்த துருக்கியன் மைனாவைப் பரவசத்துடன் பார்க்கிறான். பின்னர் இருவரும் மீண்டும் கூடாரத்திற்குள் மறைந்து விடுகின்றனர்.

சற்று நேரத்திற்குப் பின்னர் ஓர் இளைஞன் குதிரையின் மீது ஏறிக் கொண்டு சிவப்புத் தயிர் கலத்துடன் தன்னை நோக்கி வருவதை மைனா பார்க்கிறாள். அந்த இளைஞன் குதிரையிலிருந்து இறங்கி தயிர்ப்பானையுடன் அவளை நோக்கி வருகின்றான். எளிய உடையில் இருந்தாலும் அவ் விளைஞன் அரசனுக்குரிய கம்பீரத்துடன் மைனாவைப் பார்க்கின்றான். தலைக்கு மேல் ஆபத்து வந்து விட்டதை உணர்ந்தாலும் மைனா தன்னை நிதானப் படுத்திக் கொண்டு மிடுக்கான தோற்றத்தில் வனப்புடன் நிற்கிறாள்.

**மைனா**: (தனக்குள் படபடத்துக் கொள்ளுகிறாள்) கடாரியும், கற்புச் சிமிழும் என்னிடம் இல்லையே!

**இளவரசன்**: இந்தப் பானை உன்னுடையதா?

**மைனா**: ஆமாம்! பாதுஷா!

**இளவரசன்**: (புன் சிரிப்புடன்) ஓ—சிவப்புப்பானையின் சொந்தக் காரியே! நீ உனது வருகையினால் எங்களது கூடாரத்துக்கு ஏன் அழகூட்ட வில்லை?

**மைனா**: பாதுஷா அவர்களே! நான் மிகவும் களைத்துப் போயி ருந்தேன். அதனால்தான் தயிரை விற்று வர என் தோழிகளை அனுப்பினேன். தயிரை விற்க வேண்டும் அதுதானே எங்கள் வேலை.

(மைனாவின் கரம் கடாரியையும் கற்புச் சிமிழையும் வீணே துழாவு கின்றது)

**இளவரசன்**: தயிர் விற்பதுதான் உன் வேலையென்றால் நீ ஏன் வர வில்லை? கேட்ட பணம் கிடைத்திருக்குமே.

**மைனா**: பாதுஷா அவர்களே! எனக்கு அதிகப் பணம் வேண்டும் என்ப தில்லை. எல்லோருக்கும் என்ன தரப்படுகிறதோ, அதுவே போதுமானது. தாங்கள் தயிரை எடுத்துக் கொண்டிருந்தால் என் பானையை என்னிடம் தந்து விடுங்கள்.

**இளவரசன்**: பானை காலியாகத்தானிருக்கிறது. ஆனால் பணம் பெற்றுக் கொள்ள கூடாரத்திற்கு வருவாய் அல்லவா? அதன் விலையென்ன? சொல்லு!

**மைனா**: எல்லோருக்கும் என்ன கொடுத்தீர்களோ: அதையே என் தோழி யிடம் கொடுத்து விடுங்கள்.

**இளவரசன்**: இடைப் பெண்ணே! எல்லோருடனும் உன்னை எப்படி ஒப்பிடமுடியும்?

**மைனா**: இளவரசே! எல்லோருடைய தயிரும் ஒரே மாதிரிதான்.

**இளவரசன்:** (ஒரடி முன்னே வந்து) தயிர் ஒரே மாதிரி தானிருக்கும். ஆனால் இடைப் பெண்கள் ஒன்றுபோலில்லையே?

**மைனா:** (ஒரடி பின்னே நகர்ந்து) இளவரசே! தாங்கள் மனிதனா அல்லது அரக்கனா?

**இளவரசன்:**(இத்தகைய பதிலைக் கேட்டு பழக்கமோ, எதிர்ப்பார்ப்போ இல்லாததால்) ஏய்! பெண்ணே! எனக்கு பதில் கூற நீயார்?

**மைனா:** நாங்கள் இடைக்குலத்துப் பெண்கள்.

**இளவரசன்:** (காம வசப்பட்டிருந்ததால் அவமதிக்கப்பட்ட போதிலும் மைனாவின் தன் மானம் நிறைந்த சொற்கள் அவனுக்கு கவர்ச்சியூட்டியதால்) உன் பெயரென்ன?

**மைனா:** மைனா கூஜாரி.

**இளவரசன்:** நீ தயிர் விற்க மட்டும் வரவில்லை. எங்களது கூடாரத்தை—பாசறையை காணவும் வந்திருக்கிறாய் என்று உன் தோழிகள் கூறினார்களே. எங்களது கூடாரம் காண வேண்டியதுதான்.

**மைனா:** (கரங்கள் கடாரியைத் துழாவுகின்றன) உங்களது கூடாரம் காணத் தகுந்ததா இருக்கலாம். ஆனால் எங்களது கோட்டைதான் எங்களுக்குப் பிரியமானது.

**இளவரசன்:** இடைச்சி மைனாவே! களைப்பாக நீ இருந்தால் பல்லக்கை வரவழைக்கின்றேன். நீ யானை பார்த்திருக்கிறாயா?

**மைனா:** இடைச்சிகளான எங்களுக்கு யானையினால் என்ன பயன் இளவரசே! எங்களுக்கு வேண்டியதெல்லாம் எட்டு, பத்து சேர் பால்தரும் எருமைகள்தான். பர்தாவிலிருக்கும் பெண்களுக்குத்தான் பல்லக்கு வேண்டும். காற்றிலே சிறகடித்துப் பறக்கும் பறவைகளான இடைப் பெண்களுக்கு அது தேவையில்லை.

**இளவரசன்:** என்னுடைய அந்தப் புரத்தில் நிறைய இந்துப் பெண்கள் இருக்கிறார்கள்.

**மைனா:** (சீற்றம் வந்த போதிலும் தனது ஆவேசத்தைக் கட்டுப் படுத்திக் கொண்டு) இளவரசர் அவர்களே! தாங்கள் பாதுஷா, நாங்கள் தங்களது குடிமக்கள். குடிமக்களின் கடும் சொற்களை தாங்கள் கேட்டுக் கொள்ள வேண்டுமா என்ன? அரக்கன் என்று கூறினேனே அது போதாதா?

**இளவரசன்:** அதனாலென்ன? எல்லா மனிதனும் அரக்கன் தான்.

**மைனா:** நீர் அரக்கனாக இருக்கலாம். இடையர்கள் அரக்கர்கள் அல்ல.

**இளவரசன்:** மைனா ராணி! கூஜர்களிடம் அப்படியென்ன மோகம் உனக்கு! என்னுடைய அரண்மனைக்கு வந்தால் எல்லாவற்றையும் மறந்து விடுவாய். எல்லா இந்துப் பெண்களும் அப்படித்தான் மறந்து விடுகிறார்கள்.

**மைனா:**( தன் வயமிழந்தவளாக) இளவரசே! இச்சமயம் நான் தனியாக இருக்கிறேன். ஆனால் நான் தனியாக இல்லை. எனக்குப் பின்னால ஒன்பது லட்சம் கூஜர்கள் இருக்கிறார்கள். (ஆவேசம் அடைகிறாள். ஏதோ தேவியின் ஆவேசம் வந்து விட்டது வோல)

*"அறிந்து கொள், தனியொருத்தி என் பின்னே*
*உள்ளனர் ஒன்பது லக்ஷம் கூஜர்கள்)*

(தேவியின் ஆவேசம் வந்தவள் போல் இந்த வரிகளைக் கூறிக் கொண்டு நடனம் செய்கிறாள். இளவரசன் இக்காட்சியைக் கண்டு பிரமித்து நிற்கிறான். ஆனால் இந்துக்களுக்கு இவ்வாறு ஆவேசம் வருவது பற்றி அறிந் திருந்ததால் அவனுக்கு அச்சம் ஏற்படுவதில்லை. மைனா விரைவில் சாந்த மடைகின்றாள். ஆனால் விழிகள் மேலே செருகியுள்ளன)

**இளவரசன்:** (சிரித்துக் கொண்டே) இளவரசர்களுக்கு எந்த பயமுமில்லை. உலகத்திலுள்ள அழகிகளெல்லாம் எங்களுடையவர்கள்.

(மைனாவின் கரம் கடாரியைத துழாவுகின்றது.) இதைக் கண்டு என்ன தேடுகிறாய். மைனா கூஜரி?

**மைனா:** கடாரி.

**இளவரசன்:** (சற்றே பின் நகர்ந்து) எதற்காக?

**மைனா:** உனக்குதான் எதனிடமும் பயமில்லையே? என்னுடைய கடாரியை வைத்து விட்டு வந்து விட்டேன். இதனால்தான் உம்முடைய கூடாரத்திற்கு நான் வரவில்லை. (மீண்டும் ஆவேசத்துடன்) உனது கடாரியைக் கொண்டு வா! பிறகு உம்முடைய கூடாரத்தைப் பார்க்க வருகிறேன். காட்டுகிறேன். காளியின் தாண்டவத்தை!

(இளவரசன் யோசிக்கிறான்)

**மைனா:** ஏன்! என்ன யோசிக்கின்றீர்? கடாரியைக் கொடுக்க பயமாக இருக்கிறதா? அல்லது உமது கூடாரத்திற்கு கூஜரி வருவது பற்றி அச்சமாக உள்ளதா?

**இளவரசன்:** ஏய்! பெண்ணே! வாய் ரொம்ப துடுக்காகப் பேசுகிறதே?

**மைனா:** வாய் மட்டுமல்ல... கையும் பிரமாதமாக வேலை செய்யும் கொடு கடாரியை...

(மைனா ஆவேசத்துடன் இளவரசனை நோக்கிப் பாய்கிறாள். இளவரசன் சட்டென்று பின்னே நகர மைனா கீழே வீழ்ந்து விடுகிறாள். இளவரசன் உடனே அவளை எடுத்து குதிரையின் மீது வைத்துக் கொண்டு பாசறையை நோக்கி விரைகிறான்.

## காட்சி 3

*(கிராமத்தில் நிலாவீசும் அமைதியான இரவு. இளைஞர்கள் விளையாடிக் கொண்டிருக்கின்றனர். கிட்டிப்புள் விளையாட்டை முடித்து விட்டு இளைஞர் களின் குழு நடனம் ஆட ஒன்றாகக் கூடுகின்றது. யாவரும் ஹீராவை எதிர் நோக்கிக் காத்திருக்கின்றனர். ஹீரா வருகின்றான்)*

**இளைஞன்:** ஹீரா! ஏனிவ்வளவு நேரமாகிவிட்டது,

**ஹீரா:** அண்ணியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். என்ன செய்தி கொண்டு வருகிறாள் பார்க்கலாம் என்றிருந்தேன். ஆனால் இதுவரை அண்ணியையோ, அவளது தோழிகளையோ, கண்ணிலேயே காணோம். ஊரில் எல்லோருக்கும் ஒரே கவலையாக இருக்கிறது. அண்ணா மிகவும் பதட்டமடைந்துள்ளார்.

**இளைஞன்:** உன் அண்ணாவின் வழக்கமே அதுதானே! சரி— நீ ராஸ் நடனத்தை துவங்கு.

**ஹீரா :** சரி...துவங்கு.

(யாவரும் வட்டமாக நின்று பாடிக் கொண்டே ஆடுகின்றனர்)

*துள்ளி எழுந்தான் அபயசிங், எழுந்து நின்றான் வீர்சிங்.*
*திரண்டெழுந்தனர் ஐம்பத்திரண்டு வீரர்கள்*
*ஒன்பது லக்ஷம் கூஜர்கள் வாளேந்தினர் என் தாயே*
*ஒன்பது லக்ஷம் கூஜர்கள் துள்ளி எழுந்தனர்.*
*தாயே! எங்களுக்கு களங்கத்தை ஏற்படுத்திவிடாதே*
*மாசு ஏதும் படியச் செய்துவிடாதே!*
*தாயே உன் தாளடியில் சிரம் கொய்து வைப்போம்.*
*கொய்து வைப்போம் எங்கள் சிரத்தை.*
*மாற்றான் நிலம் கொளமாட்டோம் தாயே*
*மாற்றானின் நிலமது கொளமாட்டோம்*
*மகன் பிறந்துள்ளான் உன் வாசலில் தாயே*
*மகன் பிறந்துள்ளான் உன் வீட்டில்*
*குலத்திற்கு களங்கம் ஏற்பட்டால் தாயே*
*குலத்திற்கு களங்கம் விளைந்து விட்டால்*
*குருதி கொண்டு உன் பாதத்தை கழுவுவோம் தாயே*
*குருதி கொண்டு துடைப்போம் நின் பாதமதை*
*குதிரை மின்ன, சினம் பொங்கும் பார்வை மின்ன,*
*வானமும், இடி முழக்கமும் மின்னலிட*
*வானமும், இடி முழக்கமும் மின்னலிட தாயே*
*வானமும், வையமும் அதிர்ந்திட*
*மேகம் போல் குருதி பொழிய என் தாயே*
*மேகம் போல் குருதி மழை பெய்திட*
*போர் கோலமது பூண்டு என் தாயே*
*போர் கோலமது பூண்டு.*
*வாழ்வு அல்லது சாவு எனப் பொங்கி எழுந்து என் தாயே*
*செத்து மடியவும் துணிவோம் என் தாயே*
*களங்கம் ஏதும் தந்துவிடாதே தாயே*
*மாசு படியச் செய்துவிடாதே தாயே*

(கடைசி அடியைப் பாடிக் கொண்டிருக்கும்போது அந்தணன் ஒருவன் வேகமாக ஓடி வருகிறான். அவனுக்கு மூச்சுரைக்கின்றது)

**அந்தணன்:** சொல்லுங்கள்! சந்தாஜியின் வீடு எங்கே இருக்கிறது? ஹீராஜி எங்கே இருக்கிறான்?

(ஒருவர் காதிலும் விழுவதில்லை)

அட, போரிடுவது பற்றிப் பெரிதாகப் பேசுகிறீர்களே, போரிட வந்திருக் கிறானே அவனைப் பற்றிக் கூறுவதைக் கேட்க மாட்டேன் என்கிறீர்களே ஹீரா எங்கே இருக்கிறான்?

(அந்தணன் போட்ட கூச்சல் அவர்களுடைய கவனத்தைக் கவர்கிறது. இளைஞர்கள் இங்குமங்குமாய் சிதறி நிற்கின்றனர். ராஸ் நடனத்துக்குத் தடை ஏற்படுகிறது. யாவரும் அந்த அந்தணனைச் சூழ்ந்து கொள்கின்றனர்.)

**ஹீரா:** இதோ இருக்கிறேன்! என்ன விஷயம்? என்ன வேண்டும்?

**அந்தணன்:** அட, உன்னிடம் எனக்கென்ன வேண்டும்? உன்னுடைய அண்ணி சிறை பிடிக்கப்பட்டு விட்டாள்.

**ஹீரா:** என்னது? என் அண்ணி சிறையெடுக்கப் பட்டாளா? யார் சிறைப்படுத்தியது?

**அந்தணன்:** பாதுஷாதான். உன் அண்ணி என் மூலம் சேதி சொல்லி அனுப்பியிருக்கிறாள்.

**இளைஞன்:** என்னது? எல்லா கூஜரிகளும் கைதாகி விட்டனரா?

**அந்தணன்:** பாதுஷாவின் கூடாரத்திற்குப் போன பெண்கள் எங்கே யாவது திரும்பி வந்ததுண்டா? உங்களால் உங்கள் பெண்களை வீட்டிலே வைத்துக் கொள்ள முடியவில்லையா? இது மிலேச்சர்களின் காலம் என்பது உங்களுக்குத் தெரியாதா?

**ஹீரா:** போதும் நிறுத்துங்கள். சகோதரர்களே! லாயத்திற்குச் சென்று குதிரைகளுக்கு சேணத்தைப் பூட்டுங்கள். ஆயுதங்களை அணிந்து கொள் ளுங்கள். தில்லி பாதுஷாவிடம் சென்று உயிரோடிருக்கும் கூஜரிகளை மீட்டு வருவோம். அந்தணரே! மிலேச்சர்களின் அரசென்றால் கூஜரிகள் படுதா விற்குள் இருக்க வேண்டுமா?

**அந்தணர்:** அதிகமாக ஏன் வார்த்தைகளை வீசுகிறாய்? உன் அண்ணி அங்கு படுதாவிற்குள்தான் அமர்ந்திருக்கிறாள்.

**ஹீரா:** அட என்ன வார்த்தை சொன்னாய்? அந்தணன் மீது பாய்கிறான். மற்றவர்கள் அவனைத் தடுக்கின்றனர்.

(ஊர் முழுவதும் செய்தி பரவுகின்றது. ஒன்பது லக்ஷம் கூஜர்கள் படை எடுத்து செல்லுகின்றனர். இதைப் பற்றிய வர்ணனையை ஒரு பழைய பாடலில் காணலாம்.

*'ஹீரா ஓடினான் குதிரையை நோக்கி. விரைந்தான்*
*ஆடையை வரிந்து கட்டினான், தளர்த்தினான் லகானை*
*வீரனாக இருந்தால் புறப்படுங்கள்*

*இது கோழைகளின் வேலையல்ல. வீரர்களே*
*ஆரஞ்சு வண்ணப் பாகை அணியுங்கள்.*

தில்லியைப் போய் முற்றுகையிடாவிடில் என் பெயர் ஹீரா இல்லை என பாய்ந்தேறினான் குதிரையின் மீது. தொடர்ந்தனர் ஒன்பது லட்சம் கூஜர்கள்.

## காட்சி 4

தில்லி சென்று கொண்டிருக்கும் பாதுஷாவைப் பின் தொடர்ந்து செல்லும் கூர்ஜர் படை. பங்குனி மாதம், சுக்ல பக்ஷம் பதினாலாம் பிறை. மைனா கூஜரி காளி தேவையைக் குறித்து விரதமிருக்கிறாள். அன்னத்தைத் துறந்துவிட்டு விரதமிருந்து காளியை உபாசிப்பதால் இயல்பாகவே அற்பதங்களைச் செய்யக் கூடிய உக்கிரமம், தேஜசும் வந்துவிடுகிறது. சாளரத்தின் வழியே கூஜர்களும், துருக்கிய சிப்பாய் களும் பார்த்துக் கொண்டே செல்லுகின்றனர். ஹீரா பின்னால் நகருகின்றான். கூஜரி மைனா கோபமடைகின்றாள்.

**மைனா**: யாரங்கே! யாராவது இருக்கிறீர்களா? என்னை இறக்கி விடுங்கள் கீழே! அடி ரூபா! ஷோபா! இங்கே வாருங்கள்! ஹீரா பின்னால் நகர்ந்து விட்டான். யாரேனும் வாருங்கள் இங்கே! ஹே! யோகமாயா! கூஜர் பின்ன டைந்து விட்டனரே! தாயே என்னைப் போரிடவிடு! ஹே! யோக மாயா!

(ரூபா வருகிறாள்)

**மைனா**: ரூபா! ஹீரா பின்னடைந்துவிட்டான். கூஜர்களுக்கு உயிர் வெல்லமாகிவிட்டது.

**ரூபா**: மைனா! பைத்தியம் பிடித்துவிட்டதா உனக்கு! கூஜர்களால் எவ்வளவு முடியுமோ அவ்வளவும் செய்து விட்டார்கள். கூஜர்கள் ஒன்பது லட்சம் பேர், முகலாயர் பன்னிரண்டு லட்சம்.

**மைனா**: அப்படியா! கூஜர்களால் எவ்வளவு முடியுமோ அவ்வளவும் செய்து விட்டார்கள் இல்லையா? இனி கூஜரியால் எவ்வளவு முடியுமோ அவ்வளவும் செய்யப் போகிறாள். (மீண்டும் சாளரத்தின் வழியே பார்க்கிறாள்) இல்லை—இல்லை. ஹீரா திரும்பி வருகிறான். என் கணவரை பின்னால் தள்ளுகிறான். அட, இதோ ஹீரா பின்னால் நகர்ந்து விட்டானே! ரூபா! ஹீராவிற்கு நான் கூறிய சேதி போய் சேர்ந்ததா? என்னுடைய ரவிக்கையையும், வளையலையும் அவனிடம் அனுப்பிவிடு. என்னிடம் ஒரு வாளைத்தா!

*(மைனா ஆவேசத்துடன் ஆடிப்பாடுகிறாள்)*
*“பாதுஷாவுடன் போரிடுவேன் நான்*
*அழியாப் புகழ்பெறுவேன் நான்”*

(மைனாவிற்கு தேவியின் ஆவேசம் வந்துவிட்டதை ரூபா பார்க்கிறாள்)

**ரூபா:** அம்பா தாயே! அம்பா தாயே! கூஜர்கள் வெற்றியடைவார்கள்! அம்பா தாயே!

(இளவரசனின் பின்னால் ஹீரா ஓடோடியும் வருகிறான்)

**இளவரசன்:** மைனா! என் சகோதரியே! மைனா! என் சகோதரியே! என்னைக் காப்பாற்று.

**ரூபா:** அம்பா தாயே! அம்பா தாயே!

**ஹீரா:** (பாதங்களில் வணங்கி) அம்பா தாயே! அம்பா தாயே!

**மைனா**: (அமைதி அடைகின்றாள்) மைத்துனர் நிற்கின்றார்.

(இளவரசனைப் பார்க்கிறாள். மீண்டும் விழிகளை விரித்து ஹீரா)

**இளவரசன்**: (இது இந்துக்களின் போலி வேடம் அல்ல, என்பதை உணர்ந்து) அம்பா! என் சகோதரியே! ஹீராஜீ! உன் அண்ணியை மரியாதை யுடன் அழைத்துச் செல். இங்கு வந்ததிலிருந்து அவள் ஒரு கவளம் கூட சாப்பிடவில்லை.

(ஹீரா தன் அண்ணியின் கரத்தைப் பற்றி அழைத்துச் செல்லுகிறான். இளவரசன் பார்த்துக் கொண்டே நிற்கிறான்) இந்த இந்துக்கள் அதிசயமான வர்கள். இத்தனை நாட்கள் சாப்பிடாமல் எப்படி இருக்க முடியும்?

## காட்சி 5

(கூஜர்களின் கிராமத்தில் வெற்றித் தோரணங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. கிராமத்திற்கு வெளியே மைனாவை வரவேற்க கிராமத்துக் பெண்கள் நிற்கின்றனர். கூஜர் படை பின்னால் நிற்கிறது. காளிமாதாவுக்காக மைனா கூஜரி தொடங்கிய உண்ணா நோன்பு இன்னமும் முடியவில்லை. ஹீரா தன் அண்ணியின் நோன்பை முடித்துவிட்டு மற்ற கூஜரிகளுடன் முன்னால் செல்லுகிறான். மைனாவும் தோழியரும் கூடாரத்தைப் பார்க்கவராத கிரா மத்துப் பெண்களை பார்க்கின்றனர். அவர்களின் முகத்திலே பொலிவே யில்லை. மைனா ஏதோ யோசித்தவளாய் நிற்கின்றாள்)

**ஹீரா**: வா அண்ணி! வீடு வந்துவிட்டது. உன்னுடைய விரதம் முடிந்து விடடது.

(மைனா அங்கிருக்கும் பெண்களை வைத்த விழி வாங்காமல் பார்க்கிறாள். தோழிகளும் அவ்வாறே பார்க்கின்றனர்) அண்ணி! புறப்படலாமா?

**மைனா:** மைத்துனரே! கால் எழும்பவில்லையே! (ரூபாவை நோக்கி) ரூபா! 'பாதுஷாவின் ராணி ஆகப் போகிறாள்' என்ற அந்தச் சுடு சொல் நினை விருக்கிறதா? மைத்துனரே! இனி ஏச்சுப் பேச்சு கேட்டுக் கொண்டுதானே வாழ வேண்டும்? (மைனாவின் உடலும் மனமும் உணர்ச்சி வசப்படும் நிலையில் உள்ளது) (ஆவேசத்துடன்) மைத்துனரே! என்னால் ஏச்சுப் பேச்சுக் களைக் கேட்டுக் கொண்டு வாழ முடியாது.

**ஹீரா:** அண்ணி! இதென்ன சொல்லுகிறாய் நீ! உன்னை யார் ஏசப் போகிறார்கள்! நீ சாட்சாத் யோகமாயா அல்லவா! யோகமாயாவின் அவ தாரமல்லவா நீ!

**மைனா:** (ஆவேசத்தைக் கட்டுப் படுத்திக் கொண்டு) என்னுடைய பத்தினித் தன்மையை யோக மாயா அறிவாள்.

**ஹீரா :** அண்ணி! அதோ பார்! அம்மா நிற்கின்றாள். அதோ, உன் சிறிய நாத்தனார் நிற்கிறாள். வா, வந்து இவர்களைப் பார்! கூஜர் படைவருவதற்கு முன் நான் திரும்பிச் செல்ல வேண்டும்.

(மைனாவின் கால்கள் எழும்பவில்லை. ஆனால் ஹீரா அவளுடைய கரத்தைப் பற்றி இழுத்துச் செல்கிறான். கிராமத்துப் பெண்களின் பக்கம் வருகிறான். ஹீராவின் தாயும், தங்கையும் முன்னே வருகின்றனர். அவர்கள் வருவதைக் கண்டு மைனா மகிழ்ச்சியுடன் தலைத் துணியை இழுத்துவிட்டுக் கொள்கிறாள். ஹீரா தன் தாயின் பாதங்களைத் தொட்டு வணங்குகிறான்.

**தாய்:** காலமெல்லாம் புகழுடன் வாழ் மகனே!

**சகோதரி:** (கண் தீட்டுக் கழித்தவாறே) அண்ணா! சீக்கிரம் எனக்கொரு அணணியை அழைத்து வா.

**ஹீரா:** (தன் சகோதரி அண்ணி மைனாவின் பக்கம் பார்க்காமலிருப்பதை கவனிக்கிறான்.) தங்காய்! எனக்கு ஒருத்திவரும்போது வருவாள். இப்பொழுது அண்ணியை கவனி. (தங்கை முகத்தைத் தூக்கி வைத்துக் கொள்கிறாள்)

(மைனா மாமியாரின் பாதங்களைத் தொட்டு வணங்குவதற்காக குனிகிறாள்)

**மாமியார்:** (கால்களை பின்னுக்கிழுத்துக் கொண்டு) பாதுஷாவின் ராணியே! என்னைத் தீண்டாதே!

**மைனா:** (வெகுண்டெழுந்து முகத்திரையை விலக்கி) பாதுஷாவின் ராணியா?

(மைனா கிராமத்து பெண்களின் பக்கம் நோக்குகிறாள். ஒவ்வொருத்தியும் 'பாதுஷாவின் ராணி, பாதுஷாவின் ராணி' எனத் தன்னைச் சுட்டிக் காட்டிக் கூறுவது போல் அவளுக்குத் தோன்றுகிறது)

(மீண்டும் வியப்பும் திகைப்பும் நிறைந்த பார்வையுடன்) பாதுஷாவின் ராணி! நானா பாதுஷாவின் ராணி? பாதுஷாவின் ராணியை அழைத்து வர உன் மகனை மரணத்தின் தலைவாயிலுக்கு ஏன் அனுப்பினீர்கள்?

**மாமியார்:** மகனை மரணத்தின் தலைவாயிலுக்கு அனுப்பா விட்டால் கூஜர்களின் மானம் மரியாதை என்னவாகும்? ஆனால் துருக்கனின் வீட்டி லிருந்த உன்னை என் வீட்டில் வைத்துக் கொள்வேனா? என் குலத்திற்கு இழுக்கு வந்து விடாதா?

**மைனா:** என்னால் உங்களது குலத்திற்கு மாசு ஏற்பட்டு விடுமா?

(மைனாவின் விழிகளில் வெறிச்சோடிய பார்வை நிறைகின்றது) ஹே! யோகமாயா! என்னுடைய பத்தினித்தன்மையை நீதான் அறிவாய்! ஹீரா! நான் வருகிறேன். மைனா உங்கள் குலத்தை களங்கப்படுத்த மாட்டாள் என்று

உன் அண்ணாவிடம் சொல் (மீண்டும் மாமியாரை வெறித்த நோக்குடன் பார்த்தவாறே) அம்மா! என்னால் உங்கள் குலத்தின் மானம் மரியாதை போய் விடுமா?

(மைனா புதியதொரு தெய்வீக ஒளியுடன் திகழ்கின்றாள்)

**ஹீரா**: தாயே—தாயே! அம்மா...அம்மா! என்ன செய்து விட்டீர்கள்! தேவி கோபம் கொண்டுவிட்டாள். அம்மா! தில்லியில் இவளது தெய்வீக ஒளியை நான் என் கண்ணால் கண்டேன். (மைனாவிடம்) தாயே மன்னித்துக் கொள்ளுங்கள். மன்னித்துக் கொள்ளுங்கள். எல்லாப் பெண்களும் (மாமியார் நாத்தி தவிர) மன்னித்துக் கொள் தேவி! மன்னித்துக் கொள் தேவி. குழந்தை களின் தவறுகளை மன்னித்துவிடு!

(மைனா அமைதியடைகின்றாள். தலைகேசம் அவிழ்ந்து விடுகிறது. தெய்வீகப் பொலிவுடன் மைனா யாவரிடமும் விடைபெறுகின்றாள்)

யாவரும் (மாமியார், நாத்தி உள்பட)

போகாதீர்கள் தாயே! இங்கேயே இருங்கள்!

மைனாவிற்குப் பின்னால் மற்ற பெண்களும் கரத்திலே கடாரியை ஏந்திய வண்ணம் யோகினிகளைப் போல் செல்லுகின்றனர்.

யாவரும்— செல்ல வேண்டாம் தேவி! இங்கேயே இருங்கள்.

(ஆனால் யோகினிகளின் தெய்வீக நடனத்தைக் கண்டு யாவரும் மௌனமாகி விடுகின்றனர்.)

(திரைக்குள்ளேயிருந்து)

*புறப்பட்டாளாம் கூஜரி தானும்*
*அடைந்தாள் பாவாகட்*
*மாயமாக மறைந்து விட்டாள்*
*மகாமாயையானாள்—அவளே*
*மகா காளியானாள்.*

# பனி முத்துக்கள்

## யஷ்வந்த்பண்ட்யா

**பாத்திரங்கள்**

சங்கர்

பார்வதி

மோகினி

ஆடவன்

(அந்தி நேரம். சரத் காலத்தின் துவக்கம். மரம் செடி கொடிகளின் ஒவ்வொரு இலையும் தளிரும் இளமைத் துடிப்பில் மதர்த்து நிற்கிறது. மலையின் உச்சியில் சங்கரர் வீற்றிருக்கிறார். அவரது மடியில் பார்வதி அமர்ந்திருக்கிறாள்)

**சங்கர்:** வரம்பு மீறி விட்டது, உமா!

**உமா:** என்ன சொல்கிறீர்கள் நாதா?

**சங்கர்:** (சற்றே தணிந்து) வேறென்ன? சில சமயம் நீ யோசிக்காமல் பேசி விடுகிறாய். (சற்றே சினத்துடன்) அதிகாரத்தை சரியானபடி பயன்படுத்துவதில்தான் அதன் உண்மையான மதிப்பு அடங்கியுள்ளது. மற்றபடி அதன் பயன்களைக் கல்லாதவனும் அடைய முடியும்.

**பார்வதி:** (புரிந்து கொள்ளாமலேயே) ஒரு பொழுதுமில்லை, இத்தனை ஆண்டுகளுக்கு பிறகு இன்றைக்கு என்ன புதிதாக ஞானோபதேசம் செய்ய வந்து விட்டீர்கள்!

**சங்கர்:** ஏனெனில் உனது அகங்காரம் இன்றுவரை அப்படியே தான் இருக்கிறது. இம்மியும் குறைய வில்லை.

**பார்வதி:** (இனிமையான குரலில்) ஒகோ! உங்கள் அகங்காரம் மட்டும்...

**சங்கர்:** கேலி வேண்டாம். (வானத்தை நோக்கி) பன்னிரண்டு மாதங்களில் வானத்தில் இடி யோசை கேட்பது இரண்டு மூன்று மாதங்களுக்குத்தான். அதே போல உள்ளாழம் மிகுந்த வாழ்க்கையில் சிரிப்புக்கும் களிப்புக்கும் இந்த அளவுக்குத்தான் இடம் உண்டு. கேலியும் சிரிப்பும் மிதமிஞ்சி கன மழை பொழிந்தால் வறட்சியைப் போல இன்னல் பயக்கும்.

(பார்வதி ஆவலை அடிக்கிக் கொள்கிறாள். ஆனால் கேலிப் பேச்சை விடாமல்)

**பார்வதி:** (ஈசனைக் கடைக்கண்ணால் பார்த்தவாறே) தாங்கள் கணவர் என்ற நிலையிலிருந்து குருவாகி விட்டீர்கள். ஆனால் நான் மனைவி என்ற நிலையிலிருந்து சிஷ்யை ஆகப் போவதில்லை!

**சங்கர்:** (அமைதியாக) இதைவிட அதிகமாக உன்னிடம் எதிர் பார்க்கவும் இல்லை. அம்மா பார்வதி! நீ என்னுடைய அர்த்தாங்கினியாகவே இருந்து கொண்டு உடலின் ஒரு பாதியாகவே இரு!

**பார்வதி:** (கோபத்துடன்) வேறெப்படி இருக்கிறேனாம்? இந்த வார்த்தையை வேறு யாரேனும் கூறியிருந்தால் சாபமே கொடுத்திருப்பேன், தெரியுமா?

**சங்கர்:** (அவளுடைய தோள்களைப் பற்றி) இதோ பார்! நான் சொல்வதைக் கொஞ்சம் பொறுமையாகத்தான் கேளேன். நீ கேட்க சித்தமில்லையானால், நான் சொல்வதும் வீணாகி விடும்.

*(பார்வதி அமைதியடைகிறாள்)*

***சங்கர்:*** உமா! உன் கற்புடைமையை நான் என்றுமே மதித்து வந்திருக்கிறேன். இதில் நான் பெருமிதமடைகிறேன். ஆனால், இதனை நீ தவறாகப் பயன்படுத்தினால்—

***பார்வதி:*** தவறாக பயன்படுத்துவதா? நீங்க எதை நினைத்து இப்படிக் கூறுகிறீர்கள்,

***சங்கர்:*** தன்னுடைய அதிகாரத்தைப் பயன்படுத்துவதால் யாருக்கும் பயனில்லை என்றால், மாறாக மற்றவருக்கு வீழ்ச்சிதான் ஏற்படுமென்றால் அது விரும்பத்தக்கது அல்ல.

***பார்வதி:*** அது சரி. ஆனால் இதை ஏன் என்னிடம் கூறுகிறீர்கள்? என்று புரியவில்லையே!

***சங்கர்:*** சித்திரகேதுவிற்கு நீ சாபமளித்தது இதே விதமானதுதான்.

***பார்வதி:*** (தலையை அசைத்து மறுத்தபடி) இல்லை. சபை நடுவே நான் அவமதிக்கப்படுவதை என்னால் பொறுத்துக் கொள்ள இயலவில்லை. இனி மேலும், வருங்காலத்தில் மேலுலகத்தில் எவருக்கும் அவன் இவ்வாறு அநீதி இழைக்காமல் இருக்கவே நான் அவனை அசுரனாக்கி விட்டேன். இதில் தவறென்ன?

***சங்கர்:*** (சிரித்துக் கொண்டே) பார்வதி—அன்புள்ளவளே! அறியாமை காரணமாக அடுத்தவனை அக்கிரமக்காரன் என்று கருதுவது எத்தனை எளிதானது!

***பார்வதி:*** (பரபரப்புடன்) அப்படியென்றால்?

***சங்கர்:*** (ஆறுதலளிக்கும் குரலில்) சித்திர கேதுவை சாமான்யமானவன் என்று நினைக்காதே. பரம்பொருளின் முன்னால் நானும் அவனும் சமமான வர்களே. அவன் விரும்பி இருந்தால் திருப்பி உன்னையே சபித்திருக்கலாம். அவன் அவ்வாறு செய்யவில்லை. இது அவனது பெருந்தன்மையைக் காட்டு கிறது.

(தனது பலவீனத்தை உணர்ந்து பார்வதி வெட்கமடைகிறாள்)

உமா! ஒருவன் உண்மையைக் கூறினால் அதைத் தவறாக எடுத்துக் கொள்ளும் உரிமை யாருக்கும் கிடையாது. சபை நடுவே நீ என் மடியின் மீது தான் அமருவேன் என்று அடம் பிடித்தாய். இதற்கு சித்திர கேது எதிர்ப்பு தெரிவித்தான். இதை அசாதாரண விஷயமாக ஏன் எடுத்துக் கொள்ள வேண்டும்? (உறுதியான குரலில்) எனக்கும் இது சற்று உறுத்தத்தான் செய்தது. தனிமையிலிருக்கும் நேரம் தவிர யாருமே ஒருவர் மீது ஒட்டிக் கொண்டிருக்க விரும்ப மாட்டார்கள். ஆனால், நீயோ அல்லும் பகலும் அறுபது நாழிகையும் என்னுடனே இருந்தும்கூட...

***பார்வதி:*** (துக்கம் தொண்டை அடைக்க) நான் உங்களுக்குப் பாரமாக இருக்கிறேனா? (முகத்தைத் திருப்பிக் கொண்டு விழிகளில் ததும்பும் நீரைத் துடைத்துக் கொள்கிறாள். சங்கர் தனது கரத்தை நீட்டி அவள் முகத்தை தன் பக்கம் திருப்புகிறார்)

**சங்கர்:** (குறும்பாக) இவ்வளவுதானா—இன்னமும் ஏதாவது? (பார்வதி மனமில்லாமல் முகத்தில் சிரிப்பை வரவழைக்கிறாள்)

(சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு) கிரிஜா! இந்த பூமியே பாரமாக நினைப்பதில்லை, அப்படியிருக்க நீ ஒரு பாரமா? (பார்வதியின் விழிகளை ஊடுருவிப் பார்க்கிறார்)

(பிறகு மகிழ்ச்சியுடன்) இனியவளே! இந்தஉடலின் மீது ஏன் உனக்கு இத்தனை மோகம்! சொல்லு!

**பார்வதி:** (பருமையுடன்) இதனை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டு மென்றால் நீங்கள் சாட்சாத் பார்வதியாக அவதாரம் எடுக்க வேண்டும்.

**சங்கர்:** (நயம் மிகுந்த குரலில்) அதுசரி அரைநாழிகை நேரமாவது என்னைப் பிரிந்து தனியாக உலவி வரலாமே என்ற ஆசை உன் மனதில் தோன்றுவதே இல்லையா உமா? இதற்கு மட்டும் பதில் சொல்லு, போதும்.

**பார்வதி:** (மனதிற்குள்) என்ன விந்தையான கேள்வி இது?

**சங்கர்:** (வலியுறுத்தும் குரலில்) சொல்லு! உன் மனத்தில் இந்த மாதிரி நினைப்பு வருவதே இல்லையா?

**பார்வதி:** (மனதிற்குள்) இதைச் சொல்லிவிட்டால் பிறகு சொல்வதற்கு என்ன இருக்கிறது? (கொஞ்சலாக) தூரத்திலிருந்து உம்மைப் பார்க்கும் போது ஒன்று உம்மிடமிருந்து தூரத்திலே விலகியே இருக்க வேண்டும், அல்லது அருகிலேயே இருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. இதைத் தவிர வேறு என்ன வழி?

**சங்கர்:** ஏன் அப்படி? (கண்களைச் சிமிட்டிக் கொண்டு) இதற்கெல்லாம் ஏமாறக் கூடியவனா நான்? நான் நினைத்ததே வேறு. பார்வதி போன்ற ஒரு பத்தினிப் பெண் ஒரு ஆண் மகன் மீது மோகம் கொள்வதானால் அவனுடைய அழகு, வனப்பு...

**பார்வதி:** (இதனை ஏற்றுக் கொள்ளும் பாவனையில்) அப்புறம் நீங்கள் தான் பச்சாதாபப்பட நேரும் (பார்வதி சிரிக்கிறாள். ஆனால் அதிக நேரம் சிரிக்க முடியவில்லை)

**சங்கர்:** (விழிகளைத் தாழ்த்தி) ஆமாம். ஆனந்தக் கண்ணீர் போல உனது உதடுகள் இப்பொழுது பிராயசித்தத்தின் ஆனந்தத்தை அனுபவித்துக் கொண் டிருக்கின்றன.

(பார்வதி உல்லாசத்தைக் கட்டுப் படுத்த முயல்கிறாள். இந்த முயற்சியில் முக பாவம் தீவிரமடைகிறது).

**பார்வதி:** பிரபு! எவருமே தன்னைத் தானே பார்த்துக் கொள்ள முடியு மானால் இந்த உலகில் பாதி கர்வம் அழிந்து விடும்.

**சங்கர்:** (தன்னை மறந்த மகிழ்ச்சியில்) முக்காலும் உண்மை. உன்னுடைய மனதை, ஏன் எவருடைய இதயத்தையும் நெருடுகிற உண்மை இதுதான். (கிண்டலாக) ஆனால் இப்பொழுது இது பயனற்றது.

**பார்வதி:** (பேச்சைத் தொடர்ந்தவாறு) நாதா, நிஜமாகவே இதன் தேவை இப்பொழுதுதான் என்பேன்.

**சங்கர்:** எப்படி?

**பார்வதி:** எனதருமை ருத்திரதேவரின் மனதில் எவ்வளவு அகங்காரம் இருக்கிறதென்பது இதனால் நிரூபிக்கப்படும் அல்லவா!

**சங்கர்:** (அதே தொனியில்) அகங்காரமும் ஓரளவு வரை அவசியமானது தான். சிவனுக்கு தன்னைப் பற்றிய அகங்காரம் இல்லாவிட்டால் வாழ்க்கையில் வேறெதுவுமே இல்லை.

(இருவரும் சற்றுநேரம் மௌனமாகிவிடுகின்றனர்.

**சங்கர்:** (மனதிற்குள்) பார்வதி சங்கரை இன்னம் சரியாகப் புரிந்து கொள்ளாதது துயரமான விஷயம் தான். ஆனால் சடப் பொருளான இமாலயத்தின் புதல்வியிடம் உணர்ச்சித் துடிப்பு எவ்வாறு தளிர்விட முடியும்? (பார்வதியை மகிழ்விக்க எண்ணி வெளிப்படையாக) என்னைத் தழுவிக் கொண்டிருப்பதற்கு நீ கூறும் காரணம் அற்புதமானதுதான். அனால் அம்பா! உனது இந்த இயல்பு காரணமாக மக்கள் என்னைச் சவம் என்றல்லவா கூறத் துணிந்து விட்டனர்!

**பார்வதி:** (உல்லாசத்துடன்) உண்மையாகவா? உமது இடத்தில் நான் இருந்தால் இதனைப் பாராட்டுதல் என்று நினைத்துப் பெருமைப்பட்டிருப்பேன்

**சங்கா:** (பணிவுடன் இதை எதிர்த்தவாறு) இல்லை, பார்வதி! எனது உலகம் இத்தனை பெருந்தன்மையானது அல்ல. இங்கே ஒவ்வொரு எழுத்தின் பொருளும் ஆழமானது, பொருளின் உள்ளே ஊடுருவி எதிர்மறைப் பொருளையும் புரிந்து கொள்ளும் ஆற்றல் படைத்தது. (பார் வதியின் முகத்தில் கவலையின் சாயை படருகிறது) சுருங்கக் கூறினால் அவர்களது நோக்கில் நான் பெண்டாட்டி தாசன். அழகான சொற்களில் வடித்த தெளி வான வசவு. தேவி! புரிந்து கொண்டாயா?

(கவலையின் சாயை இன்னம் ஆழமாகிறது) (மனதிற்குள்) ஓஹோ, நான் கூறியது இவள் மனதைத் தாக்கிவிட்டது போலும். (வெளிப்படையாக) கௌரி! நான் யோகியைப் போல் ஏன் அலைகிறேன் என்பதை நான் உனக்குச் சொல்லவே இல்லையே?

**பார்வதி:** (மிகுந்த சிரமத்துடன்) இல்லை.

**சங்கர்:** இப்பொழுது சொல்லுகிறேன். கேள். உன் ஒருத்தியைத் தவிர மற்ற யாவரும் என்னிடம் பயப்படுகிறார்கள். இதுவேதான் எனது முக்கிய நோக்கம் கூட. உண்மைதான் நீ கூறியது போலவேதான் இருக்கிறேன் நான்.

**பார்வதி:** (முகத்தை தாழ்த்திக் கொண்டு) இல்லை. அப்படிச் சொன்னது என் தவறுதான். அதை மறந்து விடுங்கள்.

**சங்கர்:** (பார்வதியை அணைத்துக் கொண்டு) கிரி பாலா, மலைமகளே வெட்கப்படாதே. இந்த புலித் தோலாடை உன்னை அச்சுறுத்த முடியாது.

**பார்வதி:** இது எனக்கு பழக்கமாகிவிட்டது.

**சங்கர்:** மென்மையான மலர் மாலை எங்கே, இத்தனை கரடுமுரடான

ருத்திராட்ச மாலை எங்கே!

**பார்வதி:** (இடைமறித்து) மலர்மாலை எல்லாம் நீங்கள் நந்திக்குத்தானே அணிவிக்கிறீர்கள்.

**சங்கர்:** (மென்மையான குரலில்) ஆனால் என் ருத்தி ராட்ச மாலை மார்பு, உன் உடலை உறுத்தவில்லையா?

**பார்வதி:** என் நத்து உங்களுக்கு இடைஞ்சலாக இருக்கிறதா? சொல்லுங்கள்!

**சங்கர்:** என் கழுத்தைச் சுற்றியிருக்கும் பாம்பு?

**பார்வதி:** இந்த பிரும்மாண்டமெங்கும் சுற்றினால் என் பிரபுவைத் தவிர வேறு யாருக்கு இந்த உரிமை உண்டு?

(சங்கர் அடுத்து என்ன கூறுவது என்று யோசிக்கிறார்.)

**பார்வதி:** (கேலியாக) ஆனால்— சில சமயம் ஒரு விஷயம் என்னை வருத்துவதுண்டு.

**சங்கர்:** (பரபரப்புடன்) என்ன அது?

**பார்வதி:** அதுதான் தங்களுடைய காளை துள்ளிக் குதித்து தனது சிறிய நாக்கினால் எனது கன்னத்தை ஈரமாக்கும் போது.

**சங்கர்:** இதை என்னால் எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியும்? (இருவரும் வெவ்வேறு திசையில் முகத்தைத் திருப்பிக் கொள்கின்றனர்)

(சிறிது நேரத்திற்குப் பிறகு) பறந்து கொண்டிருக்கும் இந்த ஜடாமுடியைக் கண்டு உனக்கு எரிச்சல் ஏற்படவில்லையா?

**பார்வதி:** (சற்றும் தயக்கமின்றி) இல்லை

**சங்கர்:** (பார்வதியைப் பிடித்து உலுக்கியவாறே) நீ பெண்ணா அல்லது...?

**பார்வதி:** மனைவி.

**சங்கர்:** (மனதிற்குள்) எத்தனை நேரடியான பதில். தெளிவான விளக்கம்.

**பார்வதி:** (மனதிற்குள்) மறக்க நினைத்தும் எனனால் ஏன் மறக்க முடிய வில்லை இந்த ஜடாமுடிதான் எத்தனை குரூரமானது? இவ்வளவு தூரம் கேட்கிறாரே ஒரு முறை சொல்லிவிட்டால் தான் என்ன?

**சங்கர்:** உமா! எனக்கு எதிராக சொல்லுவதற்கு எதுவுமில்லையா?

**பார்வதி:** (மனதிற்குள்) சொல்லி விடட்டுமா? இன்றைய விவாதத்தின் முக்கியமான காரணமே கங்கை தானே? என் கண் எதிரே அவள் இருப்பதால் தானே நான் விடாமல் என் நாதனின் மடியின் அமர்ந்திருக்கிறேன். (வெளிப் படையாக) சொல்லக் கூடியதாக எதுவுமில்லை.

**சங்கர்:** (ஆவலுடன்) அப்படியானால் சொல்லக் கூடாததாக ஏதோ இருக்கிறது. அல்லவா, (எதிர்பாராத இக்கேள்வியினால் பார்வதி வியப்பும் திகைப்பும் அடைகிறாள்.)

**பார்வதி:** எந்த விஷயத்தையுமே தெரிந்து கொள்ளாம லிருப்பதில்தான் ஆனந்தமிருக்கிறது.

**சங்கர்**: (கோபத்துடன்) சிஷ்யையாக விருப்பம் இல்லாதவள், இப்போது குருவின் இடத்தை எடுத்துக் கொண்டிருப்பது ஆச்சர்யமாக இல்லையா?

(பார்வதி சங்கரை ஏறிட்டுப் பார்க்கிறாள். சங்கர் தனக்குள் ஆழ்ந்து விடுகிறார்)

**பார்வதி**: (பின் விளைவைப் பற்றிச் சிந்திக்காமல்) உங்களுக்கு கோபம் வரும். அதனால்தான் நான் எதுவும் கூறவில்லை. ஆனால் நான் சொல்லா விட்டாலும் நீங்கள் கோபித்துக் கொள்ளுகிறீர்கள். இதனால் நான் ஒரு வார்த்தையைக் கூட மறைக்க விரும்பவில்லை.

(சங்கர் ஏறிட்டு நோக்குகிறார்)

நான் ஏன் உங்களை விட்டு பிரிவதில்லை தெரியுமா? இதற்கு ஒரே காரணம்தான் உள்ளது. அதுவும் தெளிவானது. என் கண்ணெதிரிலேயே நீங்கள் பாகீரதியை உங்களுடன் வைத்துக் கொள்வதென்பது என்னைச் சோதிப்பது போல இருக்கிறது. இந்தப் பார்வதி மட்டுமல்ல, எந்தப் பெண்ணுமே இதைச் சகித்துக் கொள்ள முடியாது. இப்போது சொல்லுங்கள் நான் எப்படி உங்களை விட்டு விட்டு இருக்க முடியும்?

**சங்கர்**: (மனதிற்குள்) புரிந்தது. (வெளியே) இமவானின் மகளே! கங்கையின் கர்வத்தை அடக்கவே அவளை எனது ஜடாமுடியில் சிறைப் படுத்தியுள்ளேன். இது யாவரும் அறிந்தது தானே?

**பார்வதி**: அப்படிச் சொல்லாதீர்கள்? பிறருடைய கர்வத்தை அடக்கும் முயற்சியில் எத்தனை பேர் தங்களையே இழந்திருக்கிறார்கள்?

**சங்கர்**: இருக்கலாம். பார்வதி என்ற பெண்ணை நான் மணந்து கொண்டிருக்கிறேன் என்பதை நான் எப்படி மறக்க முடியும்?

**பார்வதி**: மறப்பதற்கென்ன அவசியம்? தேவ புருஷர்களான உங்களுக்கு எப்பொழுது வேண்டுமோ, அப்பொழுது சொந்த விருப்பப்படி, நடந்து கொள்ள உரிமை இருக்கிறது. ஆனால் மனைவிக்கு மட்டும் வேறொரு புருஷன் கூடாது. அவள் தன்னுடைய...

**சங்கர்**: (ஆவேசத்துடன்) போதும். அளவிற்கு மிஞ்சி விட்டது. பொறாமைக்கும் ஒரு எல்லையுண்டு.

**பார்வதி**: (பணிவுடன்) நான் முதலிலேயே சொன்னேனே கோபம் வந்துவிடும் என்று. வந்து விட்டதே!

**சங்கர்**: (கோபமாக) உமா! பெரும் நெருப்பைத் தூண்டிவிட ஒரு சிறிய தீப்பொறி போது மானது. பார்வதியின் உயிருக்குயிராக இருக்கும் சங்கர் மீது குற்றம் சாட்டி, அதனால் சினத் தீ மூண்டெழுந்தால், தவறு யாருடையது? சந்திரனின் நிலவொளி பார்வதியின் இயல்பு. சூரியனின் அக்கினி சிவனின் தன்மை. (இடியே விழுந்து விட்டதுபோல பார்வதியின் உடல் வெடவெட வென நடுங்குகிறது) கங்கையை நான் சிரசில் தரித்துக் கொண்டிருப்பது ஒரு காரணத்தை முன்னிட்டுத்தான். இதயத்தினால் என்ன விழியினால் கூட நேரடி சந்திப்பு இயலாத நிலை அல்லவா இது! (சிரத்தை விரலால் சுட்டிக் காட்டி)

நெற்றியின் மீது ஒளிரும் பிறையும் இதே போல தூய்மையானது. தக்ஷனின் வேள்வியில் சோமதேவனின் நடத்தைக்கு கிடைத்த பிராயச் சித்தம் இது. உமா! பார்வதி! மகேசன் எவருக்கும் அநீதி இழைக்க மாட்டான். அதே நேரத்தில் எந்த அநீதியையும் பொறுத்துக் கொள்ளவும் மாட்டான்.

**பார்வதி**: (அன்புடன்) ஆனால் மன்னிப்பீர்கள் அல்லவா!

***சங்கர்***: ஓ! சந்தோஷமாக மன்னிப்பது என்றால் எனக்கு இரட்டிப்பு மகிழ்ச்சியே. இதில் பெருமை அடைகிறேன்.

(பார்வதி திருப்தியடைகிறாள். ஏதோ நினைவு வந்து விட்டது போன்ற பாவனை முகத்தில் பளிச்சிடுகிறது.

**பார்வதி**: சங்கருடைய பெருமையில் பார்வதி அனைத்துமே பெறுகிறாள். தந்தையான தக்ஷனின் யாகத்தில் மகள் சதி தன்னுடைய உடலை யாக குண்டத்தில் சாம்பலாக்கிக் கொண்டதே இதற்காகத்தானே? தந்தையே ஆனாலும் கணவனை அவமதிப்பதென்றால்?

***சங்கர்***: அதற்கு என்ன இப்பொழுது! ஏன் பதட்டம்? அமைதியாக இரு!

**பார்வதி**: இதோ முடித்து விடுகிறேன். அதனால்தான் நான் உடலைத் தியாகம் செய்தேன். ஆனால் ஆத்மாவுக்கு அழிவு இல்லை. நான் உமையாகத் தோன்றினேன். அபபொழுதும் ருத்திரனையே பணிந்தேன், பூசித்தேன். பணிவிடைகள் புரிந்தேன்.

***சங்கர்***: (மகிழ்ச்சியுடன்) அப்பேர்பட்ட பெருமையுடைய சீ கங்கையிடம் பொறாமை கொள்வது உசிதமா? இது வேடிக்கையாக இல்லை?

**பார்வதி**: (கண்களை அகலவிரித்து) மீண்டும் அதே பேச்சா? (வெடுக் கெனறு) விடுங்கள் அந்தப் பேச்சை.

***சங்கர்***: அப்படி இலேசாக விட்டு விட முடியுமா? சதிபதிகளுக்கிடையே ஊடல் என்பது அனாதியானது, முடிவற்றது.

(பார்வதி மௌனம் சாதிக்கிறாள். அவள் பதில் கூறாமலிருந்தால் பேச்சு திசை மாறிவிடும் என்ற நினைப்பு)

***சங்கர்***: (தொடர்ந்து) ஆனால் பார்வதி! நாமிருவருமே ஒரு விஷயத்தை மறந்து விட்டோம்.

**பார்வதி**: :அது என்ன?

***சங்கர்***: முதலிலேயே நினைவு வராமல் போயிற்று. அதுமட்டும் வந்திருந்தால் சர்ச்சை மூள வேண்டிய அவசியமே இருந்திராது.

**பார்வதி**: (பரபரப்புடன்) அதென்ன விஷயம்?

***சங்கர்***: (நிதானமாக) காமனை எரித்தது.

(பார்வதியின் உற்சாகம் தணிந்து விடுகிறது)

***சங்கர்***: (பெருமையுடன்) என்னை அம்பினால் துளைக்க வந்தான் அவன். அவனை நாணோ அவனையே எரித்து எத்தனையோ பேரைக் காம தேவனிடமிருந்து காப்பாற்றினேன் அப்படித்தானே?

**பார்வதி:** (இப்போது பார்வதியின் மனத்தில் சிவனைச் சீண்டிவிடும் ஆவல் உண்டாகிறது) நாதா! என் மனதில் இதற்கு எதிர்மாறான எண்ணம் தோன்றுகிறது.

**சங்கர்:** அதாவது.

**பார்வதி:** மன்மதன் உயிருடனிருந்த காலத்தில் ரதியின் அருகிலிருந்து அகன்ற நேரங்களில் மட்டுமே தனது மாய சக்தியைப் பயன்படுத்தினான். அதுவும் ஒரு சமயம் ஒரிடத்தில் ஒரு மனிதன் மீது மட்டும்.

(பார்வதி பேசுவதை நிறுத்தி விடுகிறாள்.)

**சங்கர்:** இப்பொழுது? (எரிச்சலுடன்) ஆவியுருவில்...

**பார்வதி:** (அமைதியாக) இல்லை (சிரித்துக் கொண்டே) அவனுடைய சாம்பல் தூளிகள் இன்னும் கூட கைலாசத்தின் நாற்புறமும் விரவிக் கிடப்பதாக எனக்குத் தோன்றுகிறது

**சங்கர்:** (தனது நெஞ்சின் மீது கரம் வைத்து) ஆனால் பிரளயத்தைத் உண்டு பண்ணக் கூடிய வல்ல மையுடைய இந்த மகேசனின அருகில் சதா காலமும் இருந்தும்கூட வரப்போவதை துல்லியமாக யோசித்தறிய முடியுமா உன்னால்? (கர்வத்துடன்) அட! பகவான் நாராயணனின் தைரியம் கூட உனக்கில்லையே! சதி! நன்றாகத் தெரிந்து கொள், நாராயணனுக்குள்ள தைரியம் கூட உனக் கில்லை.

**பார்வதி:** (மடியிலிருந்து சட்டென எழுந்து) உம்!...அப்படியா? நல்லது!

(பார்வதி புறப்படுகிறாள்)

**சங்கர்:** என்ன இது? திடீரென்று...

**பார்வதி:** இதயத்தில் இன்றளவும் இருந்த கபடத்துக்கு பிராய சித்தம் செய்து கொள்ள அனுமதியுங்கள் பிரபோ! மானசரோவரத்தின் தூய் மையான நீர் இன்று மேலும் தூய்மையான தாகத் தோன்றுகிறது.

(பார்வதி சென்று விடுகிறாள்)

**சங்கர்:** (மகிழ்ச்சியுடன்) இன்றிலிருந்து எங்களுடைய சச்சரவு முற்றுப் பெற்றது. வாழ்வெனும் மலரிலே அழகும் மணமும் இரண்டறக் கலந்து விட புதியதொரு உவமையைத்தான் தேட வேண்டியிருக்கும்.

ஒரு மலர்ச்செடியைக் கண்டு சங்கர் அதை நோக்கிச் செல்லுகிறார். மலரைப் பறிப்பதற்குள் அங்கொரு அழகிய இளம் பெண்ணைக் கண்டு திகைத்து நிற்கிறார்.

**மோகினி:** (புருவத்தை உயர்த்தி) நீர் யார்? குரங்காட்டியைப் போல் இந்த வேடத்தில் வெட்கமில்லாமல் திரிந்து கொண்டிருக்கிறீரே! அது போகட்டும். எங்கே போகலாம். எங்கே போகக் கூடாது என்பதாவது தெரிந்திருக்க வேண்டாமா?

(சங்கர் இன்னமும் திகைப்பிலிருந்து மீளவில்லை, எனவே சினம் கொள்வ தில்லை)

நீ இங்கிருந்து போய்விட்டால் நல்லது.

***சங்கர்:*** (மனதிற்குள்) இது யாராக இருக்கும்? இத்தகைய வனப்பை, அழகுருவை, ஒயில் மிகுந்த லாவண்யத்தை நான் இன்றுதான் காண்கிறேன். பிரும்ம தேவன் தினமும் புதிய புதிய கை வண்ணத்துடன் அழகுச் சிலை களைப் படைத்துக் கொண்டே இருக்கிறார்.

**மோகினி:** (கலவரத்துடன்) நீர் மகேசன் தானோ?

***சங்கர்:*** (அலட்சியமாக) இதனைக் கேட்கவேண்டிய அவசிய மென்னவோ!

**மோகினி:** சும்மாத்தான். வழியில் ப்ார்வதி தேவியைச் சந்தித்தேன். இதனால் சற்று ஐயம் ஏற்பட்டது.

***சங்கர்:*** (மனதிற்குள்) உமா கூறியது முற்றிலும் உண்மை. மகேசன் சஞ்சல மற்றவன் அல்ல.

(சங்கர் கழுத்திலிருந்த பாம்பை அகற்றுகிறார்)

(மனதிற்குள்) பார்வதி! பார்வதி! நீ எனது மடியின் மீது அமர்ந்திருந்தால் இதயத்தில் இப்படிப்பட்ட துச்சமான ஆசை தோன்றியிருக்காது. புண்ணியம் சம்பாதிக்க நீ மானசரோவரத்திற்கு சென்றிருக்கிறாய். இங்கு நான் பாவத்தை பொட்டலம் கட்டிக் கொண்டிருக்கிறேன்!

(காற்று வீசுகிறது. மோகினியின் மெல்லிய ஆடை குலை கின்றது)

(மனதிற்குள்) ஆனாலும் இத்தகைய இளமை...

***சங்கர்:*** மோகினியை நோக்கிச் செல்லுகிறார். ஒயிலாக மோகினி சற்றே பின்னடைகிறாள்.

**மோகினி:** (போலியான சீற்றத்துடன்) உமது விருப்பம்தான் என்ன?

(சங்கர் தன் வயமிழக்கிறார்)

***சங்கர்:*** (மனதிற்குள்) விருப்பமா?—ஏசினாலும் சரி.

**மோகினி:** (அவரை நோக்கி) உங்களை தேவதேவன், மகாதேவன் என்றால்லவா அழைக்கிறார்கள்? (இதயத்தை ஊடுருவிப் பார்த்தவளாய்) என்னைப் போன்ற சாமானியமானவன் தங்களைப் போன்றவரின் கருணைக் கண்ணுக்குப் பாத்திரமாக என்ன தகுதியுள்ளது?

(காயமடைந்தவர்போல சங்கர் பதிலேதும் கூறாது நிற்கிறார்) (நாசிவிரிய) மௌனவிரதமா? நல்லது. அப்படியானால் அதோ அந்த அடர்ந்த மரத்தின் குளிர்ந்த நிழலைத் தேடிச் செல்லுங்கள்.

***சங்கர்:*** (திடீரென முன்னே வந்து) இல்லையென்றால்.

(மிரண்ட மானைப் போல் மோகினி இங்குமங்கும் பார்க்கிறாள். அனால் பின்னால் நகர முடிவதில்லை)

(காற்றிலே பறக்கும் அவளது மேலாடையைப் பற்றி) மௌன விரதம் இல்லாவிட்டால்?

**மோகினி:** (தன்னுடைய மேலாடையை விடுவித்த வண்ணம்) மௌன விரதம் இல்லையானால் ஆனந்தமாகப் பாடுங்களேன். எனக்கென்ன வந்தது?

(அவளது அங்க அசைவுகளும் ஒயிலான தோற்றமும் சங்கரின் உடலுக்கும் உள்ளத்துக்கும் அலாதியான கிளர்ச்சியை ஊட்டுகிறது) (போதையூட்டும் கிறக்கத்துடன்) என்னைக் கண்டு ஏன் இப்படி பித்தனாகிவிட்டீர்? உமா தேவியும் ஒரு காலத்தில் இளமையுடன் இருந்தார் அல்லவா? அப்பொழுதும் அவள் நீலகண்டனுடையவளாகத்தானே இருந்தாள்? (முத்துக்கள் சிதறுவது போல் மென்னகை புரிகிறாள். சங்கரரின் காமத்தீ மூண்டெழுகின்றது.)

உங்களுடைய உமை பூரண இளமையுடன் இருக்கையில்...

(சங்கர் சட்டென மோகினியைக் கட்டி அணைக்கிறார்)

**சங்கர்:** (அவளைத் தழுவியவாறே) இத்தகைய ஆனந்தத்தைத்தான் அளித்துக் கொண்டிருந்தாள். (மோகினி சாமர்த்தியமாக தன்னை அணைப்பிலிருந்து விடுவித்துக் கொண்டு ஓடிவிடுகிறாள். சங்கர் அவள் பின்னால் ஓடுகிறார். இதற்குள் பார்வதி அந்த இடத்திற்கு வந்து விடுகிறாள்.)

**பார்வதி:** (சங்கரைக் காணாது) எங்கே போய்விட்டார்? தவம் புரியும் பித்தம் மீண்டும் தலைக்கேறி விட்டதா?

(யாரோ கூச்சலிடும் சத்தம் கேட்கிறது. பார்வதி அக்குரல் வந்த திசையில் நோக்கும் முன்னரே மோகினி அங்கு வந்து விடுகிறாள். பார்வதியின் கரத்தைப் பற்றிக் கொண்டு அவளது காலடியில் வீழ்கின்றாள்.

**மோகினி:** (மூச்சு வாங்க) காப்பாற்றுங்கள், தாயே காப்பாற்றுங்கள்.

**பார்வதி:** (தூக்கி எடுத்து) யாரிடமிருந்து? நீ யார்?

(பார்வதியின் திகைப்பு நீங்கும் முன்னர் மோகினி தன்னை சுதாரித்துக் கொண்டு விடுகிறாள். கொடி மரத்தை தழுவிக் கொள்வதுபோல் மோகினி பார்வதியைத் தழுவிக் கொள்கிறாள்.

**மோகினி:** நான்...நான்...வந்து

(பார்வதி திடுக்கிடுகின்றாள். மோகினியின் இடத்தில் ஆடவனொருவன் நிற்பதைக் காண்கிறாள். ஆனால் இனம் கண்டு கொண்டதும் அமைதியடைகின்றாள். மோகினியைத் தேடிக் கொண்டு சங்கர் வருகிறார்.

**சங்கர்:** (தூரத்திலிருந்து) இதோ நிற்பது பார்வதி, ஆனால் பக்கத்தில் அது யார்?

(சங்கர் ஓடிவருகிறார்)

**பார்வதி:** வாருங்கள்! யாரைத் தேடுகிறீர்கள்?

**ஆடவன்:** (உரக்கச் சிரித்து) வாருங்கள்! மோகினி வந்து கொண்டு இருக்கிறாள்.

**சங்கர்:** (வெட்கத்துடன்) யார்? நாராயணரா? நாராயண... நாராயண!

# ஹம்சா

## படுபாய் உமர்வாடியா

**பாத்திரங்கள்**

ஹம்சா
சுர்மா
விமலா
உர்சுலா
நரேஷ்
ஜகதீஷ்
வேலைக்காரன்
தீமந்த்

## காட்சி 1

(நேரம். காலை பதினோரு மணி. இடம் நரேஷின் இல்லத்தில் ஒரு அறை. ஹம்சா மலர் ஜாடியில் மலர்களைச் சரி செய்து கொண்டிருக்கிறாள். தீமந்த் வருகிறான்)

**ஹம்சா:** வாங்க, வாங்க! நலமா?

**தீமந்த்:** நரேஷ் வெளியே போயிருக்கிறானா?

**ஹம்சா:** ஆமாம். உட்காருங்க. அலுவலகத்திலிருந்து இன்னும் வரவில்லை. வர்ற நேரம்தான். காலை எட்டு மணிக்கே போயாச்சு.

(இருவரும் உட்காருகின்றனர். சற்று நேரத்திற்குப்பின்)

**தீமந்த்:** நீங்கள் வசந்த விழாவுக்குப் போனீங்களா? நான் போகவில்லை.

**ஹம்சா:** (சற்றே யோசித்து) இல்லை. நான் கூட போகவில்லை.

**தீமந்த்:** அட! இதில் என்ன யோசனை?

**ஹம்சா:** ஒன்றுமில்லை. (சுதாரித்துக் கொண்டு), சும்மாதான் போக வில்லை.

**தீமந்த்:** நரேஷும் போகவில்லையா? அவன் போயிருப்பானே.

(ஹம்சா பதில் கூறாமல் தீமந்தை நோக்குகிறாள்)

**ஹம்சா:** ஆமாம். அவர் போயிருந்தார்.

(இதைக் கூறும்போது ஹம்சாவின் முகபாவம் மாறுவதை தீமந்த் கவனித்து விடுகிறான்.

**தீமந்த்:** (கவலையுடன்) நீ தவறாக எடுத்துக் கொண்டு விட்டாயா? பரவா யில்லை. சும்மாத்தான் கேட்டேன். எல்லோரும் இதை பற்றியே பேசறாங்க இல்லே? அதனால்கேட்டு விட்டேன். உன் மனதை...

(தீமந்த் வாக்கியத்தைப் பூர்த்தி செய்யாமல் நிறுத்தி விடுகிறான். தன் பேச்சை ஹம்சா கவனிக்கவில்லை என்று அவனுக்குப் படு கிறது. சற்று நேரம் மௌனம் நிலவுகிறது. மேஜை மீது படிந்துள்ள அடையாளங்களைக் கவனிக் கிறான்.

ஹம்சா! எனக்குத் தெரியும்! மீண்டும் சச்சரவு நடந்திருக்கும்.

**ஹம்சா:** நடந்திருக்கும்.

(தீமந்த் ஹம்சாவைப் பார்க்கிறான்)

**தீமந்த்:** உடம்பு சரியில்லையா?

**ஹம்சா:** (இயல்பான சிரிப்புடன்) ஏன்? நல்லாத்தானே இருக்கிறேன். ஏன் அப்படிக் கேட்கிறீங்க?

**தீமந்த்:** ஏன் என்று கேள்வியா? அன்னிக்கு நடந்த சண்டையைக் கண்டு

யாருமே மிரண்டு போவாங்க. யாராவது வந்து இன்னிக்கு தசமி என்கிறார். பிறகு தசமியாக இருக்கலாம் என்று வம்புக் கிழுக்கிறார்... நீ என்ன செய்வாய்?

**ஹம்சா:** இந்த விஷயங்களெல்லாம் எனக்கென்ன தெரியும்? உலகத்தி லுள்ள நாடுகளின் பெயர்கள் கூட எனக்குத் தெரியாது. அப்படியிருக்கும் போது...

**தீமந்த்:** எனக்குக் கூடத்தான் தெரியாது. அதனால் என்ன?

**ஹம்சா:** உங்க விஷயம் வேறு. நீங்க கற்றுக் கொள்ளலாம்.

**தீமந்த்:** நீ கற்றுக் கொள்ள முடியாதா? இருநூறு ஆண்டுகளுக்கு முந்திய விஷயத்தை நீ பேசுகிறாய். உர்சுலாவைப் பார்த்தாயா?

**ஹம்சா:** ஒ... ஆனால் அவள் எவ்வளவு படித்தவள்? ஜகதீஷ் அண்ணா அவளை பி.ஏ. வரையிலும் படிக்க வைத்திருக்கிறார். என்னை என் அம்மா, அப்பா....

**தீமந்த்:** ஆனால் அவள் பி.ஏ. ஆகியும் பயனில்லை. உனக்குத் தெரிந்ததில் பாதி கூட அவளுக்குத் தெரியாது என்று எனக்குப் படுகிறது.

**ஹம்சா:** இப்படி நீங்கள் சொல்லுகிறீர்கள்.

**தீமந்த்:** ஏன், வேறொருவரும் சொல்லவில்லையா?

**ஹம்சா:** (சிரித்துக் கொண்டு) இல்லையே.

**தீமந்த்:** நரேஷ் ஒருவனைத் தவிர மற்ற எல்லோரும் சொல்லுகிறார்கள். அவன் ஒரு முட்டாள், இரசிக்கத் தெரியாதவன்.

**ஹம்சா:** அப்படிச் சொல்லாதீர்கள். எனக்கும் இந்த விஷயங்களுக்கும் என்ன சம்பந்தம்? அன்னிக்கு சண்டை வந்தது. அதனால் என்ன?

(தீமந்த் ஹம்சாவைப் பார்க்கிறான்)

**தீமந்த்:** அவன் உண்மையிலேயே கொடுத்து வைத்தவன்.

**ஹம்சா:** உங்களுக்குப் பொறாமையாக இருக்கிறதா?

**தீமந்த்:** இருக்காதா? இப்படிப்பட்ட மனைவியை...

(வேலைக்காரன் வருகிறான்)

**வேலைக்காரன்:** அம்மா, ஜகதீஷ் சந்திர பாபுவின் வீட்டிலிருந்து ஒரு ஆள் வந்திருக்கிறான். இன்று ஐயா அங்கேதான் சாப்பிடப் போறாங்களாம். நீங்க காத்திருக்க வேண்டாம். அப்படீன்னு சொல்லி அனுப்பியிருக்காங்க.

(ஹம்சாவின் முகம் வாட்டமடைகிறது)

**ஹம்சா:** அந்த ஆள் போய்விட்டானா?

**வேலைக்காரன்:** இன்னும் போகலேம்மா.

**ஹம்சா:** அவனை இங்கே அனுப்பு.

(வேலைக்காரன் போகிறான்)

**தீமந்த்:** நேரமாச்சு, உனக்கு பசிக்க வில்லையா?

**ஹம்சா:** ஆமாம். இன்று வந்து....

(பேசிக் கொண்டிருந்த ஹம்சா சட்டென்று நிறுத்திக் கொள்ளுகிறாள்)

**தீமந்த்:** இன்று என்ன?

**ஹம்சா:** இன்று தனியாக காரணமிருக்கு...

**தீமந்த்:** அது என்ன? ஏதாவது சொந்த விஷயமா?

**ஹம்சா:** இல்லை. இல்லை. இன்று எனக்குப் பிறந்த நாள்.

(ஒரு ஆள் உள்ளே நுழைகிறான்)

**ஹம்சா:** ஒகோ! நீயா வந்திருக்கிறே?

**வந்தவன்:** ஆமாம்.

**ஹம்சா:** என்ன சொல்லிவிட்டாங்க?

**வந்தவன்:** நரேஷ் ஐயா அங்கேயே சாப்பிடுவாங்க'ன்னு சொல்லி அனுப்பினாங்க.

**ஹம்சா:** ஏன்? இன்று என்ன விசேஷம்?

**வந்தவன்:** இன்று உர்சுலா அம்மாவுக்குப் பிறந்த நாள் இல்லே? அதாலேதான்...

(ஹம்சா-தீமந்த் இருவருடைய பார்வையும் சந்திக்கிறது. ஹம்சா உடனே தன் பார்வையை வேறுபுறம் திருப்பிக் கொள்கிறாள்)

**ஹம்சா:** சரி, நீ போ.

**தீமந்த்:** ஏம்பபா! நரேஷ் ஐயா அங்கே எப்பொ வந்தாரு?

**வந்தவன்:** ஏழு, எட்டு மணி இருக்கலாம்.

(போகிறான்)

(தீமந்த் உதட்டைக் கடித்துக் கொள்ளுகிறான். ஹம்சா முகத்தைத் திருப்பிக் கொள்கிறாள்)

**தீமந்த்:** ஹம்சா நான் வருகிறேன். உனக்கு இன்று பிறந்த நாள் என்று எனக்கென்ன தெரியும்? முதல்லேயே தெரிஞ்சிருந்தா ஏதாவது அன்பளிப்பு வாங்கி வந்திருப்பேன். காலையிலே வர்றேன் நரேஷ் கிட்டச் சொல்லு.

**ஹம்சா:** நீங்க சாப்பிட்டாச்சா?

**தீமந்த்:** இன்னும் இல்லை.

**ஹம்சா:** இங்கேயே சாப்பிடலாமே?

(தீமந்த் ஒரு கணம் யோசிக்கிறான்)

**தீமந்த்:** சரி.

(இருவரும் உள்ளே செல்கிறார்கள்)

(திரை விழுகிறது)

## காட்சி 2

இடம்: (ஜகதீஷ் சந்திரனின் இல்லத்தின் வரவேற்பறை. ஜகதீஷ் சந்திரன், விமலா, உர்சுலா, மற்றும் நரேஷ் உட்கார்ந்துள்ளனர்)

**விமலா:** (நரேஷிடம்) இன்னிக்கு உர்சுவிற்கு இரட்டிப்பு மகிழ்ச்சி. இல்லையா உர்சூ?

(உர்சுலா தரையை நோக்குகிறாள்)

நரேஷ்: அப்படியா? என்ன விஷயம்?

(நரேஷ் உர்சுவாவை நோக்குகிறான். அவள் மௌனமாக இருக்கிறாள்)

**விமலா:** இவள் கல்கத்தாவில் ஒரு கண்காட்சிக்கு படம் வரைந்து அனுப்பியிருந்தாள். அதில் இவளுக்குப் பரிசு கிடைத்திருக்கிறது.

**நரேஷ்:** அப்படியா! ரொம்ப சந்தோஷம். பரிசுத் தொகை எவ்வளவு?

**உர்சுலா:** தொகை அதிகமில்லை. ஐந்து ரூபாய்தான்.

**நரேஷ்:** அதனால் என்ன? பரிசு கிடைத்தது என்பது தானே முக்கியம்? அது எத்தனை தொகை என்பதில்லையே! பரிசுத் தொகை எத்தனை பேருக்கு பங்கிடப்பட்டது?

**உர்சுலா:** பதினைந்து பேருக்கு.

**நரேஷ்:** அந்த ஓவியத்தை திருப்பி அனுப்பிச்சாங்களா? என்னிடம் இதைப் பற்றி ஒண்ணுமே சொல்ல லியே!

**உர்சுலா:** சொல்றதுக்கு அப்படியென்ன இருக்கிறது?

**நரேஷ்:** நல்லாச் சொன்னே போ! நம் பெண்களிடையே இது ரொம்ப அபூர்வம், இல்லையா?

(விமலா எழுந்து போய்விடுகிறாள்)

**ஜகதீஷ்:** (நரேஷிடம்) உனக்கும் சித்திரத்தில் ஆர்வ முண்டா?

**நரேஷ்:** இல்லையப்பா, உர்சுலாவின் ஓவியங்களை மட்டும் பார்க்கும் ஆவலுண்டு. அவ்வளவுதான்.

**ஜகதீஷ்:** சங்கீதத்தில்...

**நரேஷ்:** கேட்க மட்டும் பிடிக்கும்.

**உர்சுலா:** எனக்கும் அப்படித்தான்.

**நரேஷ்:** பாட விருப்பமில்லையா?

**ஜகதீஷ்:** யாருக்கு? உர்சுவுக்கா?

நரேஷ்: ஏன்?

**ஜகதீஷ்:** அட! இவளை விட நான் நல்லாப் பாடுவேன். இல்லையா உர்சூ?

**உர்சுலா:** நீங்க பாட்டு படிச்சீங்க இல்லே?

**நரேஷ்:** 'ஆமாம். நீயும் கத்துக்கிட்டா நல்லாப் பாடலாம். உனக்குப் பிரமாதமான குரல்.

**ஜகதீஷ்:** அப்படி யார் சொன்னது?

**நரேஷ்:** யாராக இருந்தால் என்ன? சொன்னது சரி தான்.

(உர்சுலா எழுந்து விடுகிறாள். சற்று நேரத்திற்குப் பிறகு ஜகதீஷும் உள்ளே போகிறான். உர்சுலா தனக்குள் மெதுவாகப் பாட்டை முணுமுணுக்கிறாள். நரேஷ் சாளரத்தின் வழியே வானத்தை நோக்கிய வண்ணமிருக்கிறான். உர்சுலா ஒரு புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு உட்காருகின்றாள்.

**நரேஷ்:** என்ன புத்தகம் உர்சுலா?

**உர்சுலா:** "திருமணம் வெற்றிகரமாக அமைவது எப்படி?"

**நரேஷ்:** (சற்றே வியப்புடன்) திருமணம் வெற்றிக்கரமாவது எப்படியா?

**உர்சுலா:** ஆம். ஏன் அப்படிக் கேட்கிறீர்கள், ஆச்சரியமா...

**நரேஷ்:** தலைப்பு ரொம்ப விசித்திரமா இருக்கு. இல்லே?

**உர்சுலா:** ஏன்?

**நரேஷ்:** திருமணம் என்பது வியாபாரமா என்ன? மனிதன் உழைத்து பாடு பட்டு அதை வெற்றிகரமாக்குவதற்கு? திருமணம் பத்தி தனியா ஒரு புத்தகம் எழுத என்ன இருக்கு? இது அப்படியொரு ஆழ்ந்த கம்பீரமான விஷயமா?

**உர்சுலா:** திருமணம் என்பது ஆழ்ந்த கம்பீரமான விஷய மில்லையா? இதைப் போல புனிதமான...

**நரேஷ்:** பொய். எல்லாம் பகட்டு. 'கல்யாணம்' என்பது மிகச் சிறிய விஷயம். இதனை தீவிரமாக, முக்கியமானதாக எடுத்துக்கிட்டா ஏமாற்றம் தான் கிடைக்கும். நீ வாடகை வீட்டில் வசிக்கிறாய். சரிதானே?

**உர்சுலா:** ஆமாம்.

**நரேஷ்:** நீ விரும்புவதெல்லாம் இதிலிருக்கிறதல்லவா? அதாவது நீ நினைப்பது போல் இந்த வீடு இருக்குதா?

**உர்சுலா:** இல்லை. ஆனால் வாடகை வீட்டில் அதையெல்லாம் எப்படி எதிர்பார்க்கலாம்?

**நரேஷ்:** தினமும் இப்படி குறைப்படுகிறாய்தானே?

**உர்சுலா:** இல்லை. இது ஒரு பெரிய விஷயமே இல்லை. ஆனால் திருமணம்...

**நரேஷ்:** உண்மைதான். திருமணத்தைப் பெரிய விஷயமா நினைச்சு முணுமுணுக்க உரிமை வேண்டியதுதான். ஆனால் உண்மை என்னன்னு கேட்டா ஒரு ஆணும் பெண்ணும் திருமணத்தை மிகச் சாதாரணமானதாகக் கருதினால், இத்தனை முணுமுணுப்பு, இத்தனை நிராசை, இத்தனை துயர மெல்லாம் இருக்காது. வாடகை வீட்டில் வாழ்ந்து காரியங்களை நடத்துவது போல் திருமணத்தையும் கொண்டு செலுத்தணும்.. கணவன், மனைவியின் கண்ணோட்டம் விசாலமா பரந்ததா இருக்கணும். அவ்வளவுதான்.

**உர்சுலா:** நீங்களும் ஹம்சா அக்காவும் இந்தக் கண்ணோட்டத்துடன்தான் வாழறீங்களா?

**நரேஷ்:** பாவம் அவளுக்கு கண்ணோட்டம் அது இதுன்னா என்ன..ன்னே தெரியாது. திருமணம் என்றால் என்ன என்கிற ஞானம் கூட கிடையாது.

**உர்சுலா:** அட...நீங்க ஒண்ணு!

**நரேஷ்:** ஆமாம். நான் நிசமாத்தான் சொல்றேன்.

**உர்சுவா:** உண்மை என்ன...ன்னு நான் சொல்றேன். ஆண்களின் துச்ச மான எண்ணங்கள் எழலாம். ஆனால் பெண்களுக்கு திருமணம் வாழ்வின் நம்பிக்கை, திருப்தி...

**நரேஷ்:** இது உன்னைப் போன்ற பெண்களுக்கு.

**உர்சுலா:** இல்லை. எல்லாப் பெண்களுக்கும்தான். குடிசையாக இருந்தாலென்ன. அரண்மனையாக இருந்தாலென்ன, பெண், பெண்தானே!

**நரேஷ்:** ஆனால் பெண்ணுக்குப் பெண் வேறுபாடு உண்டு.

**உர்சுலா:** இருக்கலாம். ஆனால் இந்த விஷயத்தில் எல்லாப் பெண்களுக்கும் ஒரேமாதிரிதான் எண்ணம்.

**நரேஷ்:** யாருக்குத் தெரியும். எனக்கு அப்படித் தோணலே!

**உர்சுலா:** இது பொய். ஒரு விஷயம் சொல்லட்டுமா?

**நரேஷ்:** என்ன?

**உர்சுலா:** ஹம்சா அக்கா பேரில் உங்க மனசிலே எவ்வளவு அன்பு இருக்குன்னு உங்களுக்கே தெரியாது.

**நரேஷ்:** ஆனால் உனக்கெப்படித் தெரியும்?

**உர்சுலா:** ஒகோ! இது ரொம்ப எளிது. உங்க ரெண்டு பேரையும் பார்த்துத் தெரிஞ்சுக்கிட்டதுதான்.

**நரேஷ்:** எதைப்பார்த்து?

**உர்சுலா:** நீங்க அக்காகிட்ட நடந்துக்கிட்ட முறையைப் பார்த்துத்தான். என் அண்ணா இப்படித்தான். என்னிடம் அளவற்ற பிரியம். அதனால் மிகவும் தொல்லை கொடுப்பான். அவனுடைய தொந்தரவைக் கண்டு எனக்கு எரிச்சலாக, கோபமாக வரும். அவனை சோதிப்பதற்காக...

**நரேஷ்:** என்ன செய்தே?

(விமலா வருகின்றாள்)

**விமலா:** வாங்க! கீழே போகலாம். எல்லாரும் கீழே காத்துக்கிட்டிருக்காங்க.

(எல்லாரும் கீழே செல்லுகின்றனர்)

(திரை விழுகின்றது)

## காட்சி 3

(நேரம்: பகல். இடம்: நரேஷின் இல்லத்தில் வரவேற்பறை. ஹம்சாவும் தீமந்தும் அமர்ந்திருக்கின்றனர்.

**தீமந்த்:** நீ செய்தது கொஞ்சம்கூட சரியில்லே!

**ஹம்சா:** என்னது?

**தீமந்த்:** நீ பசியோடவே இருக்கே!

**ஹம்சா:** ஒண்ணும் இல்லே. அதைப் பற்றி என்ன இப்ப...?

**தீமந்த்:** எதுக்காக இருக்கணும் இப்படி?

**ஹம்சா:** எனக்கே தெரியாது.

**தீமந்த்:** ஏன் தெரியாது? அவன் சாப்பிடாமல் பசியோடா இருக்கப் போறான்?

**ஹம்சா:** அவர் விஷயம் வேறு.

**தீமந்த்:** ஏன் வேறு? உன் வீட்டிலே தினமும் இப்படி ஏதாவது நடந்துக்கிட்டு தானிருக்குது.

**ஹம்சா:** அப்படி ஒண்ணும் நடக்கிறதில்லை. பெண்களான எங்களுக்கு இது சாதாரண விஷயம். உங்களுக்குத்தான் விந்தையாகத் தோன்றுகிறது.

(இதற்குள் பரபரப்புடன் நரேஷ் நுழைகிறான்)

**நரேஷ்:** த்ஸொ...த்ஸொ.. ஹம்சா இன்னிக்கு உனக்குப் பிறந்த நாள்னு எனக்கு சுத்தமா மறந்தே போச்சு.

**ஹம்சா:** பரவாயில்லை. அதனாலென்ன?

**நரேஷ்:** அட...தீமந்தா? நீ எப்பொ வந்தே?

**தீமந்த்:** நீ போன போது.

**நரேஷ்:** வந்து...ஹம்சாவுக்குத் தெரியும். இன்னிக்கு கொஞ்சம் அவசர வேலை. வழியில் ஜகதீஷைச் சந்திச்சேன். அப்படியே வீட்டிற்கு இழுத்துக் கொண்டு போய்விட்டார். அங்கேயே சாப்பாடு. நல்ல வேளை. இன்று ஹம்சாவின் பிறந்த நாளென்று திடீரென்று நினைவு வந்தது. உடனே ஒடோடியும் வந்தேன்.

**தீமந்த்:** ரொம்ப நல்லது.பண்ணினே. அடே, கொஞ்சமாவது வெட்கம் ரோசம் இருந்தா ஹம்சாவைச் சாப்பிடச் சொல்லு. பாவம், இவள் இன்னும் பசியோடெ இருக்கா.

**நரேஷ்:** அட...டா... ஹம்சா! நீ இன்னுமா சாப்பிடவில்லை? ஏன்? நான்தான் உனக்கு சொல்லி அனுப்பினேனே? அந்த ஆள் வரலையா?

**ஹம்சா:** வந்திருந்தானே!

**நரேஷ்:** பின்னே என்ன?

**ஹம்சா:** எனக்கு சாப்பிடத் தோணலே.

**நரேஷ்:** பழையபடி எனக்குத் தோணலே, பிடிக்கலே எல்லாம் வந்து விட்டதா? ஏன் விருப்பமில்லை? உன் மனசிலே இருந்து அந்தப் பழைய முள்ளை இன்னமும் நீ எடுத்தெறியவில்லை.

**ஹம்சா:** உங்களுக்கு ஏன் கோபம்? எனக்கு சாப்பாடு வேண்டாம். அவ்வளவுதானே!

**நரேஷ்:** உஸ்...உன்னிடம் பேசிப்பேசி எனக்கு வெறுத்துப் போச்சு. சுத்த நாட்டுப்புறம். இந்தப் பத்தாம் பசலித்தனத்தை நீ எப்பொ விடப் போகிறாய்? பட்டினி கிடந்து கிடந்து உடம்பு குச்சியாக ஆகிவிட்டது.

**தீமந்த்:** இவ்வளவெல்லாம் நினைக்கிறவனாக இருந்தால் நீ இங்கே வீட்டிலே இருந்திருக்க வேண்டும்.

**நரேஷ்:** ஆமாம் சரிதான். நான் வரவில்லை. அதனால் என்னவாகிவிட்டது பெரிசாக? அதற்குப் போய் இப்படியா நடந்து கொள்வது?

**தீமந்த்:** இது அவரவர் உணர்ச்சியைப் பொறுத்தது.

**நரேஷ்:** நீயும் முட்டாள்தான். இதில் உணர்ச்சி எங்கிருந்து வந்தது?

**தீமந்த்:** சரி. சரி இந்த உணர்ச்சி புரியாவிட்டால் போகட்டும். ஆனால் மனைவியின் பல் விழுந்தால் அதற்காக மாபெரும் கல்லறை எழுப்பு கிறார்களே அதை என்ன சொல்றே?

**நரேஷ்:** நீ ஏன் புரிஞ்சுக்க மாட்டேங்கிறே? வேறு வழியில்லாமல் நான் இன்று வெளியே இருக்க வேண்டிவந்தது.

**ஹம்சா:** அதனாலென்ன! நீங்கதான் வந்துட்டீங்களே! இது போதாதா?

**தீமந்த்:** இது ரொம்பவே அதிகம். சரி. சாப்பிடு.

**நரேஷ்:** ஹம்சா எழுந்திரு, பிடிவாதம் செய்யாதே.

(ஹம்சா எழுந்து நின்று நரேஷைப் பார்க்கிறாள்)

என்னடா தொல்லையாப் போச்சு? மனுசனுக்கு இரண்டு நிமிடம் நிம்மதி யில்லையே?

**தீமந்த்:** அப்படியா?

**நரேஷ்:** பின்னே என்ன? எத்தனை அன்போட இங்கே வந்தேன் தெரியுமா? வந்ததுமே வீணாக தர்க்கம் செய்யறா பாரு.

**தீமந்த்:** அட! உனக்குக் கூட அன்பிருக்கிறதா?

**நரேஷ்:** ஏன் அப்படி கேட்கிறே?

**தீமந்த்:** நீதான் உணர்ச்சி, எண்ணம் என்றால் என்னன்னு கேட்கிறாயே!

**நரேஷ்:** நீ சரியான முட்டாள்தான்.

**தீமந்த்:** உம்...அப்படியா?

**நரேஷ்:** பின்னே என்ன? நான் சொன்னது இம்மாதிரி தவறான எண்ணங்கள், உணர்ச்சி கூடாதென்றுதானே!

**தீமந்த்:** நீ நினைப்பதுதான் சரி, மற்றவங்க நினைப்பது தவறு. அப்படித் தானே?

**நரேஷ்:** ஊகூம். நீயும் என்னைப் புரிந்து கொள்ள வில்லையே? இவள் இப்படி பிடிவாதம் பிடிக்கிறது நல்ல உணர்ச்சியா? ஒரு இடத்துக்குப் போனா அவங்க அனுமதியோடதானே வர முடியும்? இவள் புரிந்து கொள்ள வில்லையே! இவள் இப்படித்தான் உடம்பை உருக்கிக் கொண்டு விட்டாள். இவளுடைய பழைய போட்டாவைப் பார்த்திருக்கிறாய் அல்லவா? (ஒரு புகைப்படத்தைக் காண்பிக்கிறான்) அஞ்சு வருடத்துக்கு முன்னாலே எவ்வளவு ஆரோக்கியமா இருந்தாள்.

**தீமந்த்:** அழகாகவுமிருந்தாள்.

**நரேஷ்:** ஆனால் இன்று?

(ஹம்சா உள்ளே பிரவேசிக்கிறாள்)

**தீமந்த்:** என்ன அவசரம்? இவ்வளவு சீக்கிரமா சாப்பிட்டு விட்டாயா?

**ஹம்சா:** எனக்கு என்ன அவசரம்?

**நரேஷ்:** ஹம்சா இன்னிக்கு என்ன புரோகிராம்? சொல்லு.

**ஹம்சா**:என்ன புரோக்ராம்? ஒன்றும் வேண்டாம்.

**நரேஷ்**: இல்லை ஹம்சா! உன் விருப்பம் என்ன? சொல்லு. வெளியே போகலாம் இல்லே, நாடகம் பார்க்கப் போகலாம். தீமந்த்! நாடகம் பார்க்கப் போவோமா? 'ருபஹலி கிரண்' நல்ல நாடகமாம். சரி...நாடகத்துக்காவது போகலாம். நீயும் வா..

(தீமந்த் நரேஷைப் பார்க்கிறான்)

என்ன பார்க்கிறாய்? வருகிறாயா?

**தீமந்த்**: இல்லை. இன்று ஹம்சாவின் பிறந்த நாள். நீங்க ரெண்டுபேரும் போய் வாங்க.

**நரேஷ்**: அதனாலென்ன? நீயும் வந்தா இன்னும் மகிழ்ச்சியாக இருக்கும்.

**ஹம்சா**: ஆமாம். தீமந்த் அண்ணா, நீங்களும் வரணும். இந்த நாடகத்தைப் பார்க்கணும்னு சொல்லிட்டிருந்தீங்களே!

**தீமந்த்**: ஆமாம். ஆனால் அப்புறம் போய்ப் பார்க்கிறேன். இப்ப நான் கிளம்பறேன் (போகிறான்)

(திரை விழுகிறது)

## காட்சி 4

இடம்: நரேஷின் இல்லத்தில் வரவேற்பறை. நரேஷ் யாரையோ எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறான். அறையில் குறுக்கும் நெடுக்குமாக சுற்றிச் சுற்றி வருகிறான்.

**நரேஷ்**: (தனக்குள்) இன்னும் ஏன் வரவில்லை?

(ஹம்சாவின் புகைப்படத்திற்கு எதிரே நின்று கண்ணிமைக்காமல் அதையே நோக்குகிறான். இதற்குள் பின்னாலிருந்து ஹம்சா வந்து விடுகிறாள். வந்தவள் திகைத்து நிற்கிறாள். சில நிமிடங்களுக்கு பின்னர் நரேஷ் அவளைப் பார்த்து விடுகிறான்) லேசான கோபத்துடன்—

**நரேஷ்**: ஏன்?

**ஹம்சா**: ஒன்றுமில்லை.

**நரேஷ்**: எதற்காக இப்படி சிலைபோல் நிற்கிறே? யாராவது பயந்து விடமாட்டாங்க?

(ஹம்சா அவனை நெருங்கி தோள் மீது கையை வைக்கிறாள்)

**ஹம்சா**: ஏன்? பயமாக இருக்கிறதா?

(நரேஷ் இரண்டொரு வினாடி ஹம்சாவையே உற்று நோக்குகிறான்)

**நரேஷ்**: பின்னே என்ன? நீதான் ஓசைப்படாமல் வந்து நிற்கிறாயே!

**ஹம்சா**: உங்களிடம் ஒரு விஷயம் கேட்கலாமா?

(ஹம்சா நரேஷின் இரு கரங்களையும் பற்றிக் கொள்கிறாள்)

**நரேஷ்:** என்ன அது?

**ஹம்சா:** நிஜத்தைச் சொல்லணும்.

**நரேஷ்:** நான் என்ன பொய்யா சொல்றேன் எப்பவும்?

**ஹம்சா:** அப்படி இல்லை. ஆனால் இந்த விஷயத்தில் உண்மையைச் சொல்லணும்.

**நரேஷ்:** (எரிச்சலுடன்) சரி. சரி. கேளு. இதற்கு இத்தனை பீடிகையா?

**ஹம்சா:** இன்று நீங்க கடைத்தெருவிற்கு போயிருந்தீங்க இல்லே?

**நரேஷ்:** ஆமாம். அதற்கென்ன?

**ஹம்சா:** எதற்காகப் போனீர்கள்?

**நரேஷ்:** எதற்கு இந்தக் கேள்வி?

**ஹம்சா:** எனக்குத் தெரியணும்.

**நரேஷ்:** இதற்கெல்லாம் பதில் கூற நான் கட்டுப் பட்டவன் அல்ல.

**ஹம்சா:** நீங்க கட்டுப்பட்டவர் என்று நான் எப்பொழுது சொன்னேன்?

**நரேஷ்:** உனக்கு சம்பந்தமில்லாத விஷயம் இது.

(ஹம்சா தன் கையை எடுத்துக் கொள்ளுகிறாள்)

**ஹம்சா:** நீங்க ஏதாவது வாங்கினீங்களா? சொல்லுங்க.

**நரேஷ்:** சொல்ல முடியாது. உன்னிடம் இது பற்றி எதுவும் சொல்ல மாட்டேன்.

(வேலைக்காரன் உள்ளே வருகிறான். நரேஷ் அவனருகில் சென்று அவன் கையிலிருந்த பாக்கெட்டை வாங்கிக் கொள்கிறான்) சரி, நீ போகலாம்.

(வேலைக்காரன் போய்விடுகிறான்)

**ஹம்சா:** இது என்னது?

**நரேஷ்:** ஒன்றுமில்லை. உனக்கென்ன அதைப்பற்றி. இது என் சொந்த விஷயம்.

(மேஜையின் மீது பாக்கெட்டை வைக்கிறான்)

**ஹம்சா:** இதற்குள்ளே கடிகாரம் இருக்குன்னு சொல்லலாம் இல்லே?

(நரேஷ் ஹம்சாவைப் பார்க்கிறான்)

**நரேஷ்:** சரி, சரி, தெரியுமோ இல்லியோ? பின்னே எதற்காக கேட்கிறே?

**ஹம்சா:** இது உர்சுலாவிற்கு. நான் சொல்வது சரிதானே?

**நரேஷ்:** ஆமாம். சரிதான். இப்ப நிம்மதிதானா? போய் உன் வேலையைப் பாரு.

(நரேஷ் ஒரு நாற்காலியில் பத்திரிகையொன்றை எடுத்துக் கொண்டு உட்காருகிறான். பிறகு ஹம்சாவும் அங்கிருந்து வெளியேறுகிறாள். நரேஷ் மேஜையின் மீதுள்ள பாகெட்டைப் பிரித்து அதற்குள் ஒரு கடிதத்தை வைக்கிறான். சற்று நேரத்திற்கெல்லாம் வேலைக்காரன் டீ கொண்டு வரு கிறான்)

ஏம்பா? சதுர்புஜ் இன்னும் ஏதாவது கொடுத்திருப்பானே?

**வேலைக்காரன்:** ஆமாங்க ஐயா. வெள்ளித்தட்டுத் தந்தான். அதைக் கொடுத்தாச்சுங்க.

**நரேஷ்:** எங்கே?

**வேலைக்காரன்:** ஜகதீஷ் ஐயா வீட்டில்.

**நரேஷ்:** சரி. நல்லது.

(வேலைக்காரன் போகிறான். சிறிது நேரத்தில் ஹம்சா வருகிறாள். அவள் கையில் ஒரு மலர் ஜாடி)

**ஹம்சா:** ஜகதீஷ் அண்ணா இந்த பூஜாடியை அனுப்பியிருக்கிறார்.

**நரேஷ்:** இங்கே கொண்டு வா பார்க்கலாம்!

(நரேஷ் அந்த அலங்கார மலர் ஜாடியைக் கையில் வாங்கிப் பார்க்கிறான். அதில் ஒரு கடிதம் இருக்கிறது! அதைப் படிக்கிறான்) இது உனக்கல்லவா அனுப்பியிருக்கிறான்?

**ஹம்சா:** ஆமாம். நீங்களும் ஏதாவது அனுப்ப வேண்டும். சரிதானே? ஏதாவது அனுப்பினீங்களா?

**நரேஷ்:** இப்படிக் கேட்டு, நானென்ன அனுப்பினேன் என்பதைத் தெரிஞ்சுக்கப் பார்க்கிறே!

**ஹம்சா:** அதைத்தான் நான் மறந்தாச்சே! இன்னும் அனுப்பலேன்னா இப்ப அனுப்பிடுங்க. ஏன், கடிகாரத்தை அனுப்பலாமே!

**நரேஷ்:** பார்க்கலாம். உன்னுடைய ஆலோசனை தேவைப்படும்போது உன்கிட்ட கேட்டுக்கறேன். உள்ளே போ, போய் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய். சீக்கிரம் போகவேண்டும்.

(ஹம்சா சற்றுநேரம் மௌனமாக இருக்கிறாள். பிறகு சாளரத்தின் அருகே செல்லுகிறாள். ஒரு பாட்டு பாடுகிறாள்)

**நரேஷ்:** என்ன பாடுகிறாய்?

**ஹம்சா:** (பின்னால் திரும்பி) ஒன்றுமில்லை. ஏன்?

**நரேஷ்:** மெட்டே சரியில்லை.

**ஹம்சா:** சரியான மெட்டு எது?

**நரேஷ்:** எனக்கென்ன தெரியும்? எனக்குத் தெரிஞ்சா பாடமாட்டேனா? எனக்கு அப்படித் தோணிச்சு சொன்னேன். ஒரு சிறுமி வருகிறாள்.

ஓ! சுர்மா! வா! வா!

**சுர்மா:** ஒரு வேலையாக வந்தேன்.

**ஹம்சா:** (நரேஷிடம்) இந்த சுர்மா ரொம்ப நல்லாப் பாடுவா. (சுர்மாவிடம்) இவருக்கு பாட்டுன்னா ரொம்பப் பிடிக்கும்.

**நரேஷ்:** அப்படியா?

**ஹம்சா:** அன்று நடனத்தின் போது உங்களுக்குப் பிடிச்ச பாட்டைப் பாடியது இவதான்.

**நரேஷ்:** அப்படியா! ரொம்ப நல்லா இருந்தது.

**சுர்மா:** அப்படீன்னா? உங்களுக்கு துளியும் சங்கீத ஞானமே கிடையாது.

(நரேஷ் ஏதோ யோசனையில் ஆழ்ந்திருக்கிறான்)

எனக்கு சுத்தமா பாடவராது. (ஹம்சாவிடம்) நானொரு காரியமாக வந்திருக்கிறேன்.

**ஹம்சா:** உட்காரேன் (உட்காருகிறாள்)

**சுர்மா:** நான் இப்பொ எதுக்கு வந்தேன். சொல்லுங்க.

**ஹம்சா:** தெரியாது.

**சுர்மா:** நீங்க மிக இனிமையாப் பாடுறீங்கன்னு எல்லாரும் சொல்றாங்க. அதனாலே தான் வந்தேன். எனக்கு அந்தப் பாடலைக் கற்றுக் கொடுப் பீங்களா? இப்பொ நீங்க ரொம்ப நல்ல மூடிலெ இருக்கீங்க.

**ஹம்சா:** இல்லை. சுர்மா! எனக்கு அவ்வளவு நல்லாப் பாட வராது.

**சுர்மா:** நீங்க எவ்வளவு இனிமையாப் பாடுறீங்க தெரியுமா? தெருவில் போறவங்க அப்படியே நின்றுடறாங்க.

**ஹம்சா:** இந்த மெட்டுத் தவறாம். அண்ணா சொல்றாங்க.

**சுர்மா:** ஆண்களுக்கு என்ன தெரியும். பெண்களைப் பற்றியும் சங்கீதத்தைப் பற்றியும்? என்ன நரேஷ் அண்ணா! நான் சொல்வது சரிதானே?

**நரேஷ்:** நீ சொன்னா சரிதான்.

**சுர்மா:** பெண், இசை இந்த இரண்டின் மென்மையை உங்களால் என்ன புரிந்து கொள்ள முடியும்? ஆண்கள் கடினமான இதயம் கொண்டவர்கள் அதனால்...

**நரேஷ்:** நான் கூடவா?

**சுர்மா:** என்னால் எப்படிச் சொல்ல முடியும்? ஹம்சா அக்கா— எனக்கு அந்தப் பாட்டைக் கற்றுக் கொடுங்களேன். கர்பா நடனத்தின் போது பாடணும்.

(ஒரு கணத்திற்குப் பின் ஹம்சா பாடுகிறாள். மெல்ல மெல்ல அவளது குரல் உயர்ந்து ஒலிக்கத் துவங்குகிறது. ஹம்சா அதிலேயே தன்னை மறந்து லயித்து விடுகிறாள். சுர்மா கனவு காண்பவள்போல் பார்த்துக் கொண்டிருக்கிறாள். நரேஷ் மகிழ்ச்சியுடன் அமர்ந்திருக்கிறான். அவனது கண்களிலும் மகிழ்ச்சி மின்னலிடுகிறது.

(திரை விழுகிறது)

## காட்சி 5

(நேரம்: இரவு எட்டுமணி. இடம்: வரவேற்பறை, நரேஷும் ஹம்சாவும் அமர்ந்துள்ளனர்)

**நரேஷ்:** புறப்படு! ஹம்சா! தயாரா இருக்கே இல்லே?

**ஹம்சா:** நிறைய நேரமிருக்கிறதே! எனக்குக் கொஞ்சம் வேலையிருக்குங்க.

**நரேஷ்:** வேலை. வேலை. இன்னிக்குமா வேலை. எல்லாம் நாளைக்குப் பார்த்துக்கலாம்.

**ஹம்சா:** இன்னமும் தீமந்த் அண்ணா வரலியே!

**நரேஷ்:** இதோ வந்து விடுவான். நீ புறப்படத்தான் இரண்டு மணி நேரமாகுமே!

**ஹம்சா:** இல்லை.

**நரேஷ்:** என்ன இல்லை? என்னிக்கு நீ சீக்கிரம் தயாராகி இருக்கே? நேரமாச்சு நேரமாச்சுன்னு மண்டையை உடைச்சிண்டா ரெடியாவாய். இன்னும் என் டிரஸ் எடுத்து வைக்கவில்லை. அந்தப் பித்தானைத் தெச்சுட்டியா?

**ஹம்சா:** இல்லை—இதோ தெச்சுத்தாரேன்.

**நரேஷ்:** முதலெ அதைச் செய். எந்த வேலையை முதலில் செய்ய வேண்டுமோ அதை விட்டா. அவசிய மில்லாத வேலைக்காக கத்திட்டிருக்கா. உங்களுக்கெல்லாம் மூளையே கிடையாது. ஆண்ட வன் உன்னையெல்லாம் எதற்காகத்தான் படைச்சானோ!

(ஹம்சா உள்ளே போகிறாள். ஒரு நொடியில் தயாராகி வெளியே வருகிறாள்)

**ஹம்சா:** இந்தாருங்கள். பித்தான் தைத்தாகிவிட்டது.

**நரேஷ்:** தாங்க் யூ.

(நரேஷ் உள்ளே செல்லுகிறான். நரேஷ் தாறுமாறாகப் போட்டிருந்த நாற்காலிகளை ஹம்சா ஒழுங்குபடுத்துகிறாள். நரேஷ் உடை அணிந்து கொண்டு வெளியே வருகிறான்)

**ஹம்சா:** அடடா! ரமா அக்கா வீட்லே சுரபிக்குச் சொல்லி அனுப்பணுமே அவளையும்...

(நரேஷின் முகத்தில் அதிருப்தி தென்படுகிறது)

**நரேஷ்:** உனக்கு வேலை இல்லை. இப்பொ யார் போய் சொல்றது? அவங்க கிட்ட சொல்லணும்னு உன் கிட்ட யார் சொன்னது?

**ஹம்சா:** உங்ககிட்ட கேட்டுக்கிட்டுத்தானே அவங்களிடம் சொன்னேன்.

**நரேஷ்:** என்னிடம் ஏன் முதல்லேயே சொல்லலே? நான் என்ன கனவா கண்டு கொண்டிருந்தேன். இப்பொ போக நேரமில்லை. நான் போகவும் மாட்டேன்.

**ஹம்சா:** அவங்க தவறாக நினைச்சுப்பாங்க.

**நரேஷ்:** நினைச்சுக்கட்டுமே! இந்த ராத்திரி நேரத்தில் நான் போக மாட்டேன். ஒண்ணு மாத்தி ஒண்ணு தொந்தரவு கொடுத்துக்கிட்டே இருக்கே. நாடகத்துக்குப் போக முடியாதா?

**ஹம்சா:** வந்து...

**நரேஷ்:** வந்து, கிந்து எல்லாம் ஒண்ணும் இல்லே நீயும் வரமாட்டேன்னு தானே சொன்னே. இப்படி நாடகம் பார்க்கறதை விட பார்க்காமலிருப்பதே மேல்.

(சில நிமிடங்களுக்குப் பிறகு)

விடு போகவேண்டியதில்லை. நான் கிளப்பிற்கு போகிறேன்.

(போகிறான்)

(ஹம்சா நரேஷ் போவதைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். சற்று நேரத் திற்கு பின் அவள் எழுந்து நிற்கிறாள். மேஜையின் இழுப்பறையிலிருந்து ஒரு குறிப்புப் புத்தகத்தை எடுக்கிறாள். படித்துப் பார்க்கிறாள். இதற்குள் தீமந்த் வருகிறான். ஹம்சா அவசரமாக புத்தகத்தை உள்ளே வைத்து விடுகிறாள்)

**ஹம்சா:** வாங்க!

**தீமந்த்:** அவன் எங்கே?

**ஹம்சா:** வெளியே போயிருக்காங்க. நாடகத்துக்குப் போற எண்ணம் மாறிடிச்சு. உட்காருங்களேன்.

(இருவரும் அமருகின்றனர்)

**தீமந்த்:** மாறிடிச்சா? ஏன் அதற்குள் என்ன நடந்தது?

**ஹம்சா:** ஒன்றும் நடக்கவில்லை. எனக்கு உடம்பு கொஞ்சம் சரி இருக்கலே. அதனால் தான் இந்த மாற்றம்.

**தீமந்த்:** ஏன்? என்னாச்சு?

**ஹம்சா:** விசேஷமாக் ஒண்ணுமில்லை. கொஞ்சம் லேசாக தலையை வலிக்கிறது.

(தீமந்த் ஹம்சாவை உற்றுப் பார்க்கிறான். ஹம்சா, கால்கட்டை விரலால் தரையைக் கீறுகிறாள்)

**தீமந்த்:** அவன் எங்கே போனான்?

**ஹம்சா:** தெரியாது. பகல் பூரா வீட்டிலேயேதான் இருந்தாங்க. அதனாலே கொஞ்சம் வெளியே போயிருக்காங்க.

**தீமந்த்:** (மெதுவாக) ஹம்சா, இத்தனை எளிதா சொல்லிட்டே! அதை அப்படியே நம்பற அளவுக்கு நான் பச்சைப் பிள்ளை இல்லை தெரிஞ்சுக்க. நிச்சயம் ஏதோ நடந்திருக்கு. உன்னுடைய இல்லற வாழ்வின் அந்தரங் கங்களைப் பற்றி எனக்கு அறிந்து கொள்ள வேண்டியதேயில்லை. ஆனால் என்னை நம்பு. இதையெல்லாம் பார்த்து என் மனசு ரொம்ப வேதனைப் படுது தெரியுமா?

(ஹம்சா சிந்தனையிலாழ்கிறாள்) ஹம்சா! நானும் எத்தனை நாளா இங்கு வந்து போயிட்டிருக்கேன். உன் வாழ்க்கையைப் பார்த்துக்கிட்டுதான் இருக்கேன்.

**ஹம்சா:** அண்ணா! நீங்கள் அனாவசியமாகக் கவலைப் படுறீங்க. அப்படி யெல்லாம் ஒண்ணுமே யில்லை.

**தீமந்த்:** அதைத்தான் நான் பார்த்துக்கிட்டிருக்கேனே! நீயும் விட்டுக்

கொடுக்காமல் குடும்ப கௌரவத்தைக் காப்பாத்திக்கிட்டிருக்கே. ஒவ்வொரு பெண்ணும் இப்படித்தான் சொல்லுவா. கல்லானாலும் கணவன். புல்லானாலும் புருசன்னு சொல்லுவாங்க. ஆண்டவன் கூட கயல் விழியாளுக்கு கண்ணில்லாத கணவனைக் கொடுத்து சோதிப்பான்.

**ஹம்சா:** அப்படியெல்லாம் சொல்லாதீங்க. இதெல்லாம் பொய். அவர் அப்படிப்பட்டவர் அல்ல.

**தீமந்த்:** நீ சொல்லமாட்டாய் ஹம்சா! ஆனால் நான் தான் பார்க்கிறேனே! அவன் மிருகத்திலும் கேடுகெட்டவன். தனது இறுமாப்பில் உன்பால் செய்யும் கொடுமை அளவிற்கு மீறியது. உனது மென்மையான இயல்பு இதை எப்படித் தான் பொறுத்துக் கொள்கிறதோ! உனது அழகு நாளுக்குநாள் மங்கிக் கொண்டே வருகிறதை நீ எங்கே உணரப் போகிறாய்! இந்தப் புகைப் படத்திலுள்ள வனப்பு இன்று இல்லை.

**ஹம்சா:** எங்கள் மீது உங்களுக்கு அளவு கடந்த அன்பு. ஒருவேளை இதனால் தான்...

**தீமந்த்:** உன்மீது மட்டும்தான். நரேஷின்பால் என் மனதில் அக்கறையே கிடையாது.

**ஹம்சா:** அப்படிச் சொல்லாதீர்கள். அவர் உங்களது நண்பர். இந்தக் காலத்தில் உடன் பிறந்தவர்களை விட நண்பர்கள் தான் மேல்.

**தீமந்த்:** ஆம். ஆனால் அவனுக்கு அந்த அருகதை இல்லையே. ஹம்சா! நான் கேட்டால் நீ தவறாக எடுத்துக் கொள்ள மாட்டாயே!

**ஹம்சா:** என்ன?

**தீமந்த்:** நிஜத்தைச் சொல். நீ மகிழ்ச்சியுடன் இருக்கிறாயா?

**ஹம்சா:** ஆம். சந்தோஷமாகத்தான் இருக்கிறேன். எனக்கு என்ன குறை?

**தீமந்த்:** இல்லை. இப்படி பேச்சை மாற்றாதே. நரேஷுடன் சந்தோஷமாக வாழ்ந்து கொண்டிருப்பதாக நீ இதய பூர்வமாகச் சொல்ல முடியுமா?

**ஹம்சா:** இதோ பாருங்கள்...

**தீமந்த்:** நான் சொல்வதை முழுதும் கேள். ரொம்ப நாளாகவே இதை நேருக்குநேர் உன்னிடம் சொல்ல விரும்பிக் கொண்டிருந்தேன். இன்று உனது பிறந்த தினம். சகோதரன் என்ற நிலையில் சொல்லுகிறேன். நீ உண்மையில் சந்தோ ஷமாக இல்லை. நரேஷிடம் உனக்கு வெறுப்பேற்பட்டு விட்டது.

**ஹம்சா:** அட... என்ன இது?

**தீமந்த்:** நன்றாகக் கேட்டுக் கொள். உண்மையிலேயே அவன் மேல் உனக்குச் சலிப்பு ஏற்பட்டு விட்டதென்றால் என்னால் உனக்கு விடுதலை தர முடியும். அவனுக்கு பண நெருக்கடி. ஆண்டவன் எனக்கு நிறைய செல்வத்தைக் கொடுத்திருக்கிறார். ஆனால் எனக்கு அவ்வளவு அவசிய மில்லை. பின்னால் உன்னுடைய சுதந்திரத்தைக் கூட என்னால் திருப்பி அளிக்க முடியும். நீ விரும்பினால் என்னுடன் இருக்கலாம். எனக்கு உலகத்தைப் பற்றிய அக்கறையில்லை. சொல்லு. உன்னுடைய பதிலென்ன?

**ஹம்சா:** அண்ணா! நீங்கள் உடன் பிறந்தவளைப் போல் அக்கறையுடன் கேட்கறீர்கள். அதனால் சொல்ல வேண்டியிருக்கிறது. இன்று காலை வசந்த விழாப் பற்றிக் கூறினீர்களே நினைவிருக்கிறதா?

**தீமந்த்:** ஆம். நான் அதுபற்றி கூறும்போது நீ ஏதோ யோசனையில் ஆழ்ந்துவிட்டாய்.

**ஹம்சா:** விழாவுக்கு நாங்களிருவரும் போவதாக இருந்தது. ஆனால் லேசான சச்சரவு மூண்டது. அவர் மட்டும் போனார். பிறகு எனக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. பச்சாதாபம் ஏற்பட்டது. அப்பொழுது என் மனத்தில் அவரைப் பற்றித் தவறான எண்ணங்கள் தோன்றிவிட்டன.

**தீமந்த்:** இப்பொழுது நல்லெண்ணங்கள் தோன்றுகிற தாக்கும்?

**ஹம்சா:** அப்புறம் ஒரு மணி நேரம் அழுதுகொண்டிருந்தேன். கடைசியில் (தயங்குகிறாள்)

**தீமந்த்:** ம்... பிறகு?

**ஹம்சா:** ஒருவரிடமும், அவரிடம் கூடச் சொல்லக் கூடாது. என்ன?

**தீமந்த்:** சரி.

**ஹம்சா:** மனம் மிகவும் வெறுத்துப் போய்விட்டது. ஒரு முறை வாழ்க்கையை முடித்துக் கொள்ளலாம், உயிரை விட்டு விடலாம் என்று தோன்றியது.

**தீமந்த்:** அச்சோ...ச்சோ...!

**ஹம்சா:** அவர் திரும்பி வருவதற்குள் எல்லாம் முடிந்து விட வேண்டும் என்று நினைத்தேன்.

**தீமந்த்:** அப்புறம்?

**ஹம்சா:** எனக்கொன்றுமே தோன்றவில்லை.

(ஹம்சா தீமந்தைப் பார்க்கிறாள்)

**தீமந்த்:** அப்படித்தானிருக்கும். என்னால் இது பற்றி கற்பனை செய்ய முடிகிறது. பிறகு!

**ஹம்சா:** நான் பித்துப்பிடித்தவள் போல் இங்குமங்கும் சுற்றிக் கொண்டிருந்தேன். அவருக்காக நான் இறக்கவும் சித்தமாக இருந்தேன். ஆனால் அவரை விட்டுப் பிரியவும் மனம் வரவில்லை. அவருக்காக வாழ வேண்டுமென்றும் தோன்றியது. இப்படியே எத்தனை நேரம் கழிந்ததோ தெரியாது. ஒரு கணம் அழுதேன். மறுகணம் யோசித்தேன்....உங்களுக்குச் சிரிப்பு வருகிறதல்லவா?

**தீமந்த்:** ஆமாம்...இல்லை அப்புறம் என்ன நடந்தது?

**ஹம்சா:** சற்று நேரத்திற்கு பிறகு சூட்கேசிலிருந்து அவரது கடிதங்களை எடுத்துக் கொண்டு நான் கண்ணீர் பெருக்கினேன்.

**தீமந்த்:** அவனுடைய கடிதங்களா?

**ஹம்சா:** ஆமாம். திருமணத்தின் போது எடுத்த எங்கள் போட்டோ டிராயரில் கிடந்தது. அதைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. ஆனால் டிராயரின் சாவி அவரிடமிருந்தது.

**தீமந்த்:** உம். அப்புறம்.

**ஹம்சா:** அப்புறம் என்ன? நீங்க சிரிப்பீங்க. நான் பூட்டைத் திறந்து அதை எடுத்துவிட்டேன்.

**தீமந்த்:** பலே! நீ பெரிய வீராங்கனைதான். இல்லையா?

(ஹம்சா தரையை நோக்குகிறாள்)

**ஹம்சா:** இல்லை. நான் என்ன செய்கிறேன் என்பதை நான் உணரவே இல்லை. டிராயரைத் திறந்ததும் இந்த டயரி கிடைத்தது. பாருங்கள் இது தான் அது. (மேஜையின் மீதிருந்து எடுத்து ஒரு பக்கத்தைத் திறக்கிறாள்) தீமந்த் அண்ணா! இதைப் படித்துவிட்டுச் சொல்லுங்கள்.

**தீமந்த்:** டயரியா?

(தீமந்த் அதை எடுத்து படிக்கிறான்)

**ஹம்சா:** ஆமாம். கொஞ்சம் உரக்கத்தான் படியுங்களேன்.

**தீமந்த்:** (படிக்கிறான்) இந்த டயரியை எதற்காக எழுதுகிறேன் என்று எனக்கே தெரியாது. என்னைத் தவிர எந்த மனிதனுடைய கரங்களும் இதைத் தீண்டவில்லை. இருந்தாலும் மனம்கேட்க வில்லை. அதனால் எழுதுகிறேன். இன்றிலிருந்து கிட்டத்தட்ட எட்டு வருடங்களுக்கு முன்னர் ஹம்சா என்னுடையவளாகி என் வீட்டிற்கு வந்தாள். உனக்கு கல்யாணமாகி எட்டு வருஷமாயிடுச்சா?

**ஹம்சா:** ஆமாம்.

**தீமந்த்:** (படிக்கிறான்) இன்றைய விஞ்ஞான யுகத்தில் ஒவ்வொரு விஷயத்தையும் ஆராய்ந்து, பகுத்தறிந்து பார்ப்பது ஒரு நாகரீகமாக இருக்கிறது. ஹம்சாவுடன் எனது உறவு பற்றியும் நான் ஆராய்ந்து பார்க்கிறேன். நான் சந்தோஷமாக, இன்பமாக வாழ்கிறேனா? ஹம்சா சந்தோஷமாக இருக்கிறாளா? நானோ அல்லது அவளோ வேறொருவரை மணந்திருந்தால் சந்தோஷமாக இருந்திருக்க முடியாதா? இந்தக் கேள்விக்கு விடையளிப்பது சுலபமில்லை. ஆயினும் ஹம்சா இல்லாமல் ஒரு கணம் கூட என்னால் உயிர் வாழமுடியாது என்பது எனக்குத் தெரியும். ஹம்சாவின் உள்ளத்தை என்னால் பூரணமாக அறிந்து கொள்ள முடியவில்லை. அவளுடைய அதிருப்திக்கு காரணம் நான்தான் என்பது எனக்கு நன்றாக தெரிகிறது. அவள் மீது கொள்ளை அன்பு வைத்திருக்கிறேன் என்பதை அவளுக்கு எப்படி புரிய வைப்பது, இது மிகவும் கடினமான காரியம் என்னுடைய போக்கு எனக்கே புரிவதில்லை. மனோதத்துவ நிபுணர்களாலும் இதைப் புரிந்து கொள்ள இயலவில்லை. நான் தெளிவாகக் கூறுகிறேன். ஹம்சாவைத் தவிர வேறு யாவரிடமும் நான் சரியாகத்தான் நடந்து கொள்கிறேன். இன்று வரை யாரிடமும் காரணமின்றி சச்சரவிட்டதில்லை. ஆனால் ஹம்சா முன்னால் வரும்போது மட்டும் நான் முற்றிலும் கொடியவனாக மாறி விடுகிறேன். என் மனதை அடக்க பலமுறை முயன்றிருக்கிறேன். ஆனால் பலனில்லை.

பின்னால் கழிவிரக்கம் ஏற்படுகிறது. மிகவும் வருந்துகிறேன். ஆனால் இதெல்லாம் அர்த்தமற்றது என்பது தெரிகிறது. அவளுடைய மென்மை யான இதயத்தைத் தாக்கிய பிறகு வெறும் கழிவிரக்கம் கொண்டு திருப்தி அடைவது சரியல்ல. நான் அவளுக்கு ஏற்றவனல்ல என்பது எனக்கு நிச்சயமாகத் தெரிகிறது. எனது விந்தையான சுபாவத்தைப் பற்றி அவளுக்கு விளக்கி கூறவும் முடியவில்லையே என்று மனம் வருந்துகிறது. தீமந்த் மூலமாக அவளிடம் நிலைமையை விளக்க நினைத்தேன். ஆனால் ஹம்சாவைப் பற்றிய பேச்சை எடுத்தாலே நான் பேச்சை மாற்றி விடுகிறேன். எனக்கு இதற்கு வழியே தெரியவில்லை. தோன்றவில்லை. ஹம்சா இதையெல்லாம் அறிந்தால் நடந்துபோன சம்பவங்களுக்காக என்னை மன்னித்து விடுவாள். ஆனால்...

**ஹம்சா:** போதும்! அண்ணா! உங்களுக்கு திருப்தியாயிற்றா இனியாவது பக்கத்தைப் படியுங்கள்.

**தீமந்த்:** (படிக்கிறான்) இன்று மிகவும் வருந்தத்தக்க சம்பவம் நிகழ்ந்தது. இதனை விரிவாக வருணிக்க என்னால் இயலாது. வீநிதா இன்றும் கலவர மடைந்து விட்டாள். விநிதா! யாரது விநிதா?

**ஹம்சா:** அவளொரு பேரழகி. அப்சரஸ், வன தேவதை என்பார்களே அந்த மாதிரி. உர்சுலாவின் தோழி.

**தீமந்த்:** ஓகோ! நான் அவளைப் பார்த்ததேயில்லை. (படிக்கிறான்) இப்படிக் கூறுவதுதான் உசிதம். அத்தகைய தெய்வீக அழகிற்குப் பொருத்த மான சொற்களே கிடைப்பதில்லை. அவளை கெட்டவள் என்று கூறுவது பாவம். இருந் தாலும்... ஓ கடவுளே! உலகத்தில் மிக அதிகமான துன்பத்தைத் தரக் கூடிய வஸ்து பேரழகு தான். அழகான ஒருவர் எப்படி பாபியாக முடியும்? இதுதான் எனக்குப் புரியவில்லை. எவ்வளவு கஷ்டப்பட்டு அவளுக்கு இதனை எடுத்துரைக்க வேண்டியிருந்தது. கடவுள் அவளுக்கு நல்வழி காட்டட்டும்.

ஒ..கோ...ஹம்சா...

**ஹம்சா:** பார்த்தீர்களா அவர் அப்படிப்பட்டவர் அல்ல.

**தீமந்த்:** ஆம்! அவன் மிக மிக நல்லவன்.

**ஹம்சா:** நான் அதிர்ஷ்டசாலிதான் இல்லையா? ஆமாம். ஒரு விஷயத்தை மறந்து விட்டேன். இன்று இவர் ஒரு கடிகாரம் வாங்கினார். அது உர்சுலா விற்காக இருக்குமென நான் நினைத்தேன். ஆனால்...

(மேஜையின் இழுப்பறையிலிருந்து கடிகாரத்தை எடுக்கிறாள். அதன் மீது ஒரு சீட்டு தொங்குகிறது)

பாருங்கள் இதை. நன்றாக இல்லை?

(தீமந்த் அதை எடுத்துப் பார்த்து சீட்டைப் படிக்கிறான்)

'பொறுமையற்ற சந்தேகப்பிராணி ஹம்சாவிற்கு—அன்புடன்'

**ஹம்சா:** என்னை கிண்டல் செய்திருக்கிறார். உர்சுலாவிற்காக வாங்கி இருக்கிறீர்களா என்று கேட்டேன். அதற்காகத்தான் இந்த நையாண்டி.

**தீமந்த்:** ஒரு சந்தேகம். உனது எண்ணம், பார்வை, நோக்கம் இவற்றை மாற்றுவதற்காக இல்லையே?

**ஹம்சா:** ஆங்... என்ன சொன்னீர்கள்,

**தீமந்த்:** கடிகாரத்தை வாங்கியது உனக்கு தெரியாமல் இருந்திருந்தால், ஒரு வேளை...

**ஹம்சா:** கடிகாரத்தை உர்சுலாவிற்கு அளித்திருப்பார் அப்படித்தானே?

**தீமந்த்:** ஆமாம்.

**ஹம்சா:** இல்லை. உர்சுலாவிற்கு ஒரு வெள்ளித் தட்டை இவர் முதலிலேயே அனுப்பியாகிவிட்டது.

*(அவசர அவசரமாக நரேஷும் சுரபியும் வருகின்றனர்)*

**நரேஷ்:** ஹம்சா! புறப்படு—புறப்படு நேரமாகிவிட்டது. இன்னுமா சாவகாசமாய் உட்கார்ந்திருக்கிறாய்? ஊம். சீக்கிரம். சுரபி கூட வந்தாகி விட்டது. தீமந்த்! நாடகம் எத்தனை மணிக்குத் தொடங்குகிறது?

*(ஹம்சா சுரபியின் கரத்தைப் பற்றிக் கொண்டு நரேஷைப் பார்த்து மெதுவாக மென்னகை புரிந்த வண்ணம் எழுந்து நிற்கிறாள். தீமந்த் சிரிக்கின்றான்)*

**தீமந்த்:** *(டயரியை நீட்டி)* இதோ இதில் நேரத்தையாவது குறித்திருக்கலாம் அல்லவா!

**நரேஷ்:** *(சிரித்துக் கொண்டே)* அட! இது எங்கிருந்து வந்தது?

*(ஹம்சாவை நெருங்குகிறான்)*

**ஹம்சா:** அன்பரே!

**நரேஷ்:** ஹம்சா..

*(சற்று நேரத்துக்குப் பின்)*

**நரேஷ்:** ஹம்சா நீ என்னை மன்னித்து விட்டாயா?

**ஹம்சா:** அன்பரே!

திரை விழுகின்றது

# எதிரொலி

## உமா ங்கர் ஜோஷி

**பாத்திரங்கள்**

கௌரி

துளசி

கல்லூரி மாணவன் (முதலாவது)

கல்லூரி மாணவன் (இரண்டாவது)

கிஷோர்

மனு

லாலி

ரணு

கிலி

நேரம் ஞாயிற்றுக்கிழமை மாலை. பம்பாயில் ஒரு தெருவின் அடுக்கு வீடுகள். இரண்டாவது மாடியில் படிகளுக்கு அருகே பால்கனி. படியில் ஒரு ஆடவன் வெளியே செல்வதற்கான உடைகளை அணிந்து கொண்டு தயாராக இருக்கிறான்.

**ஆடவன்:** கிளம்பேன். ஆட்டம் ஆரம்பிச்ச பிறகு போய் நின்னா...

**பெண் குரல்:** இந்தப் பிள்ளைங்களை கொஞ்சம் சமாதானப் படுத்திட்டு வரேன். இல்லேன்னா...

**ஆடவன்:** யம்மா! நீ முன்னால் போ. நான் இதுங்களைச் சரிக்கட்டிட்டு வரேன்.

**பெண் குரல்:** (வெளியே வந்து) புறப்படுங்கள். (கிராமத்திலிருந்து வந்த பெண்கள் பம்பாய் வந்ததும் தங்களது கிராமிய நடைஉடைகளைத் துறந்து நாகரீகப் பட்டாம் பூச்சியாக மாறிவிடுவது போன்ற தோற்றத்தில் இப் பெண்ணும் இருக்கிறாள்)

'கிஷு எல்லோரையும் பார்த்துக் கொள்ளடா.'

**கிஷோர்:** (உள்ளே வந்து வயது பதினொன்று இருக்கலாம்) லீவு நாள் வந்தா எங்களையும் ஆட்டத்துக்கு அழைச்சிட்டுப் போவோம்னு சொன் னீங்களே? இதைவிட எங்களை கிராமத்திலேயே விட்டுட்டு வந்திருக்கலாம். இங்கே எதுக்காக கூட்டிட்டு வந்தீங்க?

(லல்லியும் மனுவும் வருகிறார்கள்)

**லல்லி:** அம்மா— நானும் உன்னைப் போலவே டிரஸ் பண்ணிட்டிருக் கிறேன். என்னையும் அழைத்துப் போயேன்.

**பெண்:** கிஷு! நீ சொல்வதையெல்லாம் நான் திரும்பி வந்து கேட்டுக் கொள்கிறேன். லல்லி படியில் இறங்கி விடப் போகிறாள் பார்த்துக் கொள்.

**கிலி:** (அப்பாவின் கரத்தைப் பிடித்துக் கொள்கிறான்) நான் எல்லோரையும் பூலேஷ்வர் ரோடிலே விட்டுட்டு வரப் போறேன். அப்புறம் எல்லோரையும் தேடிட்டுத் திரியுங்க. நாடகத்துக்குப் போலாம்னு தினம் தினம் சொல்றீங்க. ஆனா அழைச்சிட்டுப் போறதேயில்லை. நீங்க மட்டும்...

(பெண் படியிலிறங்குகிறாள்)

**ஆடவன்:** நீயும் வளர்ந்து எங்களைப் போல ஆனபிறகு நீயும்...

(கரத்தை விடுவித்துக் கொண்டு மடமடவென்று இறங்கி விடுகிறான்)

**கிலி:** (இரும்பு கிராதியைப் பிடித்துக் கொண்டு படிகளை எட்டிப் பார்க் கிறான். காதருகே கையை வைத்து ஏதோ கேட்கும் பாவனையில்) என்ன சொன்னீங்க? முந்திரிப் பருப்பு வாங்கியாரப் போறீங்களா? யாருக்கு வேணும் உங்க முந்திரிப்பருப்பு? எங்களைக் கூட்டி போக மாட்டேங்கறீங்களே!

(ஏறத்தாழ பத்து வயதுடைய, ஐந்து, ஆறு பையன்கள் வருகின்றனர். இரண்டு பையன்கள் லுங்கி அணிந்திருக்கின்றனர். ஒரு வேளை இப்பொழுது தான் குளித்துவிட்டு வந்திருப்பார்கள் அல்லது துணிகளையெல்லாம் சலவைக்குப் போட்டிருக்கலாம்)

**லல்லி:** அண்ணா வா! நானும் நீயும் ரெயில் வண்டி பார்க்கப் போகலாம்.

**கிலி:** அம்மா அடிப்பாங்க.

**மனு:** கிஷு! கோகுல் சித்தப்பா உன்னை நாடகம் பார்க்க அழைச்சிட்டுப் போறேன்னு சொன்னார்லே? அப்புறம் என்ன ஆச்சு? ஐயா படு குஷியா இருந்தாரு!

**கிலி:** சரி. சரி. விடு அந்தப் பேச்சை.

**கௌரி:** கிஷு அண்ணா! வா! விளையாடலாம்.

**கிலி:** (கோபத்துடன்) வேண்டாம் கிஷு நாம் நாடகம் போடலாம்.

**மனு:** (வேடிக்கையாக) ஹும் (சற்று நேரத்திற்குப் பின்னர் கோபம் தணிந்து) நாம் நாடகம் போட்டால் யார் பார்க்கப் போறாங்க?

**மனு:** விடு அந்தப் பேச்சை. நாமெல்லோரும் பம்பாய்-பம்பாய் விளை யாட்டு விளையாடலாம்.

**கௌரி:** வேண்டாம். நாம் கிராமத்து விளையாட்டு விளையாடலாம்.

**மனு:** பைத்தியமே! கிராமத்திற்குப் போனால்தானே பம்பாய்க்கு வர முடியும்?

**கிலி:** சரி. சரி. ஆரம்பிக்கலாம்.

(கூச்சல் எழும்புகிறது)

(இரண்டு, மூன்று பையன்கள் இரண்டொரு கள்ளிப் பெட்டிகளை எடுத்துக் கொண்டு வருகின்றனர். ஒரு மூலையில் அதை அடுக்கி வைக்கின்றனர். அங்கே பையன்கள் உட்கார, படிகளுக்கருகே இன்னொரு மூலையில் தரையின் மீது சிறுமிகள் உட்காரு கின்றனர்.

**ஒரு பையன்:** நாங்க பம்பாயில் வேலை செய்கிறோம்.

**மற்றொரு சிறுமி:** நாங்க கிராமத்திலிருக்கிறோம் அப்படித் தானே கிஷு!

**கிலி:** ஆமாம். நீ வயலுக்குப் போகணும். சுமை தூக்கிட்டு வரணும். ஆடுமாடுகளைக் கவனிச்சிக்கிடணும்.

**கௌரி:** நீ சம்பாரிச்சுப் பணம் அனுப்புவே இல்லே?

(பையன்கள் மெல்லிய குரலில் கிசுகிசுக்கிறார்கள்)

**கிலி:** பாழாய் போற வேலை முடியவே மாட்டேங்குது. இதைவிட பம்பாயே தேவலை. நம்தி பம்பாய் போனாளே திரும்பி வர்றப்ப சேட் வீட்டுப் பொம்பளை மாதிரி வந்தா.

**துளசி:** எனக்குத் தனியா வீட்டிலிருக்க பயமா இருக்குது.

**கிலி:** கௌரி படிச்சவ. இவளைக் கொண்டு கடுதாசி எழுதச் சொல்லேன். உன்னையும் பம்பாய்க்கு அழைச்சிட்டுப் போவான்.

**கௌரி**: இல்லாட்டி சொந்த ஊருக்குப் போயிடுவாம்.பெண்கள் வேறு என்னதான் செய்ய முடியும்?

(எல்லோரும் தங்களுக்குள் கசமுச என்று பேசிக் கொள்கிறார்கள்)

**கிஷு**: மனு! பார்த்தியா! உன் தங்கை கிலி பலே கைகாரியா இருக்குது!

**மனு**: உன் தங்கை கௌரி மட்டும் குறைஞ்சவளா என்ன? இந்தப் பசங்க சிறிசுகளா இருந்தாலும் நல்ல நடிக்குதுங்கப்பா!

**ரணு**: கௌரி! நீ தபால் பெட்டியில் கடிதத்தைப் போட்டாயா?

**கௌரி**: எப்பவே போட்டாச்சு! கிராமத்தில் யாருக்கும் தெரியாது. ஆமா!

**துளசி**: உனக்கு ஒண்ணுமே தெரியலே. யாருக்கும் தெரியாதுன்னு ஏன் சொல்லணும்.

**கிலி**: உனக்குத்தான் ரொம்ப நல்லா நடிக்க வருதாக்கும்! நீதான் கெட்டிக் காரின்னு நினைப்பு இந்த மாதிரிக் கடுதாசியை யாராச்சும் எல்லோருக்கும் தெரியும்படியா எழுதுவாங்களா?

**கிஷோர்**: ஏய்...கூச்சல் போடாதீங்க. கடுதாசி போய்ச் சேர்ந்துடிச்சி. ஏய்! லாலியா! நீதான் தபால்காரனா நடிக்கணும்.

(லாலியா ஓடிப் போய் புத்தகப் பையைத் தபால் பையைப் போல் தோளில் போட்டுக் கொள்ளுகிறான். கையில் ஒரு துண்டு காகிதத்தை எடுத்துக் கொண்டு பெண்கள் இருக்குமிடத்திற்குச் செல்லுகிறான். எல்லோரும் 'எனக்கு கடிதம், 'எனக்கு கடிதம்' எனக் கூச்சல் போடுகின்றனர்.

**லாலி**: தபால்கார லாலியா?

லாலியா தபால்காரரே! எனக்கு கடுதாசி உண்டா?

லாலியா தபால்காரரே! எனக்கு ஏதேனும் தபால் வந்திருக்குதா?

லாலியா தபால்காரரே! பம்பாயிலிருந்து ஏதேனும் தகவல் உண்டா?

**மனு**: (தூரத்திலிருந்து) ஏய்! உங்களை எல்லாம் துரத்த வேண்டியதுதான். இப்படியா நாடகம் போடுறது? நாங்களெல்லாம் வேலையை விட்டுட்டு வந்துடுவோம். தெரிஞ்சுதா?

(தபால்காரர் மீண்டும் பம்பாய் குழு இருக்குமிடத்திற்கு வருகிறார். அமைதி நிலவுகிறது. கௌரி கடிதத்தைப் படிக்கிறாள்)

**கௌரி**: கோகுல்தாஸ் சம்சாரத்துக்கு வந்திருக்கு இந்தக் கடுதாசி.

**துளசி**: அப்படின்னா அது நான்தானே!

**கௌரி**: (பொய்க் கோபத்துடன்) எங்க அண்ணனுக்குப் போய் உன்னைப் போல் கழுசடைப் பெண்ணா? போ!போ!

(எல்லாப் பையன்களும் சிரிக்கின்றனர்)

**கிலி**: (பயந்தவளாய் பரபரப்புடன்) எனக்கா கடுதாசி? எனக்கா?

**கௌரி**: (லேசாக குத்தியவாறே) சும்மா இருடி.

**துளசி**: எடுத்துக் கொள்! உனக்குத்தான்.

(மனுவுக்குக் கோபம் வருகிறது)

(ரணு லாலியாவிடம்) மனுவின் அப்பா கிலியை கிஷோருக்கு கல்யாணம்

செய்து தரலாம்னு பேசிக்கிட்டிருந்தாங்க. இது எனக் கெப்படி தெரிஞ்சுது தெரியுமா? என் அம்மா யாரிடமோ சொல்லிட்டிருந்தா.

**கௌரி:** (படிக்கிறாள்) இங்கு நலம்...என்னமோ சரியாகப் படிக்க முடிய வில்லை. (விழிகளை நிமிர்த்தி எல்லோரையும் ஒரு முறை பார்க்கிறாள்) உன்னை பம்பாய் வரச் சொல்லி எழுதியிருக்கிறார். இதுதான் விஷயம். சீக்கிரம் புறப்பட்டுப் போ.

**கிலி:** அடி! துளசி! நீ ஏதாவது சேதி சொல்லிவிடப் போறியா?

**துளசி:** இப்பல்லாம் திருட்டுப் பயம் அதிகமாக இருக்கிறது. விவசாயிகூட வீட்டிலிருப்பதில்லை. ஓடிப் போயிடறான்னு அவங்க கிட்டச் சொல்லு.

**கிலி:** கௌரி அக்கா, ஏதாவது கொடுத்தனுப்பணும்னா கொடு. இதோ பஸ் வந்து விடும்.

(ரணு பஸ் வருவது போல் சத்தமிட்டுக் கொண்டு ஓடி வருகிறான்).

**துளசி:** இதோ! பஸ் வந்துவிட்டது. உட்காரு. பஸ்ஸில் இடமே இல்லை. சீக்கிரம். ஊம். உட்காரு.

**லலி:** அப்புறம்... பஸ்ஸில் உட்கார்ந்த பிறகு பேசலாம்.

நான் வர்றேன்.

(கிலி ரணுவின் பின்னால் நின்று அவனது இடுப்பைக் கட்டிக் கொள்கிறாள்)

**துளசி:** (வாழ்த்துகிறாள்) சௌக்கியமாய் இரும்மா.

**கௌரி:** கிராமத்துப் பெண்களெல்லாம் பார்த்து பிரமித்துப் போகிற மாதிரி திரும்பிவா. நான் அப்படியே மகிழ்ந்து போவேன்.

**கிலி:** அக்கா! என் வீட்டைப் பார்த்துக் கொள்ளுங்க.

(ரணு பூம் பூம்மென்று பஸ்போல சத்தமிட்டுக் கொண்டு ஓடுகிறான். இடுப்பைக் கட்டிக் கொண்டிருக்கும் கிலியும் கூடவே ஓடுகிறாள். இருவரும் சென்று எதிரேயுள்ள பம்பாய் குழுவில் அமருகின்றனர்.

**மனு:** இனி நான் கடைக்குப் போகவேண்டும்.

**கிஷோர்:** போகலா! எனக்குத் தலையை வலிக்கிறது. இன்று வேலைக்கு வரமுடியாது. இப்ப எல்லாம் வானம் என்ன எப்பப் பார்த்தாலும் மூட்டம் போட்டிருக்குது.

**மோகன்:** அப்படித்தான் இருக்கும். ஏன் அண்ணி! நீ ஊரிலிருந்து வந்திருக்கிறாய். ஒரு டீ கூட கிடைக்காதா?

**கிலி:** நான் வந்து இன்னியோட ஆறு மாசமாவுது. ஆனால் வந்து ஆறு ஜன்மம் ஆகிவிட்டது போலிருக்கிறது. யாராவது துணை கிடைத்தால் ஊருக்குப் போகணும்.

(பெண்கள் குழுவில் கலகலப்பு)

**ரணு:** என்ன அண்ணி! சௌக்கியமா?

**கிஷோர்:** யாராவது கிராமத்துக்குப் போகப் போறீங்களா?

**ரஞ்சு:** ஆமாம். நாளைக்கு ராம்லால் போகிறானாம்.

(பெண்களிடையே முன்னைவிட சத்தமும் கூச்சலும் அதிகமாகிறது. ரஞ்சுவின் பஸ் வருகிறது. கிலி இறங்குகிறாள். எல்லோரும் அவளைச் சூழ்ந்து கொள்கின்றனர். கிலி மெதுவாக நடக்கிறாள்)

**துளசி:** ஜன்மம் கடைத் தேறிடுச்சி. பம்பாய்னா பம்பாய்தான். அளகாபுரி மாதிரி இருக்கிறது. ஆனால் நாலு வருசமும் ஒரு மாத்தமும் இல்லாம, அப்படியேதான் இருந்தேன்.

(கிலியிடம் சமாசாரங்களைக் கேட்டறிய பெண்களிடையே கூச்சல் எழுகின்றது)

**கிஷோர்:** இந்தக் கோடையில் வீட்டுக்குப் போகாமல் முடியாது. எப்படியோ போகட்டும் இதெல்லாம்.

**ரஞ்சு:** உடம்பைப் பார்த்துக் கொள். இரண்டு மாசம் வேறெங்கேயாவது போய் இருந்தா உடம்பு நல்லாத் தேறும்.

**கிஷோர்:** எனக்கு வீட்டிற்கு ரூ அனுப்பணும். யாரிடம் அனுப்புவது? பெண்களிடம் இதுதான் ஒரு பெரிய கஷ்டம். ஒரு தடவை பம்பாய்க்கு வந்து விட்டால் பிறகு ஊரிலேயும் அதெல்லாம் வேண்டுமென்பார்கள்.

**ரஞ்சு:** உனக்கு வேறென்ன பெரிய செலவு?

**கிஷோர்:** அட, நீ ஒருத்தன்! என் கஷ்டம் உனக்கெங்கே தெரியப் போவுது?

**லாலியா:** சுதந்திரம் வந்தாலும் வந்தது, எல்லோருமே ரொம்ப கஷ்டத்திலே இருக்கோம்.

**மனு:** ஏய் லாலியா! ஜாக்கிரதை! உங்கப்பாவைப் போல நீயும் சுதந்திரத்துக்கு எதிரா ஏதாவது பேசினே! (கூச்சல் எழும்புகிறது)

**கிஷோர்:** (அமைதியாக) வாம்மா! கௌரி!

**கௌரி:** எல்லோரும் நல்லா இருக்கீங்களா? பார்த்து ரொம்ப நாளாச்சு. என் அண்ணன்கிட்டே யிருந்து ஏதாவது கடுதாசி உண்டா? மகன் சௌக்கியமாய் இருக்கிறானா?

**துளசி:** நகருடி பைத்தியம். பெண் பிறந்திருக்குன்னு தெரியாதா? உனக்கு டிராமா நடிக்க என்னிக்குத்தான் வருமோ!

**கௌரி:** அடி போடி! (நிமிர்ந்து நின்று) பம்பாயில் குடித்தனம் வைத்தேன். ஆனாலும் என் தலையில் பெண்தான்...

(பையன்களின் காதிலே இது விழுகின்றது)

**கிலி:** அவனவனுக்கு விதித்தது தானே நடக்கும்.

**துளசி:** இதிலெ விதி என்ன செய்யும்? நீயும் அந்த ரஞ்சுவேயின் அம்மா மாதிரியே பேசறியே! பெண்ணுன்னா என்ன குறைச்சல்?

(ரஞ்சு வந்து துளசியை சுண்டி விட்டுப் போகிறான்)

**கௌரி:** தொட்டிலில் தூங்குகிறதா?

**துளசி:** (கிலியிடம்) ஏனடி பேசமாட்டேன் என்கிறாய்? சும்மாதான் சொல்லிவையேன் ஆமாம்னு.

**கிஷோர்:** (தூரத்திலிருந்து) சும்மா ஏன் சொல்லனும்? கௌரி! உன் இரப்பர் பொம்மை பின்னே எதுக்காக இருக்காம்? இவ்வளவு பெரியவங் களாகியும் யாருக்கும் டிராமா நடிக்க வரலியே!

(கௌரி ஓடிப் போய் சிவப்பு நிற ரப்பர் பொம்மையை எடுத்து வருகிறாள். துளசியும், லலியும் அதைக் கொஞ்சுகின்றனர்)

**கிலி:** அழவிடாதீங்க. கொண்டாங்க இங்கே. நான் சமாதானப்படுத்து கிறேன். (பொம்மையை எடுத்து நெஞ்சோடு அணைத்துக் கொள்கிறாள்) இந்தா பாப்பா... பால் குடிம்மா!

**லலி:** குடிக்கலியா?

**துளசி:** பின்னே என்ன செய்யுது?

**கிலி:** அடி, பைத்தியம்! இது நிஜ பாப்பாவா என்ன? விளையாட்டுத்தானே?

**கௌரி:** நீ தான் பைத்தியம்.

**லலி:** இல்லே. நீதான் பைத்தியம்

(எல்லோரும் 'நீதான் பைத்தியம், 'நீதான் பைத்தியம்' எனக் கூச்சலிடு கின்றனர்)

**கிஷோர்:** நான் வீட்டுக்குப் போறேம்ப்பா.

**மனு:** இதோ! நானும் போறேன். வேலை, கீலை எல்லாம் வெறுத்துப் போச்சு. இதைவிட ஊரிலேயே போய் ஏர்பிடிச்சு உழவு செய்து பிழைக் கறதே மேல்.

**ரணு:** ஊரோடு, வீட்டோடு இருக்கலாம் இல்லையா?

**மனு:** விருந்தாளிங்க வந்தா நல்ல உபசரிக்கவும் முடியும்.

(ரணுவின் பஸ் பூம் பூம்மென்று ஓசையெழுப்பிக் கொண்டு வருகிறது. அவனுக்குப் பின்னால் அவனது இடுப்பைக் கட்டிக் கொண்டு கிஷோர். கிஷோரின் இடுப்பை மனுவும் பற்றிக் கொள்கிறான். பஸ் ஓடுகிறது. வழியில் காய்கறி எடுத்துக் கொண்டு வரும் ஒரு பெண் மீது மோதுகிறது. 'பாழாய் போகிற பசங்களா' என்று திட்டிக் கொண்டே அவள் செல்லுகிறாள். கிஷோரும், மனுவும் பஸ்ஸி லிருந்து இறங்குகின்றனர். எல்லாரும் அவர் களைச் சூழ்ந்து கொள் கின்றனர்)

**எல்லாரும்:** யாரது! கிஷு அண்ணா. மனு அண்ணன் எல்லாம் வந்திருக் காங்களே!

**கௌரி:** கிஷு அண்ணா! இந்தத் தடவை இரண்டு வருசமாவது வீட்டோடு இருப்பியா? உடம்பு துரும்பா இளைச்சிப் போச்சே எப்படி?

**கிஷோர்:** வீடு வாசலையும் கவனிக்க வேண்டியிருந்தது.

**மனு:** (துளசியிடம்) உனக்கு நல்ல துணை கிடைச்சா பம்பாய் போயிடு.

**கிஷோர்:** ஆமாம். அந்த சேட் அவனுக்கு ஒரு நிமிடம் கூட ஓய்வு தர மாட்டேங்குறான்.

(எல்லோரும் ஒருவரையொருவர் நலம் விசாரித்துக் கொள்கின்றனர். கூச்சலில் எதுவுமே காதில் விழுவதில்லை)

**லாலியா:** ஏய்! மோகன்! கிஷு அண்ணன் ஊருக்குப் போயிருக்கிறார். நீ அவருடைய அறையில் படுத்துக் கொள்.

(மேல் மாடியின் படிகளிலிருந்து இரண்டு கல்லூரி மாணவர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டே இறங்கி வருகின்றனர்)

**மோகன்:** (நகர்ந்து வழி விட்டவாறே) ஏன்?

**லாலியா:** கோகுல் அண்ணனின்—இல்லேல்லே... ரணு அண்ணனின் பெண்சாதி வந்திருக்கு. உனக்குத் தெரியாதா?

**மோகன்:** நீ எங்கே படுப்பே?

**லாலியா:** படிக்குப் பக்கத்திலே பால்கனிலேதான் படுக்கணும்.

(கல்லூரி மாணவர்கள் குழந்தைகளுக்கிடையே புகுந்து செல்லுகின்றனர்)

**முதலாவது கல்லூரி மாணவன்:** ( கண்ணாடி அணிந்திருக்கிறான்) இந்த மாடியில் நம்முடைய கிராமிய வாழ்க்கை எதிரொலிக்கிறது

**இரண்டாமவன்:** எப்படி?

**முதலாமவன்:** (விரலால் சுட்டிக் காட்டி) இக்குழந்தைகளால்.

**இரண்டாமவன்:** ஆதம் ஏவாள் காலத்திலிருந்தே குழந்தைகள் தாய் தந்தையரின் ஆசாபாசங்களினுடைய எதிரொலிதானே! இல்லையா?

(இருவரும் வழியை விலக்கிக் கொண்டு செல்லுகின்றனர்.)

**மோகன்:** (எங்கிருந்து நகர்ந்து சென்றானோ அதே இடத்தில் வந்து நின்று கல்லூரி மாணவனைப் போல் நடிக்கிறான். குட் பை கண்ணாடிக்காரரா!

**லாலியா:** கிடக்கட்டும் விடுடா! நீ என்ன சொல்லிக் கொண்டிருந்தே? ஆமா—நான் படுத்துக் கொள்வது பற்றித்தானே!

**மோகன்:** ஆமாம். உன் அப்பா தினமும் இந்தக் குளிரிலே பால்கனியில் தூங்குகிறாருன்னு சொல்லிக் கிட்டிருந்தேன். பாவம்! அவருக்கு குளிராதா? கோகுல் சித்தப்பா இன்னொரு அறையையும் ஏன் எடுத்துக் கொள்ளக் கூடாது?

**மோகன்:** சித்தப்பா ரொம்பக் கருமி. ஆனால் தனக்கு மட்டும் எல்லாம் வேண்டும்.

**லாலியா:** 'நீ சொல்வது ரொம்பவும் சரி.

**மோகன்:** என் அப்பா காரணமில்லாமல் அப்படிச் செய்வாரா? (கிராமத்தில் கூச்சல்)

**கிலி:** இதைவிட பம்பாய் என்ன மோசமாம்...இங்கே களுதைவேலை...

**கிஷோர்:** என்னை ஊருக்கு வரும்படி ஏன் அடிக்கடி கடிதம் எழுத வைத்தே? இந்த சனியன் பிடித்த பெண்களே பைத்தியங்கள் தான்.

**லாலியா:** (தூரத்திலிருந்து) யார் நானா? கடிதம் எழுதணுமா?

(லாலியா தபால்காரன் போல் வருகிறான். காகிதத் துண்டுகளை எடுத்துக் கொண்டு வருகிறான்)

**லலி:** யாருக்கு கடிதம்?

**கிஷோர்:** எனக்கா? (படிக்கிறான்) மோசமான செய்தி. தலை போகிற சமாசாரம். இந்தக் கடிதம் கிடைத்ததுமே உடனே வராவிட்டால் வேறு குமாஸ்தாவை வைத்துக் கொள்வேன். (கிலியிடம்) இனிமே நல்லா போட்டுக் கொண்டிருக்கலாம் டீ...

**லலி:** (சந்தோஷத்துடன்) இப்போ நீ பம்பாய் போவாயா?

**கிலி:** (முகம் வாட) இப்பொழுது எங்கே போறது?

**கிஷோர்:** பம்பாய், அப்புறம் ஊர், இரண்டு இடத்திலே குடித்தனம் வெச்சு நமக்கு கட்டுபடியாகாது!

(ரணு பூம் பூம் என சத்தம் எழுப்புகிறான். அவனது இடுப்பைப் பிடித்துக் கொண்டு கிலியும் கிஷோரும் பம்பாய் போய்விடு கின்றனர்)

**லாலியா:** திங்கள் கிழமைக்கு முன்னாலேயே வந்து விட்டீங்க. நல்லதாச்சு.

**கிஷோர்:** இந்த மாதிரி ஒரு வேலை மீண்டும் கிடைப்பது கஷ்டம்.

**மோகன்:** இந்த வேலையிருப்பதனாலே தானே கோகுல் சித்தப்பா மஜாவா இருக்காரு!

**ரணு:** நீ ரொம்ப பேராசைக்காரன். இவ்வளவு நல்ல வேலை இருக்கிறது. ஆனால் நல்ல வீடா எடுத் துக்கக் கூடாதா? மோகன்! லாலியா! அவங்க அப்பா பேரென்ன? நெஞ்சிலிருக்குது, வாயிலே வரமாட்டேங்குதே! அதான் பால்கனி யில் படுத்துக் கிடப்பாரே பாவம்!

**கிலி:** (விழிகளைத் திருப்பி) இவர் இரண்டு தடவை பம்பாய் வந்தார், ஒரு தடவை நாடகத்திற்கு இட்டுப் போகலே.

**ரணு:** நிஜம் தான்.

**லலி:** என்னை அழைச்சிட்டு போவே இல்லே?

(நாடகம் என்ற சொல்லைக் கேட்டதும் யாவரும் கூடுகின்றனர்)

**கிஷோர்:** புறப்படு! இப்படி லேட் பண்ணினா எப்படி? நாடகம் ஆரம்பித்த பின் தான் போய் நிப்பியா?

**கிலி:** இதோ வந்துட்டேன். இருங்க, பேபியை விட் டுட்டு ஓடி வந்துடறேன் (விட்டு விட்டு வரப் போகிறாள்)

**லலி:** என்னையும் அழைத்துப் போயேன். அம்மா, அப்பாதான் அழைச் சிட்டுப் போகலை. நீயும் கூட...

**கிஷோர்:** என்னை மட்டும் அம்மா அப்பா எங்கே அழைச்சிட்டுப் போனாங்களாம்?

**லலி:** பார்த்தாயா! மறுபடியும்? நீ வந்து...

**கிலி:** (வந்து) உம். புறப்படுங்கள்.

**கிஷோர்:** (லலி அவன் கரத்தைப் பற்றுகிறான்) எங்களைப் போல நீயும் பெரியவளாகும்போது...நீயும் கூட...

(படிகளில் வேகமாய் இறங்குகின்றனர். ஆனால் மின்னல் வேகத்தில் மீண்டும் மேலே வந்துவிடுகின்றனர். தொடர்ந்த ஆடவனும் பெண்மணியும் மேலே வருகின்றனர்.

**ஆடவன்:** (கோபத்துடன்) அயோக்கிய பசங்களா! நாங்க நாடகம் பார்க்க போவதையும் தாமதமாக்கிக் கெடுத்தீங்க. இப்பொழுது எங்களைப் போல நடிச்சு அழகு காட்டுகிறீங்களா? அடிக்கிறான். கிஷோர் அழுகிறான். மற்றவர்கள் பிரமித்து நிற்கின்றனர். பெண்மணியின் அமைதியான குரல் கேட்கிறது. ஏய்! லலி! இந்தா நீ கேட்டது!

திரை விழுகின்றது.

# பழைய ஜோடி

## துர்கேஷ் சுக்லா

**பாத்திரங்கள்**

லாதோ
அம்தா
சுகராம் தாதா
தீவாலி
ரூகி
பூலி

(அந்தி மயங்கும் நேரம், சக்கிலியர் குடியிருப்பில் அமைதி நிலவுகிறது. வீட்டின் வெளிப்புறத் தாழ்வாரத்தை ஒட்டிய அறையில் மெலிதான இருளில் ஆத்ம ஞானத்தின் ஒளியில்லாதோ தனக்குள் பஜனைப் பாடலொன்றை முணுமுணுத்தவாறு உட்கார்ந்திருக்கிறான்.

**லாதோ:** *காயமே இது பொய்யடா*

*ஆட்டம் கண்ட பையடா*

*அன்னப் பட்சி பறக்கும் நேரம்*

*கூடுமட்டும் மிஞ்சுமே*

*மீரா சுஹேப்பு!*

(சுகாராம் தாதா வருகிறார்.

**தாதா:** அட! லாதோ தானே உட்கார்ந்திருப்பது?

**லாதோ:** ஆமா, தாதா நான்தான் சுகராம் வா' வாங்க அய்யா! என்ன பாக்கியம் செய்திருக்கேன்! ஏது இந்தப் பக்கம்?

**தாதா:** (படியில் உட்கார்ந்து கொண்டே) அட, காரியமில்லாமல் யார் வறாங்க? செருப்புத் தச்சுக்க வந்தேன்.

**லாதோ:** இங்கே கொண்டாருங்க தாதா! இப்பவே தெச்சுக் கொடுக்கிறேன். எத்தினி நேரமாகப் போவுது!

**தாதா:** (செருப்பைக் சுழற்றிக் கொடுத்தவாறே) இந்தாப்பா! கொஞ்சம் உறுதியா தையல் போடு. மீண்டும் அதே இடத்திலே அறுந்திருச்சி.

**லாதோ:** கவலைப்படாதீங்க தாதா. இந்தத் தடவை இன்னமும் கெட்டியாத் தையல் போடுகிறேன். செருப்பைக் கையிலெடுத்து ஒ...கோ. இது நான் என் கையாலே தைச்சுக் கொடுத்தல்லவா? பத்து வருசமாவது ஆகியிருக்கும்? எத்தனை வெயில், எத்தனை மழையை இது பார்த்திடுச்சி!

**தாதா:** இன்னும் பத்து வருஷம் இது ஓடணும். (சிரித்துக் கொண்டே) நான் செத்துப் போன பிறகு பதிமூணாம் நாள் சடங்கிலே பிராமணனுக்கு இதை தானம் கொடுங்கடான்னு சொல்லிட்டுப் போகப் போறேன்.

**லாதோ:** அந்தக் காலத்து ஜனங்களே அலாதி. ஒரு பொருள்னா அப்படி ஒரு மதிப்பு வெச்சுப் பாதுகாப்பாங்க. இன்னிக்கு யாருக்கும் எதிலேயும் அக்கறை கிடையாது. நாமதான் தெச்சு சரி செய்து போட்டுக்கிறோம். இவங்க சமாசாரமே தனி. அறுந்துப் போச்சுன்னா கடாசிட்டு வேறே புதுசு வாங்குவாங்க.

**தாதா:** அப்புறம் வருத்தப்படுவாங்க. நீ கொஞ்சம் சீக்கிரமா வேலையை முடி. போய்ச் சாப்பிடணும்.

**லாதோ:** ஒ... இதோ ஆச்சு (குரல் கொடுக்கிறான்) அம்தாவின் அம்மா! கொஞ்சம் லாந்தரை வெளியே கொணடு வா!

**ரூகி:** (உள்ளேயிருந்து) லாந்தர் விளக்கிலே உங்க அருமை மகன் படிச்சுக்கிட்டிருக்கான்.

**லாதோ:** சரி, அகல் விளக்கையாவது கொண்டு வா!

**ரூகி:** சமையல் பண்ண நான் என்ன செய்ய? உங்க அருமை நாட்டுப் பெண் சாப்பிட ரொட்டி பண்ணணுமே!

**லாதோ:** வெளியே இவுங்க காத்திருக்காங்க. நேர மாவுது.

**ரூகி:** நாளைக்கு பகலில் வரச் சொல்லுங்களேன்.

**லாதோ:** உனக்கு எங்கே புரியப் போவுது? தாதா வந்திருக்கிறாரு.

**தாதா:** ரூகி செருப்பைக் கொஞ்சம் தைக்கணும். வந்திருக்கேன்.

(தலையில் முந்தானையை இழுத்து விட்டுக் கொண்டு, ரூகி விளக்கை எடுத்துக் கொண்டு வருகிறாள்)

**ரூகி:** தாதா வந்திருக்கிறாரென்று எனக்கென்ன தெரியும்? உங்க படிச்ச பிள்ளை 'சமூதவந்த் சடங்கா' கதையைப் படிச்சுக்கிட்டிருக்கிறான். அவன் பெண்டாட்டி. காலை நீட்டிக் கொண்டு படுத்து கேட்டுக்கிட்டிருக்கா. நான் ஏதாவது சொன்னால் முகத்திற்கு எதிரிலேயே கீ—கீ— ன்னு ஏதோ சொல்லுரா.

**லாதோ:** (நூலைத் திரித்துக் கொண்டே) ஊசியில் நூலைக் கோர்க் கையிலே கை நடுங்குகிறது தாதா.

**ரூகி:** என்கிட்ட கொடுங்க. நான் கோர்த்துத் தரேன். (கோர்க்கிறாள்) இந்தாங்க.

**லாதோ:** இதோ பாருங்க. கண்ணிலே பிறை வந்து விட்டது. கண்ணுக்கு வெளிச்சம் குறைஞ்சு போச்சு. பார்வை சரியாத் தெரியலை.

**தாதா:** அடடா! வயசு காலத்தில் பார்வையும் மந்தமானால் கஷ்டம் தான். லாதோ! அது சரி. பதினைந்து நாட்களுக்கொரு முறை எனக்கு யார் செருப்புத் தெச்சுத் தருவாங்க? எனக்குத்தான் குறை தெரியப்போவுது.

**லாதோ:** உங்களை மாதிரி உள்ளவங்களுக்குத்தான் குறை தெரியும். மத்தப்படி மீதி எல்லோருக்கும் நான் கிழிந்த செருப்பு மாதிரிதான். என் மகன் அம்தாவுக்கு எப்பொ அப்பன்காரன் சாகப் போகிறான் நாம் குஷியா இருக்கப் போறோம் என்பது தான் நினைப்பு.

**ரூகி:** (கையை நீட்டி) ஆமாம். நான் சும்மா இருப்பேனா என்ன?

**லாதோ:** அந்த மட்டும் எனக்கு ஒரு கஷ்டமுமில்லை. உன்னைத்தான் நம்பி இருக்கிறேன். ஆனால் என் உடம்பின் மீது நம்பிக்கையில்லை.

**ரூகி:** (கனிவுடன்) அதைப் பற்றிக் கவலைப் படாதீங்க. இந்த உடம்பிற்கு ஒன்றும் வராது.

**லாதோ:** அப்படீன்னா அது என் பாக்கியம்தான். (பெரு மூச்செறிந்த வாறே) இளமையிலே இராப் பகலா வேலை செய்து களைச்சிட்டேன். கண் போனாலென்ன பரவாயில்லை. பையனின் கண்ணாலே பார்க்கலாம்னு நினைச்சேன். எதிர்பார்த்தபடி எல்லாம் நடக்குமா?

**ரூகி:** பிள்ளையின் கண் வேறெங்கேயோ போயிடிச்சி. பெண்சாதியின் கண்ணாலேதான் இப்ப பார்க்கிறான் அவன். அவனுக்கே கண்ணு மண்ணு தெரியலே. உங்களுக்கு எங்கே உதவப் போறான்?

**லாதோ:** (வருத்தத்துடன்) தன் பிள்ளையையே குருடுன்னு சொல்லாதே.

**ரூகி:** ஏன் சொல்லக் கூடாது? சொந்தப் பிள்ளையைச் சொல்லாமெ ஊரார் பிள்ளையையா சொல்ல முடியும்? நான் சொன்னா அவன் குருடாயிடப் போறானா? இரண்டு கண்ணும் பிரகாசமாத்தான் இருக்கு?

**லாதோ:** கண் என்னமோ நல்லாத் தானிருக்கு. ஆனா சினிமா பைத்தியமல்லவா தலைக்கேறி இருக்குது. இப்போ வாரத்துக்கு ரெண்டு மூணு சினிமா பார்க்காம விடறதில்லை. கண் கெட்டுப் போய் விடும்.

**ரூகி:** எல்லாம் அவள் போதனைப்படி நடக்கிறது. அந்த ராங்கிக்காரி பின்னாலிருந்து குசுகுசுக்கிறாள். அவளுக்கு மட்டும் சினிமா ஆசை கொஞ்சமாகவா இருக்கு?

**லாதோ:** சிறிசுகள் தானே! இந்த வயசிலே எத்தனை முடியுமோ அனுப விக்கட்டுமே! இது கூட உனக்குத் தெரியலையே அம்தாவின் அம்மா!

**ரூகி:** (தலையில் அடித்துக் கொண்டு) அம்தாவின் அம்மா கொடுத்து வச்சது அவ்வளவுதான். நான் என்னிக்குத்தான் சுகமாய் இருந்தேன்? பிறந்த வீட்டிலும் புகுந்த வீட்டிலும் கஷ்டப் பட்டேன். எங்குமே சுகமாய் இருக்க நான் கொடுத்து வைக்கவில்லை.

**லாதோ:** அதெல்லாம் இப்ப எதற்கு? ஆண்டவன் அருளாலே இப்ப நிம்மதியாத்தானே இருக்கோம்.

**ரூகி:** ஆமாம். வெகு நிம்மதி. உங்க அருமை மருமகள் வீட்டில் காலடி எடுத்து வைத்த நாளிலிருந்து ஒவ்வொரு சாமானுக்கும் ரெக்கை முளைச்சிடிச்சி. பார்த்துக்கிட்டே இருக்கோமே. வீட் டிலே ஒவ்வொரு பொருளா காலியாகிக் கிட்டே போவுது.

**லாதோ:** வீட்டுக்கு வந்த மருமகளை நிந்தனை செய்யக் கூடாது. எப்படி இருந்தாலும் நம்பவீட்டு லட்சுமி அவ. அவளால்தான் நாம் சுகமாக இருக்கோம்.

**ரூகி:** (வெடுக்கென்று) என்ன சொன்னீங்க? மருமகளை பகிரங்கமா புகழ வெட்கமா இல்லே? இத்தனை வயசாகியும்...

**லாதோ:** (தணிந்த குரலில்) நான் வந்து...

**ரூகி:** உங்க சுபாவம் எனக்கு நல்லாத் தெரியும். சும்மா இருங்க. இது நல்லா இல்லே.

(லாதோ மறுபேச்சின்றி மௌனமாய் உட்கார்ந்திருக்கிறான்)

**தாதா:** என்ன ரூகி! மருமக சரியா இல்லையா?

**ரூகி:** உதவாக்கரை... சுத்த உதவாக் கரை...தாதா. எப்ப பாருங்க மகன் பின்னாலேயே சுத்தறா. நாலு பேரோட கலந்து பழகத் தெரியலே. சோறு பொங்கத் தெரியாது. வெட்கம், மானம் எதுவும் கிடையாது. இருபத்து

நாலுமணி நேரமும் முகம் வெங்கலப்பானைதான். இடுப் பொடிஞ்ச மாடு கணக்க விழுந்து கிடக்கும். ஏதாவது சொன்னா மகாபாரதம்தான்.

**தாதா:** அட..டா! இது ரொம்ப கஷ்டம்தான்.

**ரூகி:** கஷ்டமா? சொல்லி மாளாத கஷ்டம் தாதா! (மூக்கை உறிஞ்சியபடி) என்மனசுக்குத்தான் தெரியும். யார்கிட்டவும் சொல்லவும் முடியாது பொறுத் துக்கவும் முடியலே. (ரூகி பெருமூச்செறிகின்றாள். லாதோ பேச்சை மாற்று கிறான்)

**லாதோ:** தாதா! செருப்பு காஞ்சிடுச்சி.

**தாதா:** சரி. ஒரு காரியம் செய். இதன் மேலே எண்ணெய் தடவி வை இன்னிக்கு ராத்திரி இங்கேயே இருக்கட்டும். நாளை காலை வந்து எடுத்திட்டுப் போகிறேன்.

**லாதோ:** சரி! தாதா.

**தாதா:** இந்தா பைசா. வெச்சுக்க.

**லாதோ:** வேண்டாங்க தாதா உங்ககிட்ட பணம் வாங்க மாட்டேன்.

**தாதா:** வாங்கிக்கோப்பா, பரவாயில்லை.

**லாதோ:** வேணாம். தாதா பிராமணனுக்கு கொடுக்கவோ முடியலே. இந்தப் பக்கம் வாங்குவதாவது!

**தாதா:** அப்ப சரி. ராம்! ராம்.

**லாதோ:** ராம், ராம், தாதா

(சுகிராம் தாதா செல்லுகிறார். லாதோ செருப்பைத் தண்ணீரில் நனைத்து ஒருபுறம் வைக்கிறான்) ஹே! ராம்! பரம்பொருளே! உன்னையே நம்பினேன்! கை விடாதே.

**ரூகி:** (மெதுவாக, இனிமையான குரலில்) கேட்கிறீங்களா? உங்களிடம் ஒரு விஷயம் சொல்லணும்.

**லாதோ:** ஓ..ஹோ!

**ரூகி:** அது என்ன ஓஹோ!

**லாதோ:** அம்தாவின் அம்மா! உன் பேச்சில் தான் எவ்வளவு இனிமை! மனசு அப்படியே குளிர்ந்து போவுது.

காயமே இது பொய்யடா

**ரூகி:** (கோபத்துடன்) நான் சொல்வதை கேட்கப் போறீங்களா? ராகம்பாட ஆரம்பிச்சுட்டீங்களே!

**லாதோ:** சொல்லு தாயே! என்ன உத்தரவு?

**ரூகி:** அந்தப் பாழாய் போகிற சிப்பாய்—இருக்கான்லே காவே கான்

**லாதோ:** ஓ— அவனா?

**ரூகி:** அம்தாவிடம் ரெண்டு டிக்கட் கொடுத்துட்டுப் போயிருக்கிறான்.

**லாதோ:** அப்ப சரி, வா போகலாம்.

**ரூகி:** எங்கே போவதற்கு? ஏதாவது புரிந்ததா?

**லாதோ:** சொர்க்கபுரிக்குத்தானே? இதைத்தவிர வேறு எங்கே போக டிக்கட் வேணும் நமக்கு?

**ரூகி:** அடகடவுளே, நல்லாத்தான் வந்து வாய்ச்சீங்க எனக்கு! எல்லா விஷயத்திலும் என்னை முன்னே தள்ளிவிடுறீங்க. நானும் உங்களை நல்லா...

**லாதோ:** *(சிரிக்கிறான்)* முன்னால் தள்ளப்போறியா? ஊம் நல்லதுதான். நான்தான் முதலிலேயே மூட்டைகட்டி வெச்சிட்டு காத்திருக்கானே!

**ரூகி:** (பெருமூச்சுடன்) வீணா ஏன் சீண்டுறீங்க? பாழாய்போன இந்த நாக்கை நல்லா வெட்டிப் போடணும். தாறுமாறாய்ப் பேசிடுது.

**லாதோ:** நல்லதுதான். எதையும் மனசிலே வெச்சுக்கக் கூடாது. நாக்கு இருக்கு பாரு, அதற்கு எலும்பே கிடையாது தெரியுமா?

**ரூகி:** நான். என்ன சொல்ல வந்தேன்னா..

**லாதோ:** ஊம்...

**ரூகி:** நான் அம்தாவுடன் சினிமா பார்க்கப் போகட்டுமா?

**லாதோ:** ஊம், போகலாம், ஆனால் அம்தா தன் பெண்சாதியை அழைச்சிட்டுப் போகலியா!

**ரூகி:** அவளுக்காகத்தானே டிக்கட் வந்திருக்குது! ஆனால் நான் லேசுபட்டவள் இல்லை. அவளை இன்னிக்குப் போக விட மாட்டேன். இன்னிக்கு அந்த ராங்கிக் காரியை வீட்டிலே அடைச்சிட்டுத்தான் போவேன்.

**லாதோ:** பாரு, இந்த வயதிலே நாம் போவது அழகாக இல்லை. நாமென்ன குழந்தைங்களா? பாவம் அதுங்க போகட்டும். அதுதான் நல்லது.

**ரூகி:** (முறைத்து பார்த்தவாறு) இன்னிக்கு சினிமாவுக்குப் போனா தோலை உரிச்சுடுவேன் ஆமாம்! (எழுந்து நின்று) இன்னிக்கு நான்தான் போகப்போறேன். அவ வீட்டிலே கிடக்கட்டும்.

**லாதோ:** பொறு கொஞ்சம்.

**ரூகி:** நேரமாவுது எனக்கு, நான் தயாராகணும்.

**லாதோ:** சரி, சரி, போ. ராம், ராம், ராம் (பாடுகிறான்)

*ஆத்மா வெனும் அன்னம் பறக்கத் துடிக்குது*
*அன்னப்பட்சி பறக்கையிலே*
*கூடுமட்டும் மிஞ்சுமே!*

(அம்தா வெளியே வருகிறாள். முகத்திலே கோபம் தெறிக்கிறது)

**அம்தா:** அப்பா— அப்பா! நீங்களாவது சொல்லக் கூடாதா? அம்மா யோசனை இல்லாமல் பேசுறா. நாலு பேர் பார்த்தா நல்லாவா இருக்கும்?

**லாதோ:** ஊம். (உரத்த குரலில்) இதில் என்ன தவறு? பெண்டாட்டியை அழைத்துச் செல்ல வெட்கமாக இல்லை. அம்மாவைக் கூட்டிப் போக வெட்கமாக இருக்குதோ? உனக்கு மட்டும்தான் ஆசை இருக்குமா? அவளுக்குக் கிடையாதா! (மெதுவாக) ஒரு தடவை அழைச்சிட்டுத்தான் போயேன். தொந்தரவு நீங்கட்டும். உங்க அம்மாவும் பிடிவாதக்காரி. தெரியும் இல்லே?

**அம்தா:** ஏன்தான் அம்மா யோசிக்க மாட்டேங்குதோ?

**லாதோ:** ராம், ராம், ராம்.

(ரூகி நல்ல புடவை அணிந்து கொண்டு வெளியே வருகிறாள்)

**ரூகி:** மருமகளே! மாமனாருக்குச் சாப்பாடு போடு. அப்புறம் எல்லாத்தையும் நல்லா மூடி வை. திறந்து போட்டுடாதே. ஜாக்கிரதை. உங்க அம்மா பூனை வந்து எல்லாத்தையும் சாப்பிட்டுடும்.

**தீவாலி:** (அலட்சியமாக) உங்க அம்மாதான் பூனை!

**ரூகி:** (வெகுண்டு) என் அம்மாவைத் திட்டுறியா? அத்தனை கொழுப்பா உனக்கு? நாக்கை அப்படியே உருவி விடுவேன். அம்தா! பாருடா என்ன சொல்லுகிறான்னு! ஜோட்டாலெ அடிடா முகத்திலே.

**அம்தா:** (நிம்மதி குலைந்தவனாய்) அம்மா! நீ வருவதானால் சீக்கிரம் கிளம்பு. எனக்கு நேரமாவுது நான் போகிறேன்.

**ரூகி:** இருடா. வருகிறேன் (கொஞ்சலாய்) கேட்பீங்களா? வீட்டைக் கொஞ்சம் பார்த்துகுங்க. மருமகளைச் சாப்பாடு போடச் சொல்லிச் சாப்பிடுங்க.

**லாதோ:** சரி. சரி. ஜாக்கிரதையாகப் போய் வா. ஹே ராம்! நீதான் துணை. (ரூகி அம்தாவின் பின்னே செல்லுகிறான். பக்கத்து வீட்டு பூலிச் சித்தி முற்றத்தில் வந்து நின்று கூப்பிடுகிறாள்)

**பூலி:** தீவாலி இருக்கிறாளா உள்ளே?

**தீவாலி:** பூலி சித்தி! என்ன வேணும்?

**பூலி:** உறை ஊற்ற கொஞ்சம் மோர் வேணும். உன் மாமியார் வீட்டில் இல்லையா?

**தீவாலி:** அவள் போய் விட்டாள்.

**பூலி:** எங்கே?

**தீவாலி:** சினிமா பார்க்க.

**பூலி:** என்ன? என்ன பார்க்க போயிருக்கா? சினிமாவா?

**தீவாலி:** ஜோடியாக போயிருக்கிறாள். பிள்ளையோட.

**பூலி:** நீ...

**தீவாலி:** நான் வீட்டிலிருக்கேன். வேறென்ன செய்ய?

**பூலி:** அடடா! இந்த வயசிலே கூட சினிமாப் பைத்தியம் விடல்லியா? அம்தா உன்னை ஏன் அழைச்சிட்டுப் போகலே?

**தீவாலி:** ரெண்டு டிக்கட் தான் கிடைச்சுது. அவர் என்ன செய்வார்? எங்க மாமியார் சின்னப் பொண்ணு மாதிரி முன்னாலே நடந்துட்டா. கொண் டாங்க. உறை மோர் தருகிறேன்.

(கிண்ணத்தில் மோர் கொணர்ந்து பூலிக்குக் கொடுத்துவிட்டு தீவாலி திரும்பி வீட்டிற்குள் போகிறாள்.

**லாதோ:** (படபடக்கிறான்) மருமகள் சின்னப் பொண்ணு! வீட்டிற்கு வந்த பெண் பாவம் வீட்டிலே மனம் மருகிக் கிடக்க, கிழட்டு மாமியார் சினிமாப் பார்க்கக் கிளம்பிட்டா... இது தலைகீழ்ப் பாடம் இல்லேன்னா வேறென்ன? (ஏதோ ஒரு முடிவிற்கு வந்தவனாக) மருமகளே! தயாரா இருக்கிறாயா?

**தீவாலி:** (வெளியே எட்டிப் பார்த்து) சாப்பாடு கொண்டு வரட்டுமா? அப்பா!

**லாதோ:** சாப்பாடு வேண்டாம்மா. நீ எழுந்து வேறு உடை மாத்திக்க அம்மா!

**தீவாலி:** எங்கே போக!

**லாதோ:** சினிமாவுக்குத்தான்.

**தீவாலி:** ஆனால்....

**லாதோ:** ஆனால், கீனா எல்லாம் பின்னாலே பார்த்துக் கிடலாம். மருமகளே! நேரமாயிடும். புறப்படு சீக்கிரம். அவளுக்கு மட்டுமில்லை. மத்தவங் களுக்கும் ஆசை உண்டு என்பதை உன் மாமியாருக்குக் காட்டிடலாம். இன்னிக்கு (தீவாலி தயாராகி வெளியே வருகிறாள்) நீ முன்னால் நடம்மா. நான் வீட்டைப் பூட்டிவிட்டு (சாவியை பூட்டில் சுழற்றியவாறே) வருகிறேன். பூலி அக்கா! கொஞ்சும் வீட்டைப் பார்த்துக் கொள்.

**பூலி:** எங்கே கிளம்பிட்டீங்க அண்ணே?

**லாதோ:** மருமகளை சினிமாவுக்கு அழைச்சிட்டுப் போறேன். அவ மாமியார் அவளை விட்டுட்டுப் போய்விட்டா இல்லே?

**பூலி:** இப்படி ஒரு போக்கு உண்டா? ஊரார் என்ன நினைப்பாங்க?

**லாதோ:** யார் என்ன நினைச்சா அவளுக்கென்ன? வெட்கத்தை விட்டவ தன் ராஜாங்கம் நடத்தறா.

**பூலி:** இப்படியும் நடக்குமா? நாளைக்குத் தெரியப் போவுது. நாலுபேர் முன்னாலே உரிக்கப் போறேன் அவளை.

**லாதோ:** பாவம் சின்னப் பொண்ணு அழுதுக்கிட்டிருக்குது. கொண்டு போய்விட்டு விட்டு வரலாம்னு தோணிச்சு. சினிமா முடியுமட்டும் வெளியே தூங்கிட்டிருப்பேன். எனக்கு அதிலே என்ன புரியப் போவுது?

**பூலி:** ஆமா ஆமா. நீங்க கூட்டிட்டு போங்க அவளை. பாவம். கல்யாண மான முதல் வருஷம். சந்தோஷமாக இருக்க வேண்டாமா? கூட்டிப் போங்க அண்ணே.

(லாதோ வீட்டைப் பூட்டிவிட்டு போகிறான். அரங்கத்தில் சற்று நேரம் இருள் விரவி நிற்கிறது. பிறகு மீண்டும் ஒளி பரவுகின்றது. முற்றத்தில் காலைப் பொழுதின் ஒளியில் லாதோ அமர்ந்து சுகராம் தாதாவின் செருப்புகளைத் தைத்தவாறே பஜனைப்பாடலைப் பாடுகிறான்.

*லாதோ:* "வைஷ்ணவ ஜனதோ தேனே கஹியே
ஜே பீர் பராயீ ஜாணே ரே

(டீ கோப்பையுடன் ரூகி வருகிறாள். கணவன் அருகில் டீயை வைத்துவிட்டு குத்திட்டு உட்காருகிறாள். முகமும் கண்களும் கோபத்தால் சிவந்திருக் கின்றன.

**லாதோ:** ஒகோ... இன்னிக்கு நீ டீ எடுத்திட்டு வந்திருக்கியா?

**ரூகி:** மகன் பெண்சாதியோட சினிமாவுக்குப் போக உங்களுக்கு வெட்கமாக இல்லே? வயசைப் பத்தி கொஞ்சமாவது நினைப்பிருக்குதா?

**லாதோ:** சின்னப் பெண் மாதிரி கிளம்பிப் போக உனக்கு மட்டும் வெட்கமாக இல்லையா? ஊம்! ஏன் பேசமாட்டேங்குறே?

(ரூகி எழுந்து நிற்கிறாள். பிறகு கோபத்துடன் உள்ளே போகிறாள். அம்தா வெளியே வருகிறாள். முகத்திலே மகிழ்ச்சி தாண்டவ மாடுகிறது)

**அம்தா:** கொண்டாங்க அப்பா! நான் தைக்கிறேன்.

**லாதோ:** (செருப்பைக் கொடுத்தவாறே) ரொம்ப நாட்களுக்குப் பிறகு கிழவன் மேலே இரக்கம் வந்திருக்குதா அம்தா?

**அம்தா:** யோசனையோடு காரியத்தை நடத்தினீங்க அப்பா! இல்லேன்னா அவ அந்த சினிமாவைப் பார்த்தே இருக்கமாட்டா! நேத்துத் தான் கடைசி நாளாம். இன்று படம் மாறிடிச்சி. ரொம்ப கஷ்டப்பட்டு டிக்கட் கிடைச்சது. இதற்குள் அம்மா இடையிலே புகுந்துட்டா அம்மா முன்னாலே நான் என்ன செய்ய முடியும்? அப்பா! இப்ப எல்லாம் அம்மா பேச்சுக்குப் பேச்சு எரிஞ்சு விழறாங்க. அழுது புலம்பாமல் ஒரு காரியம், ஒரு பேச்சு நடப்பதில்லை.

**லாதோ:** நானென்ன செய்யட்டும் அம்தா? பாவம் அந்தப் பொண்ணு அழுதுட்டிருந்தது. என்னாலே பார்த்துக்கிட்டிருக்க முடியலே. அவளுக்கும் மனசுன்னு ஒண்ணு இருக்கில்லே?

**அம்தா:** அவ எல்லாத்தையும் என்கிட்ட சொன்னா. ஆனாலும் நீங்களும் விடலே ஜமாய்ச்சுட்டீங்க!

**லாதோ:** உன் அம்மாவிற்கு கோபம் கோபமாய் வந்திருக்குமே!

**அம்தா:** அது இல்லாமலா? கோபம், தீயை கொளுத்திட்டா. காலையிலே பூலி சித்தி வந்து நாலு கேள்வி கேட்டு கொஞ்ச நஞ்சம் பாக்கி இருந்ததும் முழுசாக்கிட்டா.

**லாதோ:** அவ நல்லாயிருக்கட்டும். ஆமாம். அவள் என்ன கேட்டாள்?

**அம்தா:** சின்னப் பெண்ணு கணக்கா சினிமாவுக்கு போக உனக்கு வெட்கமாக இல்லையான்னு கேட்டாள்.

**லாதோ:** நல்லா கேட்டாள். உன் அம்மாவுக்கு இது வேண்டும்.

**அம்தா:** அதிருக்கட்டும் அப்பா! மருமகளை சினிமாப் பார்க்க உட்கார வைத்துவிட்டு நான் வெளியிலே உட்கார்ந்திருக்க போறேன்னு சித்திக் கிட்ட சொன்னீங்களாமே?

**லாதோ:** அதுவா! சின்னப் பொண்ணு. தனியா எப்படி உட்காரும்னு அப்புறம் தோணிச்சு.

**அம்தா:** நல்ல காரியம்தான் செய்தீங்க. ஊரிலேயிருக்கிற முட்டாள் பசங்க வருவாங்க. அவங்களுக்கு நடுவே ஒரு பொண்ணு எப்படி தனியா உட்காருவது?

**லாதோ:** நீ எங்களைப் பார்த்தாயா? எப்பொழுது?

**அம்தா:** சொல்லட்டுமா? நீங்க ரெண்டுபேரும் டீ குடித்துக் கொண்டிருந்தீங்களே அப்பொழுது பார்த்தேன்.

**லாதோ:** டீயாவது வாங்கித் தர வேண்டாமா? பெரியவருடன் சினிமாவுக்குப் போனோம். ஒரு டீ கூட வாங்கித் தரவில்லைன்னு மனசிலே நினைக்காதா?

**அம்தா:** யார் வேண்டாமென்றது? நீங்க ரொம்ப ஜாலியா இருந்தீங்க. அப்புறம் குதிரை வண்டியில் ஏற்றியல்லவா கூட்டியாந்தீங்க?

**லாதோ:** ஆமாம். உங்களுக்கு முன்னால் வீடு வந்து சேரறது நல்லதுன்னு நினைச்சேன் இல்லேன்னா உங்க அம்மா கூச்சல் போடுவால்ல. ஆனால் தெருவில் உள்ளவர்கள் காதிலே விழப் போகிறதே என்ற பயத்தில் சும்மாயிருந்திட்டா.

**அம்தா:** ரொம்ப ஜோரா...அப்பா! வெகு பிரமாதம்.

(சுகராம் தாதா வருகிறார்)

**லாதோ:** வாங்க! தாதா! வாங்க!

**தாதா:** என்னபபா! செருப்பு தயாராக இருக்கிறதா?

**லாதோ:** இதோ பாருங்க தாதா.

**தாதா:** (செருப்பை இப்படியும் அப்படியும் பார்த்தவாறு) நல்லா தெச்சிருக்கே இல்லே?

**லாதோ:** ஆமாம் தாதா. அம்தாதான் தெச்சிருக்கான். வயசுப் பிள்ளைகை தெச்சிருக்குது. எப்படி அழுந்து போகும்? இன்னும் பத்து வருஷம் ஓடும். அம்தா என் தொழிலுக்கு வந்து விட்டான். (சற்றுப் பொறுத்து கம்பீரமான குரலில்) தாதா இதை நல்லாக் கேட்டுகிடுங்க. பழைய ஜோடுன்னு நினைச்சு மூலையிலே எறிஞ்சிடாதீங்க. அப்பப்போ தெச்சுப் போட்டா நல்லா ஓடும். தண்ணீரிலே போட்டுப் பதப்படுத்தணும். லேசா தேக்கணும். சுகமா ஓடிட்டிருக்கும். இதனாலே எங்க தொழிலும் நடக்கும். உங்களுக்கும் உபயோகமா இருக்கும். இந்த உடம்பு இப்படியே ஓடிக்கிட்டிருக்கும். என்ன தாதா நான் சொல்றது சரிதானே!

திரை விழுகிறது

# கடுவின் அம்மா

## சுனீலால் மடியா

**பாத்திரங்கள்**

டாஹீபாயி

சூரஜ்

தீரி

குரஜி சேட்

கடு

(திரை விலகும் போது வாயிற்பக்க முன்னறையின் கீழே ஆறு படிகளில் அறையும் அதைச் சார்ந்த முற்றத்திலிருந்து தெருவின் ஒரு பகுதியும் தென்படுகிறது. தெருவின் இடதுபுறத்தில் கொட்டிலின் ஒரு பகுதி தெரிகிறது. அங்கு ஒரு குதிரையும், ஒரு சிறிய எருமையும் கட்டி யிருக்கிறது. இரண்டிற்கும் நடுவே ஒரு முளைக் கொம்பு காலியாக இருக்கிறது. தெருவின் வலது புறத்தில் தைக்கப்பட்ட மூட்டைகளை நிறுக்க மூன்று கயிறுகளை திரித்துக் கட்டிய கொக்கி, தராசு மற்றும் முள் இருக்கின்றன. நிறுத்து நிறுத்து களைத்துப் போன முள் தராசுத்தடி, சணல்கயிறு முதலியன அறையின் ஒரு புறம் கிடக்கின்றன.

அறையின் பக்கத்திலே இரண்டு சிறிய கொட்டடிகள். இடது புறக் கொட்டடிக்கருகே 'தண்ணீரை வடி கட்டவும்' என இருமுறை எழுதப் பட்டுள்ளது. பக்கத்தில் ஒரு பழைய துலாக் கோல். வலது புறக் கொட்டடியின் அருகே சமையலறை. இரண்டு அறைகளின் நிலை வாயிற்படியின் மேலேயும், மரம், செடி, கொடி, கிளி போன்றவை சித்திர வேலைப்பாட்டுடன் கூடிய கண்ணாடி மணிகளால் ஆன ஜாலர்கள் தொங்குகின்றன. நிலைப்படியின் ஒரு பக்கத்தில் சிறிய மணிகளால் செய்த பிள்ளையார் உருவப்படம். இதைத் தவிர நிலைப் படிச் சட்டங்களில் முத்து, மணிகளால் அழகிய வேலைப்பாடு செய்யப்பட்டுள்ளது.

இன்னும் பல படங்கள் தவசி, பரமசிவன் மங்கல மந்திரங்கள் மற்றும் குடும்பத்தின் குழந்தைகளின் படங்கள். ஒரு ஆணியில் பிரம்பொன்று தொங்குகிறது.

படிகளில் ஏறியதுமே அறையின் நட்ட நடுவே கம்பம் உள்ளது. அதன் நீல வண்ணம் அடிக்கடி கைபட்டதனால் அழிந்திருக்கிறது. பற்குச்சிகள் கீழே சிதறிக்கிடக்கின்றன. மேலே ஒரு கொக்கியில் கடைச் சாவிகளின் கொத்தும், தானிய மூட்டைகளிலிருந்து தானியம் எடுக்கும் இரண்டு மூன்று பாத்திரங்களும் தொங்க விடப்பட்டுள்ளன. கம்பத்தில் சாய்ந்தவாறு டாஹீபாய் அமர்ந்திருக்கிறான்)

**டாஹீபாய்:** ஆண்டவனே எல்லாம் உன் கையில்தான் இருக்கிறதப்பா. பூப்போன்ற இக்குழந்தைக்கு உன்னைத் தவிர வேறு யார் துணை? பாவம்! தாயில்லாக் குழந்தையாகிவிடுவானே! தாயின் அன்பு எங்கே கிடைக்கப் போகிறது? (சற்று நேரம் கழித்து) புது அம்மா வருவாள். ஆனால் சொந்த அம்மா மாதிரி ஆகுமா...

(இடது புறக் கதவு திறக்கும் ஓசைகேட்கிறது. சூரஜ் உள்ளே வருகிறாள்.

**சூரஜ்:** (அறையின் படிகளில் ஏறியவாறே—என்ன விஷயம் மன்னி?

**டாஹீபாய்:** (முதுகைத் திருப்பி) யாரது? சூரஜா?

**சூரஜ்:** (மெதுவான குரலில்) மருமகனின் நோய் இவ்வளவு தூரம் முற்றிப்

போகும்னு நினைக்கவேயில்லை. ராஜ்கோட்டிலிருந்து மோட்டார் கார் வந்திருக்கிறதென்று உங்க மைத்துனர் சொன்னார். எனக்கு அப்பத்தான் தெரியும்.

**டாஹீபாய்:** எல்லோரும் சொன்னாங்க. அவரைக் கூப்பிட்டால்தான் ஆச்சுன்னு அதான்— என்ன பேரு சொன்னாங்க— சர்ஜன—ஆமாம். பெரிய மைத்துனருக்கு ரொம்ப இளகிய மனசு. மருமகளின் பிறந்த வீட்டுக்காரர்கள் சொல்ற படியெல்லாம் ஆடுறார்.

**சூரஜ்:** (குறுக்கிட்டு) எனக்குத் தெரியாதா இதெல்லாம்? இவர்தான் ஆரம்பத்திலிருந்தே எடுப்பார் கைப்பிள்ளையாயிற்றே.

**டாஹீபாய்:** நம்ப மருமகளின் அண்ணன் பலே கெட்டிக் காரர். இரண்டு வருஷமாக அவள் நோயாகக் கிடந்ததிலே அவளுக்கு வைத்தியம் பண்ணியே நம்ம குடும்பம் நொடிச்சுப்போச்சு. ஆனா அவரென்னவோ நீங்க சரியா கவனிச்சு. வைத்தியம் செய்யலே. அதனால் தான் நோய் முற்றிப் போச்சு— என்கிறார்.

**சூரஜ்:** இதைவிட அதிகமாக என்ன கவனிக்க முடியும்? மற்றப்படி மருந்து மாத்திரை எல்லாம் ஒழுங்காத்தான் நடக்குது.

**டாஹீபாய்:** ஆமாம்... மருந்து என்ன பானகமா, பெரிய சொம்பில் ஊற்றி ஊற்றிக் குடிக்க?

**சூரஜ்:** மருமகளுக்கு நாம செஞ்சிருக்கிற பணிவிடை கொஞ்ச நஞ்சமா?

**டாஹீபாய்:** (மகிழ்ச்சியுடன்) இதெல்லாம் அவருக்குத் தெரியும். இருந் தாலும் நமக்கு கெட்டபெயர் வர ணும்னு அவர் நினைக்கிறார். வேறொரு வராக இருந்தால் எப்பவோ மருமகளைப் பிறந்த வீட்டிற்கு அனுப்பி இருப் பாங்க. நாம அவளை நம்ம வீட்டிலேயே வைத்துக் பார்த்துக்கறோம். இதுவே பெரிய உபகாரம் அல்லவா?

**சூரஜ்:** (பேச்சை முடித்தவாறு) மன்னி, செய்யறவங்களைத்தான் எல்லோரும் குறை சொல்லுவாங்க.

(வாசலுக்கு வெளியே நிற்கும் காரின் ஹார்ன் ஒலிக்கிறது)

**டாஹீபாய்:** (தனக்கே உரிய கனத்த குரலில்) ஏய்! குழந்தைகளா? இறங்குங்கடா காரிலிருந்து! (சூரஜிடம்) நம்ம தெருக் குழந்தைகள் மகா வாலுகள். கார் வந்ததிலிருந்து துடுக்குத்தனம் செஞ்சிட்டே இருக்குதுகள்.

**சூரஜ்:** (டாஹீபாய் சொல்வதில் அக்கறையின்றி) ஏன் மன்னி? மருமகள் ஏதாவது பேசறாளா? இல்லே அப்படியே கிடக்காளா?

**டாஹீபாய்:** கல்லு கணக்கா அசையாம கிடக்கா.

**சூரஜ்:** ஆ...மா! கல்யாணமான நாளிலிருந்தே சரியா இல்லை. வியாதியும் புது தினுசு. ஹிஸ்டீரியாவா? வாயிலே கூட நுழைய மாட்டேங்குது!

**டாஹீபாய்:** எப்படித் தெரியும்? யாருக்காவது இது வந்திருக்குதா? இல்லை பார்த்துத்தான் இருக்கோமா? கேட்டது கூட இல்லை. அவள் செய்த பாவம் தான். இந்த நோய் வந்திருக்குது.

**சூரஜ்:** ஆ—ஆமாம். கர்மவினைதான். இல்லேன்னா இத்தனை சின்ன வயசிலே யாருக்கேனும் இம் மாதிரி நோய் வருமா?

**டாஹீபாய்:** ஆனால் டாக்டருக்கு இது எங்கே புரிகிறது? தனியாகவே இருக்கிறதனாலேதான் இந்த நோய் வந்ததாம். புருஷனுடன் கூட இருந்தால் தான் இந்த நோய் தீரும் இல்லேன்னா சரியாகாதுன்னு வேறே சொல்றார். இந்த உலகத்திலே இப்படியெல்லாம் நீ கேட்டிருக்கிறாயா?

**சூரஜ்:** எத்தனையோ பேர் தனியா இருக்க வேண்டியிருக்கு. புருஷன் வெளி நாட்டிலே சம்பாதிக்கிறான் என்றால் பெண்டாட்டி ஒண்டியா இல்லாமெ எப்படி ரெட்டையா இருக்க முடியும்?( சிரிக்கிறாள்)

**டாஹீபாய்:** நீதான் சொல்லு! மலாக் என்ன பக்கத்திலேயா இருக்குது. கடுதாசி எழுதியதும் அவன் கிளம்பி வர அவன் புறப்பட்டுப் போய் முழுசா மூணு வருசம் ஆகலே. ஒரு தடவை வந்து போக என்ன செலவாகும் தெரியுமா?

(சற்று நேரம் வரை ஒருவரும் பேசவில்லை. வலது புற அறையி லிருந்து தீரி வாயிற்படியிலிருந்து வெளியே வருகிறாள்)

**தீரி:** அம்மா!

**டாஹீபாய்:** என்னம்மா கண்ணு! அண்ணிக்கு எப்படி இருக்குது?

**தீரி:** (உற்சாகமற்ற குரலில்) அப்படியே தானிருக்குது. (சலிப்புடன்) பையை எங்கே வைத்திருக்கிறாய்?

**டாஹீபாய்:** பெட்டிக்கு மேலே.

**தீரி:** சரி (போகிறான்)

**டாஹீபாய்:** நான் வரட்டுமா?

**தீரி:** (அறையின் உள்ளேயிருந்து) வேண்டாம். யாருமே வரக்கூடாதுன்னு டாக்டர் சொல்லி இருக்கிறார். இனிமேல் இங்கே யாருக்கும் வேலையில்லை.

**டாஹீபாய்:** பகவானே!

**சூரஜ்:** பாவம், பாபுவின் தலை எழுத்து இப்படியா ஆகணும்? (தலையில் கை வைத்துக் கொள்கிறாள்)

**டாஹீபாய்:** (சற்று நேரம் மௌனமாக இருந்து திடீரென ஏதோ நினைவு வந்தவள் போல்) இதிலே தலைவிதி எங்கிருந்து வந்தது? ஆண் பிள்ளை என்னிக்கும் பாக்கியசாலிதான். பாபுவிற்கு என்ன? அவனுக்காக இருபது பெண்களின் தகப்பன்மார்கள் வரிசையாகக் காத்துக் கிட்டிருக்காங்க.

(சூரஜ் பெருமையுடன் அவளைப் பார்க்கிறாள்)

**சூரஜ்:** (கண்களைச் சிமிட்டியவாறே) அப்படியா?

**டாஹீபாய்:** (கம்பீரமாக) பின்னெ என்ன? கிருஷ்ணனைப் போல அழகும் புத்திசாலித்தனமும், சாமர்த்தியமும் உள்ள பிள்ளை. மலாக்காவில் கைநிறைய சம்பாதிக்கிறான். சும்மா லேசிலே கிடைத்து விடுவானா? அது மட்டுமா? பரம்பரை திவானின் வீடு. எத்தனை தலைமுறையாய் திவானா இருந்த குடும்பம் இது! வியாபார மெல்லாம் இப்பொழுதுதானே! முன்னா லெல்லாம் தர்பாரில் ராஜாவுக்கு அடுத்தபடியா இவங்களுக்குத்தான். ஆசனம்...

**சூரஜ்:** (டாஹீபாயுடன் கூட) அப்புறம் இந்தக் காலத்திலே பார்த்தால்கூட ஜோத்பூர் முச்சூடும் இத்தனை உயரமான மாளிகை எங்கே இருக்குது சொல்லுங்க. கோதட்வாலாவின் கோட்டை கூட இதற்கு முன்னால் எம்மாத் திரம்?

(டாஹீபாயி சந்தோஷத்துடன் தனது ஒப்புதலை தெரிவிக்கிறாள். இதைக் கண்ட சூரஜ் மேலும் மிகைப்படுத்தி வருணிக்கத் துவங்குகிறாள்)

புரட்டாசிக் கடைசியிலே மழை வருமே அப்ப நம் வீட்டு மேற்கூரை துல்லியமாகத் தெரியும்!

(பள்ளியிலிருந்து கடு அழுது கொண்டே வருகிறான். அவன் கையிலுள்ள ஸ்லேட் இரண்டு துண்டாக உடைந்திருக்கிறது. மரச் சட்டம் தனியாக இருக்கிறது)

**டாஹீபாய்:** (கடு அழுவதைக் கண்டு) என்னடா குழந்தை! என்ன நடந்தது? யார் அடிச்சாங்க? (பதிலில்லை) வாத்தியார் மிரட்டினாரா? (ஸ்லேட்டைப் பார்த்து) இதென்னடா! எப்படி உடைஞ்சு போச்சு இது?

**கடு:** (இரண்டு கைகளாலும் கண்களைத் தேய்த்தவாறு விம்மல் களினிடையே) வழியிலே பசுமாடெல்லாம் மந்தையா வந்து...வந்திட்டிருந் திச்சு...

**டாஹீபாய்:** அப்போ என்ன ஆச்சு? சொல்லும்மா. என் கண்ணல்ல.

**கடு:** மாடு வந்து என்னை...முட்டித் தள்ளி...ஊ... ஊ...ங்

**டாஹீபாய்:** (திகிலடைந்து அன்புடன்) அச்...சோ...ச்சோ...வேண்டாம். (கடுவை மடியில் அமர்த்திக் கொண்டு) நாசமாய் போகிற மாடு (கொஞ்சலாக) எங்கேயாவது அடிகிடி பட்டதா என் குழந்தைக்கு?

**கடு:** (விம்மல்களுக்கிடையே) ஊ...ஹூம். விழுந்திட்டேன் ஸ்லேட்டு உடைஞ்சு போச்சு.

**டாஹீபாய்:** ஒகோ! (ஆறுதல் கூறியவாறே) இதுக்காக அழுவாங்களா? புதுசா நல்ல ஸ்லேட்டு வாங்கித் தறேன் சரியா! இப்ப அழக்கூடாது. தெரிஞ் சுதா

**கடு:** அம்...மா...

**டாஹீபாய்:** இதோ பாரு அம்மா தூங்கறா. நீ அங்கே போகக் கூடாது. சமத்தோல்லியோ!

**டாஹீபாய்:** பாரு இவனை...பழையபடி அதே பைத்தியம்... அம்மா தூங்கறான்னு சொன்னேனேன்லே. அதனாலே போகக் கூடாது. சமத்துக் குழந்தையில்லையா நீ!

(மடியிலிருக்கும் சிறுவனின் தலையைக் கோதி விடுகிறாள்)

**கடு:** அம்மா எழுந்திருக்கவே மாட்டாளா?

(அழத் து[illegible]கினான். தீரி அறைக்குள்ளே வந்து டாஹீபாயை ஜாடை காட்டி கூப்பி[illegible]றாள்)

**டாஹீபாய்:** (எழுந்து சென்று கொண்டே கடுவிடம் கூறுகிறாள்) இதோ

வரேன் கொஞ்சம் இரு. (சூரஜின் காதில் விழும்படியாக) சித்திகிட்ட விளையாடிக் கொண்டிரு. தெரிந்ததா?

**சூரஜ்:** (கடுவை கொஞ்சியவாறு) உனக்குப் புது சிலேட்டுத் தானே வேணும்? அழாமலிரு பார்க்கலாம்.

(கடு அழுகிறான். சூரஜ் தன் புடவைத் தலைப்பினால் அவன் கண்ணீரைத் துடைக்கிறாள்)

**கடு:** அ...ம்...மா...! அ...ம்...மா...!

**சூரஜ்:** இதோ வந்துடுவா...கண்ணு!

**கடு:** (எழுந்து அறையை நோக்கி ஓடப் பார்க்கிறான்) அம்மா! அம்மாகிட்டே...

**சூரஜ்:** (கடுவைப் பிடித்து வைத்துக் கொண்டு) இதோ பாரு கண்ணா! உள்ளே போகக் கூடாது. அம்மா தூங்கறா இல்லே? அதனாலே உள்ளே போகக் கூடாது.

(மௌனம் நிலவிய அறையிலிருந்து இப்பொழுது பேச்சுக் குரல் கேட்கிறது. பூட்ஸின் ஓசையும் கேட்கிறது. சற்று நேரத்திற்குப் பின் டாக்டர் வெளியே வருகிறார். டக்டக் என்று நடந்து அறையின் கதவருகே சற்று நின்று துரிதமாக படியிறங்கிச் செல்லுகிறார். அவருக்குப் பின்னால் டாஹீபாய் அழுது கொண்டே வெளியே வருகிறாள்)

**டாஹீபாய்:** (சூரஜிடம்) மருமகளே! பின்பக்கம் படேல் வீட்டுத் தொழுவத்திலிருந்து கொஞ்சம் பசுஞ்சாணி எடுத்துக் கொண்டுவா.

**சூரஜ்:** (விஷயத்தைப் பிரிந்து கொண்டு சட்டென்று எழுந்து நிற்கிறாள்) இதோ ஒரு நிமிஷத்திலே கொண்டு வறேன் (போகிறாள்)

(வாசலில் நிற்கும் மோட்டாரின் கதவு பலத்த ஓசையுடன் சாத்தப்படுகிறது. உடனே புரொப்பல்லரின் கிர்...கிர் என்ற ஓசை கேட்கிறது. சில கணங்களுக்குப் பிறகு பூம்...பூம் என்ற ஹார்ன் ஓசையும் கேட்கிறது)

**கடு:** (தனியே விடப்படுகிறான்) அம்மா...அம்மா...அம்மா.

**டாஹீபாய்:** (கடுவை மடியில் அமர்த்திக் கொண்டே) நீ கொடுத்து வைத்தது அவ்வளவுதாண்டா...(சில வினாடிகளுக்கு பிறகு) நம்ம எல்லோர் தலையிலும் இடிவிழுந்து விட்டதடா.

**கடு:** அம்மா எப்பொ எழுந்திருப்பா! சொல்லு! எப்ப எழுந்திருப்பா?

**டாஹீபாய்:** இனி உங்கம்மா எழுந்திருக்கவே மாட்டாளடா கண்ணா.

**கடு:** அம்...மா! ஓ...அம்மா...!

(வெளியிலிருந்து விவசாயி வருகிறான். வந்து அறையின் படிக்கட்டுகளினருகே நிற்கிறான்)

**டாஹீபாய்:** என்னடாப்பா! என்ன விஷயம்?

**விவசாயி:** குர்ஜி சேட் இருக்காங்களா?

**டாஹீபாய்:** இருக்காரு— என்ன வேணும்?

**விவசாயி**: மயாசன் சேட் கூப்பிடறாங்க.

**டாஹீபாய்**: (மகிழ்ச்சியும் வியப்பும் பொங்கும் குரலில்) மயாசன் சேட்டா? எப்படி வந்தார்?

**விவசாயி**: குதிரை மேலே ஏறி வந்திருக்காங்க

**டாஹீபாய்**: ஊம் எங்கே தங்கி இருக்காங்க?

**விவசாயி**: லாயத்திலே குதிரையைக் கட்டிவிட்டு, குர்ஜி சேட் இருந்தா கூட்டிவான்னு சொன்னாங்க.

(டாஹீபாயின் விழிகளில் மகிழ்ச்சியின் ஒளி தோன்றி மறைகிறது. ஆனால் உடனே முகத்தை பழையபடி வைத்துக் கொண்டு அறைக்குள் செல்லுகிறாள். அறைக்குள்ளே இருந்து தாழ்ந்த குரலில் பேசுவது கேட்கிறது. சிறிது நேரத்திற் கெல்லாம் குர்ஜிசேட் வெளியே வருகிறார். டாஹீபாய் பின்னால் வருகிறாள்)

**குர்ஜி சேட்**: (டாஹீபாயிடம்) நான் கொஞ்ச நேரத்தில் வந்து விடுகிறேன்.

(படிகளில் இறங்குகிறார். குதிரை காதுகளை உயர்த்திக் கொண்டு கனைக் கிறது. குர்ஜிசேட் வாயிற்படியைக் கடக்கிறார். விவசாயி அவர் பின்னே செல்லுகிறான். டாஹீபாய் அவனைத் தடுக்கிறாள்)

**டாஹீபாய்**: இந்தாப்பா!

**விவசாயி**: உம். என்னம்மா! (நிற்கிறான்)

**டாஹீபாய்**: மயாசன் சேட்டின் குதிரைக்கு இந்தக் குவியலிலிருந்து கொஞ்சம் வெந்தயக் கீரை எடுத்திட்டுப் போ.

(விவசாயி குவியலிலிருந்து கொஞ்சம் கீரை எடுத்துக் கொள்கிறான்) இரண்டு கையிலேயும் அள்ளிக்கிட்டுப் போ.

**கடு**: (தொடர்ந்து அழுதவாறே) அம்மா இனிமே விழித்துக் கொள்ளவே மாட்டாளா?

**டாஹீபாய்**: (தயக்கத்துடன்) மாட்டாள் (பேச்சை மாற்றியவாறு) இதோ பாரு! உனக்கு புது ஸ்லேட்டு வேணுமா?

**கடு**: (அழுது கொண்டே) வேண்டும்.

**டாஹீபாய்**: (சந்தோஷமடைந்து) எத்தனை பெரிசு வேண்டும்? சொல்லு பார்க்கலாம்.

**கடு**: ரொம்ப பெரிசு...இ.த்.தனை பெரிசு.

**டாஹீபாய்**: எத்தனை பெரிசு? (இரு கைகளையும் அகல விரித்து) இத்தனையா?

**கடு**: இல்லை.

**டாஹீபாய்**: (இன்னும் அகல விரித்து) இத்தனை?

**கடு**: ஆமாம்.

**டாஹீபாய்**: ஓகோ... இத்தனை பெரிசு வேணுமா?

**கடு**: ஆமாம். ஆமாம்.

**டாஹீபாய்**: (கடுவின் கன்னத்தோடு கன்னம் வைத்து) என் கண்ணு! (சூரஜ் கையில் சாணியுடன் வருகிறாள்)

**சூரஜ்**:( டாஹீபாயிடம்) மன்னி— மருமகப் பெண்ணு இறந்து போன செய்தி கிராமத்தில் பாதிக்கு மேல் பரவிடிச்சி.

**டாஹீபாய்**: டாக்டருடைய மோட்டார் கிளம்பிப் போச்சா பின்னாலேயே உன் பெரிய மைத்துனரும் வெறும் தலையுடன் போனார். செய்திப் பரவாதா என்ன?

**சூரஜ்**: மைத்துனர் வெளியே போயிருக்கிறாரா?

**டாஹீபாய்**: ஆமாம்.

**சூரஜ்**: எல்லோரையும் இழவுக்கு வரும்படி சொல்லப் போயிருக்கிறாரா?

**டாஹீபாய்**: ஆமாம். தேங்காய், கயிறு எல்லாம் வேண்டாமா? பிணத்தை எடுக்க ஆட்கள் இல்லாமல் முடியுமா?

**சூரஜ்**: அதுக்காகத்தான் போயிருப்பாங்க!

**டாஹீபாய்**: ஆமாம். அதுக்குத்தான். அப்படியே பக்கத்திலே மயாசன் சேட் வந்திருக்கிறாராம். அவரையும் பார்த்திட்டு வந்திடுவாங்க.

**சூரஜ்**: (பொருள் பொதிந்த குரலில் நீட்டி முழக்கி) அ..ப்.ப..டி..யா? சரி.

**டாஹீபாய்**: (பேச்சை மாற்றும் நோக்கத்துடன்) ஏதாவது காரியமிருந்தால் சொல்லு. நான் உள்ளே வருகிறேன்.

**சூரஜ்**: வேண்டாம். வேண்டாம். அப்பறம் கடு அழுகையை நிறுத்த மாட்டான். நீங்க அவனை வெச்சுக்கிட்டு இங்கேயே உட்கார்ந்திருங்க. நான் தரையை மெழுகி நெய் விளக்கு ஏற்றி வைச்சுட்டு வர்றேன்.

(சூரஜ் உள்ளே போகிறாள்)

**டாஹீபாய்**: விளக்குக்கு நெய் தனியாக வைத்திருக்கிறேன். அந்தக் கிண்ணத்திலிருந்து எடுத்துக் கொள்.

**சூரஜ்**: (அறைக்குள்ளே இருந்து) சரி.

**டாஹீபாய்**: திரியும் மாடத்திலே இருக்கு.

**சூரஜ்**: (அறைக்குள்ளே இருந்து) சரி, பார்த்து எடுத்துக்கிறேன்.

**டாஹீபாய்**: (சிரமப்பட்டு சமாதானம் செய்திருந்த கடுவை வேறு பேச்சில் ஈடுபடுத்த முயன்றவளாய்) கடு! நீ விரலிலே என்னப்பா போட்டிருக்கே?

கடு: மோதிரம்.

**டாஹீபாய்**: யாருடைய மோதிரம்?

**கடு**: என்னோடது.

**டாஹீபாய்**: அப்படியா?

**கடு**: ஆமாம்.

**டாஹீபாய்**: எனக்குக் கொடுப்பியா இதை?

(தீரி அறைக்குள்ளேயிருந்து வெளியே வருகிறாள்)

**தீரி**: அம்மா!

**டாஹீபாய்**: என்னம்மா?

**தீரி**: மன்னியின் காதிலே மூக்கிலே எதையும் காணோமே?

**டாஹீபாய்:** காது தோட்டை சுத்தப்படுத்தச் சொல்லி தட்டானிடம் கொடுத்திருக்கு. மூக்கிலிருந்த முத்தையும், கையிலிருந்த வளையலையும் இன்னிக்கு காலையிலேயே கழட்டிட்டேன்.

**தீரி:** (மகிழ்ச்சியுடன்) சரி. சரி அதெல்லாம் எங்கே போய்விட்டதோன்னு நான் பயந்தே போனேன்.

**டாஹீபாய்:** தீரி! இந்த கடுவைக் கொஞ்சம் பார்த்துக் கொள். நான் உள்ளே கொஞ்சம் போய்விட்டு வருகிறேன்.

**தீரி:** ஊஹூம். முடியாது. இவளை என்னால் சமாளிக்க முடியாது. நீயே பார்த்துக் கொள்.

**டாஹீபாய்:** ஏதாவது வேலையிருந்தால் வருகிறேன்.

**தீரி:** வேண்டாம், வேண்டாம், சித்தி இருக்கா. பார்த்துக் கொள்ளுவா. (போகிறாள்)

**கடு:** அம்...மா... அம்மா எங்கே? (உரக்க அழ ஆரம்பிக்கிறான்)

(அறைக்குள்ளேயிருந்து சூரஜ் வருகிறாள்)

**சூரஜ்:** (சோகத்தினால் கனத்திருந்த கன்னத்தில் விரலை வைத்தவாறே) அண்ணி மருமகள் மேல் எதைப் போடுவது?

**டாஹீபாய்:** (சற்று நேரம் யோசித்த பிறகு) சுமங்கலியாக போனவளுக்கு விலை உசந்த துணிதானே போர்த்துவது வழக்கம்?

**சூரஜ்:** (உரிமையுடன் ஆலோசனை கூறியவாறு) ஆமாம். அது தான் வழக்கம்.

**டாஹீபாய்:** அவளுடைய இரண்டு நல்ல புடவை இருக்கிறது. ஒண்ணு கல்யாணப் புடவை. இன்னொன்று பிள்ளையுண்டாகி இருந்தபோது வாங்கினது. இரண்டுமே சும்மா அப்படியே தான் இருக்கு. ஒரே ஒருதரம் கட்டியிருப்பா. அவ்வளவுதான். இதற்கு பிறகு பகவான் அவளை எங்கே நன்றாக வாழவிட்டார்? கல்யாணப் புடவையின் மடிப்புக் கூட கலையவில்லை...

**சூரஜ்:** அது நிறைய ஜரிகை போட்ட பெரிய புடவையில்லே?

**டாஹீபாய்:** ஆமாம். மூன்னூறு ரூபாய் கொடுத்து வாங்கினது. எவ்வளவு கனம் தெரியுமா? எடுத்து உடுத்தவே முடியாது.

**சூரஜ்:**( சகஜமாக) அப்படீன்னா அதையே போடலாமா?

**டாஹீபாய்:** (திடுக்கிட்டு) அந்தப் புடவையையா?

**சூரஜ்:** (டாஹீபாயின் கேள்வியைப் புரிந்து கொள்ளாமல் முன் போலவே சகஜ பாவத்துடன்) ஆமாம். அந்தப் புடவையைத்தான். நம்ப குடும்பத்தின் பரம்பரைப்படி, சுமங்கலிப் பெண்ணிற்கு எதன் மீது ரொம்ப ஆசையோ, அதைத் தான் போர்த்த வேண்டும். இவ்வளவு பெரிய வீட்டில் வாழ்க்கைப் பட்டு பாவம் அவள் என்ன அனுபவித்தாள்?

**டாஹீபாய்:** (தர்ம சங்கடமான நிலையில்) ஆனால் அந்தப் புடவை சீராகக் கொடுத்தாச்சே!

**சூரஜ்:** அது சரி!

**டாஹீபாய்:** இந்த மாதிரிப் பொருள்களுக்கு ஆயிரம் தேவையிருக்கும். நாளைக்கே ஒரு சந்தர்ப்பம் வந்தால் மறுபடியும் சீர்புடவை வைக்க வேண்டாமா?

**சூரஜ்:** அடே! ஆமாம். ஆமாம். எனக்கு நினைவேயில்லை.

**டாஹீபாய்:** இவ்வளவு விலை உசந்த புடவையை அடிக்கடி வாங்க முடியுமா?

**சூரஜ்:** இல்லை, முடியாது.

**டாஹீபாய்:** (மகிழ்ச்சியுடன்) இப்பொ புரிஞ்சுதா? வீட்டிலேயா கிடக்கப் போவுது அது! நாளைக்கே பாபுவிற்கு கல்யாணமானால் கொடுக்கலாம். புதுப் பெண் பண்டிகை பருவங்களில் கட்டிக் கொள்ளுவா இல்லே!

**சூரஜ்:** ஆமாம். நீங்க சொல்றது நூற்றுக்கு நூறு நிஜம்.

**டாஹீபாய்:** (ஒப்புதல் கிடைத்த சந்தோஷத்தில் மேலும் உற்சாகத்துடன்) ரொம்பநாள் கட்டிக் கொண்டு கிழிந்து போனாலோ, மங்கிப் போனாலோ என்ன? உபயோகமில்லாமலா போகப் போகிறது? கடு பெரியவ னானால் அதில் தலைப்பாகை தைத்து விடலாம்.

**சூரஜ்:** அப்படியென்றால் அந்த இன்னொரு புடவையைப் போடட்டுமா?

**டாஹீபாய்:** ஆமாம். அந்தக் கூரைப் புடவையைப் போட வேண்டாம். அது நாளைக்கே உபயோகப்படும். இன்னொன்னையே எடுத்துக் கொள்.

(சூரஜ் உள்ளே போகிறாள்)

**கடு:** அ...ம்...மா...!

**டாஹீபாய்:** இதோ வருவாமா கண்ணா!

கடு: அ...ம்...மா!

**டாஹீபாய்:** (அவனை அரவணைத்து சமாதானப் படுத்துகிறாள்) இதோ பாரு வந்துவிடுவாள் (வாசல் படியை நோக்கி கூப்பிடுகிறாள்.) ஓ கடுவின் அம்மா (பதில் கிடைத்தது போன்ற பாவனையுடன்) ஓ வாயேன் சீக்கிரம்! கடுட உனக்காக காத்திருட்டிருக்கான். பாரு. (கடுவிடம்) இதோ வந்துவிடு வாளடா...அழாதே!

(வாசல் வழியாக குர்ஜிசேட் பிரவேசிக்கிறார். தலையில் வெள்ளைத் தலைப்பாகையை சுற்றிக் கொண்டிருக்கிறார். ஒரு கையில் தேங்காயும், கயிறும் மற்றொரு கையில் இனிப்புப் பொட்டலம்)

**டாஹீபாய்:** உறவு முறையிலெல்லாம் சாவுக்கு வரும்படி சொல்லிவிட்டு வந்தீங்களா?

**குர்ஜி சேட்:** சேதி சொல்லிவிட்டு வரும்படி நாவிதனை அனுப்பி இருக் கிறேன்.

**டாஹீபாய்:** சரி. மயாசன் சேட் சமாசாரம் அப்புறம்...

**குர்ஜி சேட்:** (இடைமறித்து) வீட்டை விட்டு வெளியே வந்ததுமே தண்ணீர் குடத்துடன் ஒருத்தி வந்தாள். நல்ல சகுனமாச்சு.

**டாஹீபாய்:** (மகிழ்ச்சியுடன்) பேஷ். நல்லது.

**குர்ஜி சேட்:** மயாசன் சேட்— நிச்சயம் செய்து கொண்டு போ என்றார்.

**டாஹீபாய்:** (பரபரப்புடன்) நீங்க என்ன சொன்னீங்க?

**குர்ஜி சேட்:** இரண்டு நாள் தங்கிட்டுப் போங்கன்னு சொன்னேன். அவர் ஒரு துண்டு வெல்லமாவது சாப்பிட்டுத்தான் போகணும். இல்லைன்னா எழுந்திருக்க விடமாட்டேன். நிச்சயதார்த்தம் உங்கள் இஷ்டப்படி செய்து கொள்ளுங்க என்றார்.

**டாஹீபாய்:** அப்புறம்? நீங்க என்ன சொன்னீங்க?

**குர்ஜி சேட்:** வெல்லத்தை நான் வாயிலே போட்டுக் கொண்டு விட்டேன். சாவுச் சடங்கெல்லாம் முடிந்த பிறகு நிச்சயதார்த்தம் வைத்துக் கொள்ளலாம்.

**கடு:** அ..ம்..மா... அ..ம்..மா (அழத் துவங்குகிறான்)

**டாஹீபாய்:** (கொஞ்சலாக) கடு கண்ணா! இதோ பாருடா! உனக்கு புது ஸ்லேட்டு வேணுமோல்லியோ!

(அறையை நோக்கி சென்று கொண்டிருக்கும் குர்ஜி சேட்டிடம் சொல்லுகிறான்) இதோ பாருங்க! கடுவிற்கு புதிய ஸ்லேட்டு வாங்கிக் கொண்டு வாருங்கள்.

**குர்ஜி சேட்:** சாவு சடங்கெல்லாம் முடிந்த பிறகு வாங்கி வறேன். நல்ல குழந்தையோ இல்லையோ? அழாமல் இரு கண்ணா! புதிசா வாங்கித் தறேன்.

திரை விழுகிறது.

# கடன் பட்டவர்கள்

## புஷ்கர் சந்தர்வாக்கர்

**பாத்திரங்கள்**

ரூபாலி

தூர்சிங்

தீப்சிங்

ராய் சந்த்

சிப்பாய்

(வீட்டின் ஒரு மூலை. செங்கற்களை வைத்து அடுப்பு மாதிரி கட்டப் பட்டுள்ளது. அடுப்பின் முன்னால் பாதி எரிந்த வரட்டியின் சாம்பல் குவியல். சாம்பல் குவியலின் மீது மூடி போட்ட சிறிய கூடை. அருகில் சோறு சமைக்கும் பாத்திரம், தட்டு, மர அகப்பை, இரும்பு இடுக்கி, தண்ணீர் பாத்திரம், உடைந்த வாணலியின் துண்டுகள் இங்குமங்கும் இறைந்து கிடக்கின்றன. அடுப்பில் சட்டியை ஏற்றியிருக்கிறது. வரட்டி எரிந்து கொண்டிருக்கிறது.

ரூபாலி வருகிறாள். வயது இருபதிற்கும் முப்பதிற்கும் நடுவே. முகம் உருண்டையுமல்ல. நீளமுமல்ல. பொன்நிறம். விழிகளில் இளமையின் மினு மினுப்பு. தலைப்பின் ஒரு நுனியை முன்னால் இழுத்துச் சொருகி இருக்கிறாள். தலைப்பு தலையையும், முதுகையும் மூடியிருக்கிறது. ராஜஸ்தானி ரகப் பாவாடை. இருட்டில் மின்னும் தாரகை போல் சூரிய ஒளியில் பாவாடையில் பதித்த அப்பிரகத் துண்டுகள் மின்னுகின்றன. முழுக்கை வைத்த சோளி, ஒருகையில் வளையல். மற்றொருகை காலியாக இருக்கிறது. காலில் காப்பு இல்லை. அடுப்பின் முன்னால் அமர்ந்து அகப்பையை எடுத்து பானையிலிட்டு சோறு வெந்திருக்கிறதா என்று பார்க்கிறாள்.

**ரூபாலி:** (சோற்றைப் பதம் பார்த்தவாறு) அந்த ராய் சந்த் என்ன அரிசி கொடுத்திருக்கிறான்? எத்தனை நேரம் கொதிக்க வைத்தாகிவிட்டது இன்னும் உள்ளே வேகவில்லை கல்லுப் போலிருக்கிறதே.

(விறகு அறையிலிருந்து வரட்டியை எடுத்து அடுப்பில் வைக்கிறாள். இதற்குள் அவளது மகன் சூர்சிங் உள்ளே வருகிறான். உடம்பில் அழுக்கான சட்டை. கையில் கரும்பு. ஒரு காலில் வெள்ளிக் காப்பு. இடது கரத்தில் கருப்பு கயிறு கட்டியிருக்கிறான். கழுத்தில் வெள்ளிப் புலிநகம்.

**சூர்சிங்:**(வந்ததுமே) அம்மா!

**ரூபாலி:** இப்ப என்ன ஆச்சு?

**சூர்சிங்:** இந்தா! எடுத்துக்கோம்மா! எனக்கு வேண்டாம், உன் கரும்பு.

**ரூபாலி:** இத்தனை கரும்பு எடுத்து வருவானேன்?

**சூர்சிங்:** (கரும்பை வீசி எறிந்தவாறு) எனக்கு வேண்டாம். போ. (திடீரென்று) இந்தக் கரும்பை எவன் சாப்பிடுவான் காய்ந்து கிடக்கிறது.

**ரூபாலி:** (சிரித்துக் கொண்டு) பொல்லாது!

**சூர்சிங்:** அம்மா—பசிக்குது. சாப்பாடு போடு.

**ரூபாலி:** கரும்பைச் சாப்பிடு, சாப்பிட பிடிக்கலேன்னா இத்தனை சோளத்தைக் கொண்டு போய் பனியாவின் கடையில் ஏன் போட்டே?

**சூர்சிங்:** நீ தானே கொடுத்தே?

**ரூபாலி:** ஆமாம். நான் தான் தின்னவும் சொல்றேன்.

**தூர்சிங்:** எனக்குப் பிடிக்கலே. வாயெல்லாம் புண்ணா யிடிச்சி.

**ரூபாலி:** (கரும்பைப் பார்த்து) இப்பொ ஏன் வேண்டாம்? வயிறு நிரம்ப தின்னுட்டேன்னு சொல்லேன்.

**தூர்சிங்:** சாப்பாடு போடு. (தரையில் உட்கார்ந்து கால்களை உதைக்கிறான்)

**ரூபாலி:** அப்பா...யமதூதன் மாதிரி...

**தூர்சிங்:** அம்மா! பசிக்குது. ரொம்பவே பசிக்குது.

**ரூபாலி:** வெல்லம் தரட்டுமா? சோறு ஆக இன்னும் கொஞ்சம் நேரமாகும்.

**தூர்சிங்:** தினம் தினம் அரிசிச் சோறு. எனக்கு இந்த சாப்பாடு பிடிக்கலை. சாப்பாடு வேண்டாம். போ.

**ரூபாலி:** (கோபத்துடன்) சாப்பாடு வேண்டாம்னா போ. எல்லாம் உன் அதிகாரமோ? சோறு எப்படி இருக்குதுன்னு உன் அப்பாகிட்ட கேளு. அந்த கரிமூஞ்சி ராய்சந்த்! களத்து மேட்டிலிருந்தே ஒவ்வொரு மணி தானியத்தையும் வாரி எடுத்திட்டுப் போய்விட்டான். நமக்கு இந்த அரிசிதான் எழுதியிருக்குது.

**தூர்சிங்:** (உரக்க அழுதவாறே) வேண்டாம் போ! நான் இதைச் சாப்பிட மாட்டேன். சாப்பாடு வேண்டாம்.

**ரூபாலி:** இதைத்தான் சாப்பிட்டாகணும்?

**தூர்சிங்:** (அழுகையைக் குறைத்துக் கொண்டு) என்ன கீரை?

**ரூபாலி:** காயா? முதலில் வீட்டிலே எவ்வளவு கீரை இருக்குன்னு பாரு.

**தூர்சிங்:** எதை ஊற்றிக் கொண்டு சாப்பிடுவது?

**ரூபாலி:** மதா சித்தப்பா வீட்டு மோரை ஊற்றிக் கொண்டு.

**தூர்சிங்:** மயிலோட கண்ணீர் மாதிரி இருக்குது. அந்த மோரு. அதை ஊற்றினா ஒரு கவளம் கூட தொண்டைக்கு கீழே இறங்காது.

**ரூபாலி:** பொழுது சாயற மட்டும் அலைஞ்சு அலைஞ்சு மணங்கு புழுதி மண்ணல்ல உங்கப்பா வயிற்றிலே போவுது! இந்த ராஜகுமாரனுக்கு ராஜ போகம் கேட்குது!

(மீண்டும் சோற்றைப் பதம் பார்க்கிறாள். தூர்சிங்கின் அழுகை தொடருகிறது)

**தூர்சிங்:** ஊ..ஹு..ஊ பசிக்குது. ரொம்பப் பசிக்குது.

**ரூபாலி:** தட்டைக் கொண்டுவா. கொஞ்சம் ஆற வைக்கிறேன்.

**தூர்சிங்:** மோரை ஊத்திச் சாப்பிட மாட்டேன் போ.

**ரூபாலி:** பின்னே இந்த அடுப்புக் கட்டியைப் புட்டுப் போட்டுச் சாப்பிடுவாயா?

**தூர்சிங்:** ஊ..ஊ.. மோரு வேண்டாம்.

(எழுந்து போய் தட்டை எடுத்து வருகிறான். ஆனால் அதைப் பின்னால் மறைத்துக் கொண்டு வருகிறான்)

**ரூபாலி:** கொண்டு வா தட்டை

**தூர்சிங்:** பால் கொடு.

**ரூபாலி:** உனக்காக கறவை எருமையை ஓட்டியாரவா?

**சூர்சிங்:** வந்து...வந்து...நம்ம எருமையை ஏன் வித்தே?

**ரூபாலி:** போயி உன் அப்பாவிடம் கேள். நான் எவ்வளவோ தடுத்தேன். ஆனால் தன் கௌரதையைக் காப்பாத்த வித்துட்டாரு.

**சூர்சிங்:** வேண்டியதில்லை, போ! பால் கொண்டா.

**ரூபாலி:** முழுசா எட்டு வயசாச்சு. இன்னமா புரியமாட் டேங்குது உனக்கு. (சூர்சிங்கின் கையைப் பிடித்து) கொண்டா தட்டை.

**சூர்சிங்:** (தட்டை வீசி எறிந்து விடுகிறான்) சாப்பிட மாட்டேன். சாப்பாடு வேண்டாம். போ.

(வெளியே போகத் திரும்புகிறான்)

**ரூபாலி:** வெல்லாம் தரட்டுமா?

**சூர்சிங்:** ரொட்டி இருக்குதா?

**ரூபாலி:** பழைய ரொட்டி கூட இல்லையடா—மத்தி யானம்...

**சூர்சிங்:** வேண்டாம் போ... (பின்னால் மெதுவாக நகருகிறான்)

**ரூபாலி:**(கண்களில் கண்ணீருடன்) இந்த ராய் சந்த் எந்த ஜன்மத்திலே யிருந்து நமக்கு பகைவனோ தெரியலே நம்முடையதைக் கூட நிம்மதியாச் சாப் பிட விட மாட்டேங்கிறான். குழந்தைக்கு பாவம் என்ன தெரியும்? என்கிட்ட கேட்காமல் யாரிடம் கேட்பான்? ஆண்டவனே! எங்கள் மேலே கருணையைக் காட்டியும் இந்தக் குழந்தைக்காவாவது இரங்கு.

(தீபக்சிங் வருகிறான். ரூபாலி புடவைத் தலைப்பினால் கண்களைத் துடைத்துக் கொள்கிறாள். தீபக் சிங் இளைஞன். தலையின் மீது முண்டாசு. கையில்லாத பனியன். நாலைந்து நாளாய் மழிக்கப்படாத தாடி மீசை. தூசி படிந்த வெறுங்கால். கண்களில் சோகமும் துயரமும் மண்டிக் கிடக்கிறது.)

**ரூபாலி:** நீங்க கிராமத்திலே சுற்றிக் கொண்டே இருங்க.

**தீபக்:** நம்ப காளைக்கு ஏதாவது...கொஞ்சம்...

**ரூபாலி:** ஒரு மாடு சரியா இருக்குது இல்லே? இன்னொண்ணை வாடகைக்கு எடுங்க. மழை பெய்யப் போகிறது. இந்த சமயத்திலே வயலை உழுதால்...

**தீபக்:** உழுதாகிவிட்டது.

**ரூபாலி:** அப்ப...வே வேறென்ன வேணும்?

**தீபக்:** விதை...விதை...

**ரூபாலி:** விதையா? இன்னொரு தடவை உழுங்க. ஒன்றிரண்டு முறை நல்லா உழுதா நல்ல விலைக்கு. வீட்டிற்கு முன்னால் யமதூதர்களாவது குறை வாங்க. இன்னும் எத்தனை கடன் பாக்கி இருக்கிறது?

**தீபக்:** அது இருக்கு...

**ரூபாலி:** (தணிந்த குரலில்) எவ்வளவு இருக்கு?

**தீபக்:** நாலஞ்சு பேரிடம்.

**ரூபாலி:** ராய் சந்த்தின் கடன் தீர்ந்து விட்டதல்லவா?

**தீபக்:** தீர்த்து தானிருக்கணும். இருநூறு வாங்கி இருந்தேன். அதற்கு வட்டி கட்டலே. இரண்டு வருஷமாய் வட்டி தரலை. அதுவும் கூடியிருக்குமில்லே? சுமாராய் முன்னூறு இருக்கலாம். அவ்வளவு தொகைதான். இருந்தாலும் இரு நூற்று ஐம்பதுக்கு போன வருடம் அறுவடையான ஒவ்வொரு மணி தானியத்தையும் கொடுத்து விட்டேனே.

**ரூபாலி:** ஆனா இப்பொழுது புதுசா ஒரு கவலை. மாட்டிற்கு நோய் இருக்கட்டும்...சாப்பாடு போடவா?

**தீபக்:** சூரியா சாப்பிட்டு விட்டானா?

**ரூபாலி:** (சிரித்துக் கொண்டு) உங்க இளவரசனா? அவனுக்குப் பால் வேணுமாம். நீங்க அப்பா ஆச்சே பால் கறக்கிற பசுவாய்ப் பார்த்து ஓட்டி வாங்க.

**தீபக்:** (பெருமூச்செறிந்தவாறே). பால் தரும் பசுவா? காராம் பசுவா? கொஞ்ச நாள் போகட்டும்... (ரூபாலி எழுந்து நிற்கிறாள்)

**ரூபாலி:** இந்தாங்க சோறு. அந்த ராய் சந்த் மனிதனா மிருகமா? மழையிலே நனைஞ்ச அரிசியைக் கொடுத்திருக்கான். பாருங்க! அரிசி ஒரே நாற்றம் அடிக்குது. அரைக்க உட்கார்ந்தால் மாவாகி விடும். எத்தனை கஷ்டம்? விலை முழு விலையும் கொடுத்தேனே! கிடைச்ச சாமான்க, குப்பையிலே எறிகிற மாதிரி..

**தீபக்:** எனக்கு சாப்பிட பிடிக்கவில்லை.

**ரூபாலி:** மாட்டைப் பத்தி கவலையா? விடுங்க, ஆண்டவன் இருக்கார். சாப்பிட உட்காருங்க. எவ்வளவு பிடிக்கிற அளவு சாப்பிடுங்க.

**தீபக்:** (எழுந்து நின்று) கஷ்டத்திற்கு மேலே கஷ்டம்.

**ரூபாலி:** இதற்காகப் போய் இத்தனை நிராசைப் படுவாங்களா? நாளைக்குக் காலையிலே மாட்டுக்கு குணமாயிடும். இரண்டு வருசத்திலே எல்லாம் சரியாயிடும். மழைவரட்டும் பார்க்கலாம்.

**தீபக்:** ஆனா அதுவரையிலும் யார் நிம்மதியாக இருக்க விடப் போறாங்க? இந்தக் கோடையில் மானம் போனபிறகு வாழ்வதில் என்ன இருக்கிறது?

**ரூபாலி:** (திடுக்கிட்டு) மானமா? யாரையாவது மோசம் செய்தோமா? யார் வீட்டு மதில் சுவரையாவது தாண்டினோமா? கொள்ளையடித்தோமா? கெட்ட எண்ணத்துடன் பார்த்தோமா? யாருடைய பெண்ணையாவது கடத்திக் கொண்டு வந்தோமா? இந்த மாதிரி விஷயங்களிலேதான் மானம் போகும்.

**தீபக்:** என் தலை—என் தலைமேலே (நடுங்குகிறான்)

**ரூபாலி:** தலைமேலே அழகான பறவை உட்கார்ந்திருக்குது. நல்ல சகுனம் தான். பேசாமல் பிடிக்கிற அளவு சாப்பிடுங்க.

**தீபக்:** நோட்டீஸ்— ராய் சந்த் நோட்டீஸ் கொடுத்திருக்கிறான். இன்று சாயந்திரமோ, நாளைக் காலையிலோ இந்த வீடு. ஜப்தி.

**ரூபாலி:** ஜப்தியா! (சமாளித்துக் கொண்டு) ராய் சந்த்தை நாம் எபபொழுதாவது வெறுங்கையுடன் விரட்டி இருக்கிறோம்? கண்ணைத்

துடைத்துக் கொண்டு கோதுமையை தந்திருக்கிறோம். அப்படியுமா நோட்டீஸ்?

**தீபக்:** அப்பவும்தான்.

**ரூபாலி:** கேளு. ராய் சந்த் சோராவின் வீட்டிலே உட்கார்ந்திருந்தான். அங்கே நான் கணக்கு கேட்டேன்.

**ரூபாலி:** அதிலென்ன தப்பு? சரிதானே! நம்முடைய பாக்கி கிடைத்தால் ஏதாவது சமயத்திற்கு உபயோகப்படுமல்லவா? ஊம். அப்புறம்?

**தீபக்:** விஷயம் அதல்ல. பெரிய சௌக்காராகி விட்டாயா எடு. எழுபத்தி ஐந்து ரூபாயை என்றான்.

**ரூபாலி:** (திடுக்கிட்டு) எழுபத்தி ஐந்தா? எதற்கு?

**தீபக்:** நானும் இதைத்தான் கேட்டேன். எதற்குன்னு?

**ரூபாலி:** ஊம்.. பிறகு?

**தீபக்:** அவனோடு எனக்கு சண்டை வந்து விட்டது. உடனே தாணாவில் சென்று பிராது கொடுத்து விட்டான். ஜப்தி ரூபா—ஜப்தி. நோட்டீஸ்: இந்த வீடு. இந்த பாத்திரம் பண்டம்... முன்னோர்கள் கட்டிய வீடு. அப்பாவின் கட்டில்.

**ரூபாலி:** இவையெல்லாம் இனி ரூபாவிற்காகத்தான்...

**தீபக்:** இல்லை. இல்லை ரூபா. நோட்டீஸ் கொண்டு வரப்போறவன் சாதியில் பிராமணன். ஆனால் செயலில் கசாப்பு கடைக்காரன்.

**ரூபாலி:** இது முன்னாலேயே திட்டமிடப்பட்ட சூழ்ச்சி. என்ன நடக்கிறதோ! பார்க்கலாம். எழுந்திருங்க. சாதத்தில் மோர் விடட்டுமா? சாப் பிட்டுப் பாருங்கள். புளிக்கிறதா இனிக்கிறதா?

(இதற்குள் வெளியேயிருந்து குரல் வருகிறது)

**குரல்:** தீபக் சிங்—தீபக் சிங்! (பதில் வருவதில்லை) அயோக்கிய பசங்க! நீச ஜாதியிலே. வீட்டிலேயே இருப்பான். ஆனால் பேசமாட்டான் அட! எல்லோரும் சுடுகாட்டிற்கு போய்த் தொலைஞ்சிட்டீங்களா?

**ரூபாலி:** உள்ளே வாங்க.

(சேட் ராய் சந்த் உள்ளே வருகிறார். வயோதிகத்திலும் கட்டுத் தளராத உடல். தலை, தாடி, மீசை எல்லாம் நரைத்திருக்கிறது. நாலைந்து நாட்களாய் மழிக்கப்படாத முகம். விலை உயர்ந்த ஆடை. அகலமான கைவைத்த சட்டை, முழங்கால் வரை தொங்குகிறது. தலை யில் மார்வாடி தலைப்பாகை. இடுப்பில் கரையில்லாத இளம் மஞ்சள் நிறத் துப்பட்டா. காலில் நாட்டுச் செருப்பு. இடது கையில் துணியில் சுற்றப்பட்ட கணக்குப் பேரேடு. குரல் கொடுத்துக் கொண்டே ராய் சந்த் நுழைகிறான்! அயோக்கிய பயலே!

(ரூபாலி தலைத் துணியை இழுத்துவிட்டுக் கொண்டு நிற்கிறாள்.) அய்யா கொஞ்சம் நாவை அடக்கி பேசுங்க.

***ராய் சந்த்:*** என்ன பிரமாதமாய் திட்டிட்டேன். அடேய்! உனக்கு கணக்கு பார்க்கணும்னு சொன்னே இல்லே? (வீட்டினுள்ளே ராய் சந்த் நிற்கிறார்)

இங்கே வா! உனக்கென்ன கெடுதல் செய்தேன். எல்லோருக்கும் நடுவில் என்னை அவமானப் படுத்திக் கொண்டு திரிகிறாய். உனக்கு வட்டிக்கு பணம் கொடுத்தேன். இது குற்றமா? கிராமத்திலே ஒன்றரை வட்டி கிடைக்குது. தெரியுமா உனக்கு?

**தீபக்:** (வியப்புடன்) ஒண்ணரை வட்டியா?

**ராய் சந்த்:** நீ மட்டும்தான் கொடுக்கிறாயா? எத்தனையோ பெரிய பெரிய வங்க எல்லாம் தர்றாங்க. கணக்குப் புத்தகத்தைத் திறந்து பாரு. இதோ பார் படேல். இந்த கிராமத்தின் பெரிய மனிதன். இவன் பெயர் இதோ இந்தக் கணக்குப் புத்தகத்திலிருக்குது.

(சேட் ராய் சந்தின் பார்வை வீட்டிலுள்ள பொருள்களின் மீது படுகிறது) ஆனால் நீயோ? உன்னைவிட மாடுமேய்க்கிற இடையன் மேல். பணத்தை வாங்கிட்டு நிம்மதியா தூங்குறே. இந்த வட்டியில் பால், நெய், இனிப்பு எல்லாம் கிடைக்குது. உனக்கு நல்லெண்ணமே கிடையாது. சத்திரத்தில் சாப்பாடு மடத்தில் நித்திரை அப்படின்னு சொல்லுவாங்களே அதுபோல.

**ரூபாலி:** (இடை மறித்து) அய்யா! வீணா வார்த்தையை விடாதீங்க. ஆமாம். சொல்லிட்டேன். அப்புறம் நானும் சொல்ல வேண்டி வரும். பெண்ணின் வாயிலிருந்து வரும் வார்த்தை...?

**ராய் சந்த்:** இதோ பார் தீபா. உங்களுக்குக் கொடுத்து நான் வேண்டாத வனாகி விட்டேன். போகட்டும் அதனால் எனக்கென்ன? எனக்கு வேண்டியது பணம். அதைக் கொண்டு வா! நான் போய் விடுகிறேன்.

**தீபக்:** அய்யா இருந்த ஒவ்வொரு மணி தானியத்தையும் உங்களுக்குக் கொடுத்தாச்சு. இப்போ எங்கிருந்து...

**ராய் சந்த்:** வட்டி?

**தீபக்:** வட்டியா? இப்ப இருப்பது உடம்பிலிருக்கும் எலும்பும் தோலும்தான்.

**ராய் சந்த்:** நாலுபேருக்கு நடுவில் என்ன சொன்னே நீ? எனக்கு வேறு எதுவும் வேண்டாம். இப்பவே கணக்கைத் தீர்த்துவிடு. அவ்வளவுதான். •

**தீபக்:** இப்பொழுது.. கையிலே ஒன்றும் கிடையாது.

**ராய் சந்த்:** இல்லாவிட்டால் எதையாவது அடமானம் வை. எனக்கு வேண்டியது என் பணம்.

(ரூபாலியை வெறித்துப் பார்த்த வண்ணமிருக்கிறான். இதைக் கண்ட ரூபாலி சேட்டின் மீது தட்டை வீசி எறிகின்றாள்)

**ரூபாலி:** அயோக்கியப் பதரே! நாளை சாயங்காலத்துக் குள்ளே எப்படி யாவது உன் பணத்தைக் கொடுத்து விடுவோம். நீ இங்கிருந்து முதலில் போய் விடு.

**ராய் சந்த்:** சபாஷ்! இதைவிட வேறென்ன வேண்டும்? ராணியை ஒற்றைக் கண்ணின்னு யார் சொல் லுவாங்க? இவ ரோசத்தைத்தான் பாருடா! வீட்டை ஜப்தி செய்துதானாகணும். அதில்லாமல் ஒண்ணும் சரிப்படாது. அந்த

நோட்டீஸ்காரன் வந்தால்தான் புத்தி வரும். இதற்கு எத்தனை நேரமாகும்? நோட்டீஸ் நேற்றே கைக்கு வந்தாகிவிட்டது. உன் ராணியின் ரோச மெல்லாம் எத்தனை நேரம் சூடா இருக்குன்னு பார்த்துடலாம்.

(போகிறான்)

**ரூபாலி:** இன்னும் எத்தனை கொடுக்கணும்?

**தீபக்:** எழுபத்தி ஐந்து ரூபாய்.

**ரூபாலி:** வழிப்பறிக் காரனிடமிருந்தாவது வாங்கிட்டு வாங்க. ஆனா இந்த ராட்சசன் என் வீட்டிற்கு வரக் கூடாது. அவனுடைய பார்வையைத் தான் பாருங்க (தீபக் குன்றிப் போகிறான்) எழுந்திருங்க. எல்லாம் சரியாயிடும். மாட்டைப் போய் பார்த்துவிட்டு வாங்க. நோட்டீஸ் வந்தால் பார்த்துக்கலாம். கையிலே காலிலே விழுந்து நோட்டீஸ்காரனை சரி பண்ணிக்கலாம். ஏதாவது பணம் கிணம் வாய்க்கரிசி போட்டுவிடலாம்.

**தீபக்:** எனக்கு அழுகை வருகிறது.

**ரூபாலி:** ஒரு பிள்ளைக்கு தகப்பனாகிட்டீங்க. ஆனா குழந்தை மாதிரி பேசறீங்களே! நல்லாயிருக்கு! எழுந்திருங்க.

**தீபக்:** நோட்டீஸ் வருமேன்னு நினைச்சா...

**ரூபாலி:** என்ன ஆகப் போவுது? நோட்டீஸ் தானே? இந்த ஊரிலே முதல் முதலாக உங்க வீட்டுக்குத் தான் நோட்டீஸ் வரப்போவுதா? விவசாயிக்கு இந்த நிலைமை ஏன் வருது? நிலம் வரண்டு போச்சு. எதிர்பார்த்த அளவு விளைச்சல் இல்லை. அதனால்தான் இந்த நிலைமை. இதற்கு ஊர்க்காரங்க என்ன சொல்ல முடியும்? இரவு பகல் பார்க்காம நாம கடுமையா உழைச்சோம். பாடுபட்டோம். விளைவதும் விளையாமல் போவதும் விதி. கடனை அடைக்க முடிய லேன்னா...சரி. எழுந்திருந்து போங்க இப்போ.

(ரூபாலி தீபக்சிங்கை எழுப்பி நிறுத்துகிறாள்)

**ராய் சந்த்:** (உள்ளே நுழைகின்றான்) பாருங்க அய்யா! மனசிலே கெட்ட எண்ணமிருந்தா நிலத்திலே எங்கிருந்து விளையும்? மண்ணுதான் விளையும். வேறென்ன? நீங்க கொஞ்சம் தாமதமா வந்திருந்தா இந்தக் கனவான் பாதாளத்திற்குள்ளே இறங்கிப்போயிருப்பாரு அப்புறம் நீங்க இவரைத் தேடித்தேடி அலைய வேண்டும்.

(ரூபாலி திகைத்துப் போய் தீபக்கின் அருகிலேயே உட்கார்ந்து விடுகிறாள். அவளது முகம் ஒளி இழந்து வாடி விடுகிறது) ராய் சந்த் வீட்டினுள்ளே வந்து நிற்கிறான்.

**ராய் சந்த்:** அய்யா, உள்ளே வாங்க. வாங்க உள்ளே! இந்த வீட்டிலே ஒழுங்கா விரிக்க ஒரு விரிப்புக் கூட கிடையாது. ஏய்! டீ—காபி இல்லா விட்டாலும் உட்காரக் கட்டிலையாவது போடு. எப்படிப் பட்ட ஆளய்யா நீ அழத்தான் வேண்டும். அய்யா! வாங்க உள்ளே.

(ராய் சந்த் தானே சென்று வெளியேயிருந்து கட்டிலை எடுத்து வருகிறான். நோட்டீஸ் கொண்டு வந்தவன் அதிகார மிடுக்குடன் உள்ளே வருகிறான்.

தலையில் கறுப்பு ரோமத்தினாலான குல்லாய். காக்கி கோட், கையில்தோல் பூண் போட்ட பிரம்பு. வாயில் சிகரெட், பின்னால் பியூன் கையில் ஃபைலுடன் வருகிறான்.

***ராய் சந்த்:*** சாகப், நான் இவங்களுக்குக் கொடுத்து வேண்டாத பகை யாளியாகி விட்டேன். இனி இவங்களோட என்ன உறவு? சொந்தக்காரங்க மாதிரி பழகினோம். ஆனா பணத்தைக் கொடுத்து பகைவனாயிட்டேன்.

***சிப்பாய்:*** (தீபக்கை நோக்கி) நிலம் எவ்வளவு பீகா?

***தீபக்:*** (சற்றே யோசித்து) மொத்தமாக பதினைந்து இருக்கும். ஐந்து பீகா நஞ்சை ஒன்பது பீகா புஞ்சை.

***சிப்பாய்:*** உண்மையைச் சொல். இந்தக் கணக்குப் புத்தகத்தைப் பார், இதில் உன்னுடைய....

***தீபக்:*** பதினெட்டு பீகா.

***சிப்பாய்:*** எத்தனை பணம் வாங்கியிருக்கே?

***ராய் சந்த்:*** அய்யா! நான்தான் சொல்றேன் இல்லே. இவனை எதுக்கு இழுக்கிறீங்க. கடன் எல்லோருக்கும் தானிருக்கும். பொம்பளை ராஜ்ஜியம். பாருங்க. கடன் ஏற்படத்தானே செய்யும். அங்கே ராணி விக்டோரியாவின் அரசாங்கம். இங்கே இன்னொரு ராணியின் அரசாங்கம்.

***சிப்பாய்:*** (அதிகாரத்துடன்) சேட்! (சேட் புரிந்து கொள்கிறான்) யார் யாருக்கு எத்தனை ரூபாய் பாக்கி.

***தீபக்:*** அய்யா! மொத்தம் ஆயிரம் ரூபாய் கொடுக்க வேண்டியிருக்கும்.

***சிப்பாய்:*** நீ பட்ட கடன் உனக்கே தெரியாதா? விசித்திரமான ஆளய்யா நீ.

***ராய் சந்த்:*** வீட்டிலே அல்லிராணி ராஜ்ஜியம். அவள்கிட்ட கேளுங்க.

***சிப்பாய்:*** இதிலே சேட்டுக்கு எவ்வளவு கொடுக்கணும்?

***தீபக்:*** அவங்ககிட்டயே கேளுங்க. என் கணக்குப்படி ஒரு பைசா கூட கொடுக்க வேண்டியதில்லை.

**ரூபாலி:** (இடை மறித்து) ஒரு பைசா கூட பாக்கி கிடையாது. குழந்தையின் வயிற்றிலடித்து விட்டு பைசா பைசாக் கணக்குத் தீர்த்துவிட்டோம்.

***சிப்பாய்:*** ஆனால் இவர் 75 ரூபாய்க்கு தாவா போட்டிருக் கிறாரே! உண்மை என்ன?

***ராய் சந்த்:*** அய்யா! கெட்ட எண்ணம் படிச்சவன் இவன், மோசக்காரன், என்னுடைய கணக்குப் புததகத்தைப் பாருங்க. எல்லாம் எழுதிவைத்திருக் கிறேன். இதோபாருங்க. அய்யா நான் கொடுத்துக் கொடுத்து வேண்டாத வனாகி விட்டேன்.

***சிப்பாய்:*** ஒன்றும பாக்கியில்லை என்றால் இந்தக் கடன் எங்கேயிருந்து வந்தது? (தீபக் சிங் மௌனமாக இருக்கிறான்) சொல்லு.

***ராய் சந்த்:*** அய்யா, பேச வாய் இருந்தால்தானே பேசுவான்? பேசுவதற்கு இவனிடம் என்ன யோக்கியதை இருக்குது?

**ரூபாலி:** (இடைமறித்து) ஏன் பேச முடியாது? நாங்கள் எதுவும் கொடுக்க வேண்டியதில்லை. எல்லாம் கொடுத்தாகிவிட்டது.

***ராய் சந்த்:*** *ஓகோ! பெரிய இவள்! ஆண்பிள்ளை மாதிரி (உரக்க) அய்யா!* இதோ பாருங்க கணக்குப் பேராடு.

**ரூபாலி:** அய்யா! இவருகிட்டேயே கேளுங்க. எதற்காக வாங்கினோம்னு.

***ராய் சந்த்:*** *வீண் சச்சரவு ஏன்?* இதோபார்! உன் புருஷனின் கட்டை விரல் அடையாளம். சும்மா போலீஸ் ஸ்டேஷனுக்குப் போவேனா? அய்யா நான் கொடுத்து வேண்டாதவனாக...

**ரூபாலி:** எதற்காக வாங்கினோம்னு சொல்லுங்கள்?

***ராய் சந்த்:*** அதெல்லாம் எனக்குத் தெரியாது. ரூபாயை எண்ணி எண்ணி ரொக்கமாய் கொடுத்தேன்.

**ரூபாலி:** உங்களிடத்திலே ரொக்கமாய் எப்ப வாங்கினோம்?

***ராய் சந்த்:*** பேஷ்! நல்ல கதை இது! திருட்டுப் பயல் போலீஸ்காரனையே *மிரட்டினானாம்!* அடே சாதுலா! எங்கேயடா போய்த் தொலைஞ்சே? அய்யாவுக்கு டீ கொண்டு வா முதல்லே! பால் கொண்டு வா! சக்கரையும் ஏலமும் போட்டுக் கொண்டாடா. ஒரு பத்து சேர் நல்ல பேடாவா பார்த்து கட்டி எடுத்துவாடா. அய்யா நம்மை நினைவு வெச்சுக்கிடட்டும். (சிப்பாயை நோக்கி) அம்மாவிடம் போய் அய்யா இன்னிக்கு நம்ப வீட்டிலேதான் *சாப்பிடு* வாங்கன்னு சொல்லு.

***சிப்பாய்:*** அப்படீன்னா கோர்ட்டில் எதற்காக ஒப்புக் கொண்டே! முன்சீப் சொன்னபடி நான் கேட்க வேண்டியவன். சொல்லு ரொக்கமாக கொடுப்பாயா! மாட்டாயா?

***ராய் சந்த்:*** சாகப்— ரொக்கம்தான் வேண்டும்.

**தீபக்:** சாகப்! நான்தான் கோர்ட்டிலேயே சொன்னேனே! இந்தக் கோடையிலே எங்க வீட்டிலே ரொக்கம் எங்கிருந்து வரும்?

***ராய் சந்த்:*** அய்யா! அதெல்லாம் எனக்குத் தெரியாது. உத்தரவை நிறைவேற்ற வேண்டும். அவ்வளவுதான் எனக்கு வேண்டும். அய்யா நான் கடனைக் கொடுத்து பகையாளியாகப் போய் விட்டேன். லேவாதேவி செய்கிற எங்க மனசிலேயும் கொஞ்சம் தயவு உண்டு அய்யா இல்லா விட்டால் இப்பொழுதே...

***சிப்பாய்:*** பியூன்! ஏய் சாதுலா!

***ராய் சந்த்:*** அய்யா, அவன் பேடா எடுத்து வர வீட்டிற்குப் போயிருக் கிறான். இந்த ஊர் பேடா பம்பாய் வரை போகுதுங்க.

***சிப்பாய்:*** (ரூபாலி, தீபக்சிங் இருவரையும் நோக்கி) ஒரு பக்கமாக நில்லுங்க. சேட். டவாலியை...

***ராய் சந்த்:*** அய்யா! நான்தான் இருக்கிறேனே! நீங்க சொல்லுங்க.

***சிப்பாய்:*** நான் சொல்லுகிறேன். இதையெல்லாம் தனியாக வையுங்க. இதையெல்லாம் ஏலம் போட்டு.

(தீபக் சிங் இடி விழுந்தவன் போலாகிறான். தடாலெனக் கீழே விழ்ந்து விடுகிறான். ரூபாலியின் முகத்தில் நிராசை படருகிறது)

***ராய் சந்த்:*** இதில் தனியாக எடுத்து வைக்க என்ன இருக்கிறது? இந்தப் பெட்டியை ஒருவனும் விலை கேட்கமாட்டான். இந்த உடைசல் பாத்திரங்கள் காலணாவிற்கு விலை போகாது. ஒரு விவசாயி வீட்டு மொத்த சாமானுக்கும் என்ன கிடைக்கும் பிரமாதமாய்?

(டவாலிச் சேவகன் வருகிறான்)

***சிப்பாய்:*** டவாலி, பஞ்சாயத்தார்களைக் கூப்பிடு.

***ராய் சந்த்:*** அய்யா! இதில் பஞ்சாயத்தார்களுக்கு என்ன வேலை? சாதுலா! குஷால்டாகுரின் கடையிலிருந்து பாதாம், பிஸ்தா வாங்கிக் கொண்டு வந்து பேடாக்களின் மீது தூவிவிடு. பாலில் குங்குமப் பூ போட்டுக் கொண்டு வா.

***சிப்பாய்:*** (ரூபாலியிடம்) ஏதாவது நகை இருக்கிறதா (ரூபாலி முகத்தில் துணியை இழுத்துவிட்டுக் கொண்டு நிற்கிறாள்)

***ராய் சந்த்:*** அப்படிக் கேட்காதீங்க அய்யா! இவங்க வீட்டிலே தங்கச் சுரங்கமேயிருக்கு. தங்கமில்லா விட்டாலும் வெள்ளி இருக்கும். அய்யா! இதெல்லாம் என்ன பேச்சு? இந்த வீட்டில் மூலை முடுக்கெல்லாம் பார்த்துக் கொள்ளுங்க. இவள்தான் இந்த வீட்டுக்கு ராணி. நகையிருந்தால் கொதிக்கிற சோற்றில் போட்டுவிடுவாள். அப்படிப்பட்டவள். சாகப் இந்தச் சேற்றுப் பானையை உடைச்சுப் பாருங்க. (அமீனா பேசாமலிருக்கிறான். சேட் ராய் சந்த் சோற்றுப் பானைக்கருகே சென்று அதைத் தள்ளி உடைக்கிறான்) அய்யா! கைதான் கரியாச்சு! நான் கொடுத்து விட்டு பகைவனாக....

(சூர்சிங் வருகிறான்)

(ராய் சந்தின் பார்வை சூர்சிங்கின் மீது விழுகிறது)

***ராய் சந்த்:*** அய்யா, நான் சொன்னேனே பார்த்தீங்களா? மோசக் காரங்களை... பாருங்க பாருங்க. பையனின் கழுத்திலே சரடு, காலிலே வெள்ளிக் காப்பு, எல்லாம் போட்டு வெளியே அனுப்பியிருக்காங்க. இது மோசடியில்லை? தந்திர மில்லையா? (அமீனா சூர்சிங்கை உற்று நோக்கு கிறான்) அய்யா! இதையெல்லாம் கழற்றுங்க.

***சிப்பாய்:*** (ரூபாலியைப் பார்த்து) இதையெல்லாம் கழற்ற வேண்டும்.

(ரூபாலி பிரமித்து நிற்கிறான்)

***ராய் சந்த்:*** அய்யா! இப்படி இதமாகக் கேட்டால் பயனில்லை. ஒத்துக்க மாட்டாங்க. இவங்க கிட்ட கடுமையாகத்தான் நடக்கணும். அப்பொழுதுதான் (ராய் சந்த் சூர்சிங்கின் கையைப் பற்றிக் கொள்கிறான்)

***சிப்பாய்:*** சேட்!

***ராய் சந்த்:*** அய்யா! உங்களிடம் இழுத்துக் கொண்டு வருகிறேன். நான் வேண்டாதவன். இப்பொழுது முற்றிலும் வேண்டாதவனாகி விட்டேன்.

(சூர்சிங்கின் கழுத்திலிருக்கும் ஆபரணத்தை கழற்ற முயலுகிறான்)

(சூர்சிங் கூச்சலிட்டுக் கொண்டு தன்னை விடுவித்துக் கொள்ள முயற்சிக் கிறான்)

***ராய் சந்த்:*** ரொம்ப பலமோ?

***சூர்சிங்:*** ஓ...ஐயோ—அம்மா...

***ராய் சந்த்:*** பகைவன் என்றால் கொடும் பகைவன் அப்படித்தானே அய்யா!

***சூர்சிங்:*** (தீபக் சிங்கைப் பார்த்து) அ...ப்...பா... ஊ—ஊ (குரல் இடறுகிறது) அழுகிறான்.

***ராய் சந்த்:*** ஒரு கையால் எடுக்க முடியவில்ல. அழுத்தித் தான் எடுக்க வேண்டும். (சூர்சிங்கை இரண்டு கால்களுக்கும் நடுவில் போட்டு அழுத்து கிறான்) இதுதான் பகைவன்—பகைவன் என்பது இதுதான்.

***சூர்சிங்:*** ஐயோ! அம்மா...நான் செத்தேன்—ஐயோ

(அலறுகிறான்)

**ரூபாலி:** (அமீனாவை நோக்கி) அய்யா குழந்தையை விடுவிங்களேன் விடுவிக்க மாட்டீங்களா? (தீபக் சிங்கைப் போட்டு உலுக்குகிறாள்) இப்படி ஏன் சும்மாயிருக்கிறீர்கள், எழுந்திருங்க! இந்தக் கொள்ளைக்காரனுக்கு வட்டி யோட பணத்தைக் கொடுங்க. முதலில். வீடு வாசல், மாடு, கன்னு, நிலம் எல்லாத்தையும் அடமானம் வையுங்க. ஆனா இனிமே இந்த ராட்சசனோட நிழல் கூட என் வாசற்படியிலே படக் கூடாது. எழுந்திருங்க.

(தீபக் சிங் எழுந்திருக்கிறான்)

***ராய் சந்த்:*** பார்த்தீங்களா அய்யா.

***சிப்பாய்:*** (தீவிரமான சிந்தனையுடன்) என்ன?

***ராய் சந்த்:*** இதெல்லாம் நாடகம். அய்யா நாடகம். இந்த மாதிரி நடிப்பெல்லாம் இந்த ஆட்களுக்கு நிறைய வரும். அய்யா! என்னைக் கேட்டால் இந்த ராணிகிட்ட நிச்சயமாய் ஏதாவது இருக்கும். பார்த்தீங்களா! வெட்க முள்ளவள் போல் முக்காட்டை எவ்வளவு நீளம் இழுத்து விட்டுக் கொண்ட நிற்கிறாள்.

**ரூபாலி:** சேட்ஜி! உங்களுக்குப் பணம்தானே வேண்டும். யாரையாவது ஜாமீன் கொடுக்கச் சொல்லுகிறோம். (தீபக்கை நோக்கி) போங்கக. யாரை யாவது ஜாமீன் கொடுக்க அழைச்சிட்டு வாங்க.

(தீபக் சிங்கும் ராய் சந்தும் போகிறார்கள்)

***சிப்பாய்:*** சகோதரி...

(ரூபாலி முகத்திரையை நீக்கிவிட்டு முன்னே வருகிறாள். ரூபாலியின் முகத்தைக் கண்ட அமீனா திடுக்கிடுகிறான். பயந்து மிரண்டு போன மான் குட்டி போல் சூர்சிங் வேஷ்டியின் நுனியினால் கண்களைத் துடைத்துக் கொள்கிறான்)

**ரூபாலி:** அய்யா!

***சிப்பாய்***: சகோதரி!

**ரூபாலி**: அண்ணா! எங்க வீட்டையே கொள்ளையடித்து விட்டு இப்பொழுது எங்கள் மானம் மரியாதையைச் சூறையாடப் பார்க்கிறான். இந்த பாவி மனிசன்! என்னை விதவையாக்க பார்க்கிறான் இவன்.

***சிப்பாய்***: இதையெல்லாம் போலீஸ் ஸ்டேஷனிலே போய் நேரிடையாகச் சொல்ல வேண்டியதுதானே? (ரூபாலியின் விழிகளைச் சந்தித்தவன் திடுக் கிட்டு) சகோதரி! உன் பிறந்த வீடு!

**ரூபாலி**: (வெட்கத்துடன்) என் பிறந்த வீடா? பரானி—நாக்கே பரானி.

***சிப்பாய்***: கோட்காவிற்கருகே தானே?

**ரூபாலி**: ஆமாம். என் அப்பா அங்கே தான் பிள்ளைகளுக்கு பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார்.

***சிப்பாய்***: ஒ...அப்போ நீ வந்து.

**ரூபாலி**: பதினைந்து வயதிலேயே ஊரைவிட்டு வந்து விட்டேன்.

***சிப்பாய்***: அங்கு உங்கள் பக்கத்து வீட்டிலே பிராமணக் குடும்பம் இருந்தது அல்லவா? (ரூபாலி அமீனாவையே உற்றுப் பார்க்கிறாள்) கேசா அம்மா உயிருடன் இருக்கிறார்களா? சகோதரி— உனக்கு அந்த பிராமணப் பிள்ளையை அடையாளம் தெரிகிறதா? குளிர் காலத்தில் காய்கறி கீரை எல்லாம் வீட்டிற்கு அனுப்புவாயே நினைவிருக்கிறதா? அப்பா நலமாக இருக்கிறாரா? உன் அப்பா அந்தப் பையனுக்கு எவ்வளவு காசு பணம் கொடுத்திருக்கிராரென்று உனக்குத் தெரியுமா?

**ரூபாலி**: (மகிழ்ச்சியுடன்) ரவி அண்ணா?

(கண்களிலிருந்து கண்ணீர் பெருகுகிறது)

***சிப்பாய்***: (குரல் தழுதழுக்க) ஆம். உன்னுடைய அதே ரவி அண்ணாதான். ரூபா! ரூபா! ரூபா! தங்கச்சி!

உன்னுடைய இந்த பிரகாசமான கண்களிலிருந்துதான் உன்னை அடை. யாம் கண்டு கொண்டேன். எத்தனை கஷ்டப்பட்டு விட்டாய்?...

(தீபக் சிங் பிரவேசிக்கிறான். வேண்டுமென்றே கர்-புர் என்று தொண் டையைச் செருமிக் கொண்டு ராய் சந்த் பின்னால் வருகிறான்)

**ரூபாலி**: (முந்தானையை இழுத்துவிட்டுக் கொண்டு) என்ன? என்ன ஆயிற்று?

***ராய் சந்த்***: அய்யா இதுவரை மூடியிருந்த கை இப்போ திறந்து கொண்டது. அதாவது குட்டு வெளியாகி விட்டது. கெட்ட எண்ணம் உடையவர்களுக்கு யார் ஜாமீன் தருவார்கள், நாம் நம்ப வேலையைக் கவனிக்க வேண்டும். நகையைக் கழட்டுங்க. அய்யா என் கடன் தொகை வசூலாக வேண்டும் அவ்வளவுதான். இந்தாங்க பத்துசேர் பேடா! இதை எடுத்துக் கிட்டுப் போங்க. இன்னும் கொஞ்சம் தரட்டுமா? நான் கொடுத்த அன்பளிப்பா நினைச் சுக்குங்க.

**ரூபாலி:** அயோக்கியர்களின் இந்தக் கிராமத்திலிருந்து ஆண்டவன் கூட போய்விட்டாரா?

***சிப்பாய்:*** (ரூபாலியின் காதில் விழும்படியாக) சேட்! உமக்கு என் மீது நம்பிக்கை இருக்கிறதல்லவா? இவர்களுக்கு ஜாமீன் நான் தருகிறேன். டவாலி புறப்படு போகலாம். (எழுந்து கொண்டே அன்புடன்) மருமகனே! ஏனடா ஒளிந்து கொள்கிறாய்! வா இப்படி (தன் ஜேபிலிருந்து எட்டணாவை எடுத்து சூர்சிங்கிடம் கொடுக்கிறான்) வா...இந்தா... டவாலி நாம் போகலாம். நேராக போலீஸ் ஸ்டேஷன் போக வேண்டும். (சிப்பாய் செல்லுகிறான்)

***ராய் சந்த்:*** (வீட்டை ஒரு முறை சுற்றும் முற்றும் பார்த்தவாறே) அழகுடன் உறவு ஏற்பட எத்தனை நாழிகையாகும்?

திரை விழுகிறது

# இப்படி இல்லாவிட்டால் அப்படி

## பன்னாலால் படேல்

**பாத்திரங்கள்**

ஜமுனா

ரூகி

மாமியார்

பகா

சோதர்

இளம்பெண்கள்

வாலிபர்கள்

(கண்ணன் பிறந்த ஸ்ரீஜெயந்தி விழாநாள். வானத்தில் மேகங்கள் இங்கு மங்கும் ஓடுகின்றன. திருவிழாவில் கலந்து கொள்ள இளைஞர்கள் போய் கொண்டிருக்கின்றனர்.

இரண்டு இளைஞர்கள் ஒரு குன்றின் மீது ஏறிக் கொண்டிருக் கின்றனர். பாதங்களுக்கு மேலே தூக்கிக் கச்சம் போட்டு கட்டிய முரட்டு வேஷ்டி. ஒரு பக்கமாக பட்டன் வைத்துத் தைத்த சட்டை. தலையில் முண்டாசு. சமவயதினர். இருபது—இருபத்தி இரண்டு வயது இருக்கலாம். முன்னால் செல்லும் மாநிற முடைய இளைஞன் கோதர் கால்களிலே லாடம் அடித்த செருப்பு அணிந் துள்ளாள். பின்னால் செல்லும் கருநிறமுள்ள பகா வெறுங்காலுடன் நடக்கிறாள்)

**பகா:** கோதர்! ஸ்ரீஜெயந்தியன்று உன் மனைவியை அழைத்து வரப்புறப்பட்டிருக்கிறோம். இது கொஞ்சம் கூட சரியில்லை.

**கோதர்:** (கண்களில் சிரிப்புடன் திரும்பிப் பார்த்து) ஏன்?

**பகா:** இன்னொரு நாளாக இருந்தால் (வயிற்றைக் காட்டி) கொஞ்சம் வயிற்றுக்குப் பூசை நடக்கும். இன்னு உபவாசமல்லவா?

**கோதர்:** பகா, நீதான் பார்க்கிறாயே! மத்த நாட்களிலே சாகக் கூட நேர மிருப்பதில்லை. இன்று திருவிழா நாள். ஏர், கலப்பையை அவிழ்த்து விட்டி ருக்கிறோம். அதுவே பெரிசு. நீ உன் வயிற்று பாட்டை கவனிக்கணும்னா சொல்லு. நான் போனதுமே என் மாமியாரிடம் பகா சாப்பிடப் போகி றான்னு சொல்லிடறேன். நீ சொன்னால் (நின்று விடுகிறான்) நானும் வேணும்னா உன்னுடன் சாப்பிட உட்காரரேன். ஓகோ, அஷ்டமி விரத மாச்சே, அது மறந்தே போச்சு. ஒண்ணு செய்யறேன். எனக்குக் கிடைக்கும் இனிப்பை அப்படியே உன்பக்கம் தள்ளிடறேன். என்ன சொல்றே?

**பகா:** (உந்தித் தள்ளியவாறு) போகட்டும். நட, இனிப்புக்காக விரதத்தை ஏன் விடணும்? (ஏதோ காதில் விழுந்தது போல் காது கொடுத்து கேட்கிறான். கிராமத்திலிருந்து பாடும் குரல் கேட்கிறது) எல்லாரும் திருவிழாவுக்குப் போயிட்டிருக்காங்க போல!

**கோதர்:** ஆமாம்.

**பகா:** என்ன ஆமாம்! உன் தலை. சீக்கிரம் நட. இல்லேன்னா உன் பெண் சாதியும் திருவிழாவுக்குக் கிளம்பிப் போயிடும். அப்புறம் நீ நடுவாந்திரத்திலே நிற்பே.

**கோதர்:** ஏன்?

**பகா:** அங்கே திருவிழாவும் முடிந்து விடும். இங்கு அவளும் வீட்டிலே கிடைக்கமாட்டா. அப்ப யாரை அழைச்சிட்டு வருவே?

(மறுபடியும் கூர்ந்து கவனித்துக் கேட்கிறான்)

—பாடுற குரல்லே ரூகி அண்ணி குரல்கூட கேட்குதே.

**கோதர்:** (புன் சிரிப்புடன்) இருக்கலாம்.

**பகா:** என்ன இருக்கலாம்! உன் தலை! (கோதரை நிறுத்தி) இப்படி மசமசன்னு இருந்தா காரியம் நடக்காது. இப்பொ ஆமாம். உன்னைத்தான் கேட்கிறேன். இது எத்தனையாவது தடவை நீ போவது?

**கோதர்:** ஐந்தாவது தடவை.

**பகா:** என்னை எதுக்காகக் கூட்டிட்டுப் போறே?

**கோதர்:** எதுக்காகவா? என் மாமியாரிடம் பேசி...

**பகா:** உன் மாமியார் கேட்காட்டி?

**கோதர்:** வந்த வழியே திரும்பிடுவோம்.

**பகா:** (கோதரை உற்றுப் பார்த்து) என்ன சொன்னே? திரும்பிப் போவதா? அதுவும் வெறுங்கையுடனா?

**கோதர்:** அட! வேறென்னத்தச் செய்ய? இந்தத் தடவை மாட்டேன்னா அடுத்த தடவை...

**பகா:** (முகத்தை கோபமாக வைத்துக் கொண்டு) இதப்பாரு கோதர்! முதல்லேயே உன்னிடம் சொல்றேன் கேட்டுக் கொள். நான் உன் மாமியாரிடம் வெட்டொன்று துண்டு ரெண்டா சொல்லிடறேன். ஆனால் அவங்க விதவை. வீட்டிலே ஆண் பிள்ளை இருந்தா அது வேறு விஷயம். ஆனால் பொம்மனாட்டி வம்பு பண்ணினா உன் கிட்ட சொன்னேன் பாரு. அது மாதிரி தலைமயிரைப் பிடிச்சு இழுத்திட்டு வரவேண்டியதுதான். ஆமா.

**கோதர்:** (யாரோ முட்டாள் பேசுவதைக் கேட்டு நகைப்பது போல்) சரியப்பா—சரி. நீ என்னோட வா. அது போதும்.

(நடக்கத் துவங்குகிறான்)

**பகா:** (தடுத்து) முடியாது. இந்த மாதிரி, பல்ல இளிச்சிக்கிட்டு நின்னா காரியம் நடக்காது. வாக்குக் கொடுத்துட்டு மேலே நட. (கையை நீட்டுகிறான்) எனக்கு உன்னைப் போல் நாலுபேர் மத்தியில் கேலிக்கு ஆளாவது பிடிக்காது. கோதர் பிரமாதமா பகாவைக் கூட்டிட்டுப் போனான். அப்புறம் போன மாதிரியே ரெண்டு பேரும் திரும்பி வந்தாங்கன்னு நாலு பேர் பேசுவாங்க அவ அனுப்பலேன்னா தலை மயிரைப் பிடிச்சு இழுத்துக்கிட்டு வருவேன்னு என்கு வாக்குக் கொடு...

**கோதர்:** (யோசனையில் ஆழ்ந்து) என்னடா இது! முட்டாள் மாதிரி பேசுறியே! அவள் ஆடா, மாடா, பிடித்து இழுத்துட்டு வர?

**பகா:** ஆடு மாடு இல்லாம வேறென்ன? அவன் மனுசியாக இருந்தால் இந்த மழைகாலத்தில் நீ தன்னந்தனியே ஏரைக் கட்டி உழுதுட்டு, நிலத்தைக் கொத்திட்டு இருப்பாயா? நீ தன்னந் த்னியே இப்படி அல்லாடுவேன்னு உன் பெண் சாதிக்குத் தெரியாதா?

**கோதர்:** தெரியும்ப்பா, தெரியும். ஆனால் அப்பா- அம்மா, சொல்லை மீறி எந்தப் பெண்ணாவது புருஷன் வீட்டிற்குப் போக முடியுமா? நீயே சொல்லு.

நீ ஒரு தடவை வந்து தான் பாரேன். திருவிழாவுக்குப் போயிருந்தாலும் திரும்பி வந்துடுவாங்க. (முன்னால் விரைகிறான்)

**பகா:** (மனமில்லாமலேயே மேலே நடக்கிறான்) அவங்க கிளம்பி இருந்தா நீ போய் அவங்களைத் தடுத்து நிறுத்தப் போறியா என்ன? (கண நேரம் நின்னு) கோதர்! இதை நல்லாக் கேட்டுக்க. உன் பெண்டாட்டி உன்னுடைய வள்னு நீ நினைக்கிறது எல்லாம் சரிதான். ஆனால் குன்றின் மீது ஏறிவிட்ட வேடனும், பிறந்தகத்திற்கு போய்விட்ட பெண்ணும் யார் வார்த்தையையும் மதிக்கமாட்டாங்க.

**கோதர்:** மதிக்காட்டிப் போகட்டும். ஆனா நீ சொல்லுவது போல கூந்தலைப் பிடிச்சு இழுத்துக் கிட்டு வர என்னால் முடியாதப்பா.

**பகா:** (சட்டென்று நின்று) நீ சாதாரணமா பேசிப் புட்டே. எனக்கு எவ்வளவு வேகம் வருதுன்னு தெரியுதா? உனக்கு சக்தி இல்லையா? இல்லே.. தைரியம் இல்லையா? அன்னிக்கு போலீசைக் கண்டு பயந்து ஓடினே... இன்னிக்கு...

**கோதர்:** போலீஸ்காரன் கதையை விடு...நான் அவன் கூட வாழ்க்கை நடத்தக் கடமைப்பட்டவன் இல்லையே?

**பகா:** இல்லைதான் (கோதரை அலட்சியமாகப் பார்த்து தலையை அசைத்துக் கொண்டு மேலே நடக்கிறான்)

ஊர்க்காரங்க சொல்றது, நிஜம்தான் தோணுது.

**கோதர்:**( சிரித்துக் கொண்டே) என்ன சொல்றாங்க ஊர்க்காரங்க?

**பகா:** உன் பெண்சாதி உன்னை மயக்கிட்டான்னு சொல்றாங்க. இவ்வளவு ஆன பிறகும் உன்னைப் போல் ஒரு புருசன் (நடக்கிறான்) அவளுக்கு ஏன் இந்த நினைப்பு வரமாட் டேங்குது? பெண்டாட்டியின் கௌரவத்தை புருஷன் காப்பாற்றா விட்டால் வேறு யார் காப்பாத்தப் போறாங்க? ஆனால் இத்தனை கஷ்டப்பட்ட பிறகும் உனக்குப் புரியலையே?

**கோதர்:** (சிரிக்கிறான்) அப்படியே மந்திரம் மாயம் போட்டிருந்தாலும் அதனாலென்ன?

**பகா:** (எரிச்சலுடன் கையை ஓங்கி) நட. பேசாமல். முன்னாலே உங்க ரண்சோட் சித்தப்பா என்ன செய்தாங்க? நினைச்சுப் பாரு. கூந்தலைப் பிடித்து இழுத்துட்டு வந்தாத்தான் சரியாகும். பிறகு பிறந்தகத்துக்குப் போகணும்ங்கற பேச்சே எடுக்காது. அப்படியே போனாலும் நின்ன நிலையில் திரும்பிடுவா நீ யானால் அருமை மனைவியின் மனசு வருத்தப்படு மேன்னு...

**கோதர்:** (எரிச்சலுடன்) பகா! நீ புரிஞ்சுக்கவே மாட்டேங்கற! பாவம்! அவளுக்கு இரண்டு பக்கமும் துன்பம். ஒரு புறம் அம்மா அவங்க வார்த் தையைத் தட்டிட்டு வந்தா. அப்புறம் உயிரோடு இருக்கிறவரை அந்தப் பக்கமும் போக முடியாது. ஊராரும் பேசுவாங்க. இன்னொரு புறம் நீ தலை மயிரைப் பிடிச்சு இழுத்துட்டு வா அப்படீங்கறே.

**பகா:** ஆமாம். பேசாமல் நட. எனக்கு எல்லாம் புரிஞ்சாச்சு. இவ்வளவு புத்திசாலியைக் கண்டதே இல்லை. ஆனால் அது வந்து (நீண்ட பெருமூச்சுடன் தனக்குள் பேசிக் கொள்வது போல்) ஆமாம்! நீதான் என்ன செய்வாய் அழகான பெண்கள். முறுக்கிவிட்ட மீசையுள்ள ஆண் பிள்ளைகளைக் கூட ஆட்டுக் குட்டி மாதிரி மாத்திடும்போது பாவம் நீ என்னடா செய்வே?

(கிராமத்திலிருந்து திருவிழா செல்லும் கும்பல் வருகிறது. வலது பக்கத்தில் இளைஞர்களும், பெண்களும் பாடிக் கொண்டு நிற்கின்றனர்)

*இளைஞர்கள் 'அன்பே வா! விழாக் காணச் சொல்வோம்.*
*யுவதிகள் வாரீர் தலைவா! விழாக் காணச் செல்வோம்!*
*இளைஞர்கள் காலில் சதங்கை ஒலி எழுப்ப!*
*யுவதிகள்—மத்தளம் முழங்கிட, தாளம் ஒலித்திட*
*இருவரும் சேர்ந்து—வா, வா விழாக்காணச் செல்வோம்!*

(கோஷ்டி இடது புறம் திரும்பியதுமே ரூகியும் இன்னொரு யுவதியும் தென்படுகின்றனர்). அவளது அத்தை மகள் ஜமுனா விலையுயர்ந்த ஆடை அணிகளால் அலங்கரித்துக் கொண்டு புத்தாடை காற்றிலே சலசலக்க, மகிழ்ச்சியும், ஆனந்தமும் பொங்க வருவது தென்படுகிறது)

**பகா:** இதப் பாருப்பா! உன்னுடையவள் திருவிழா பார்க்கப் புறப்பட்டு விட்டாள்.

**கோதர்:** (முகம் வாட்டமுறுகிறது. அசையாமல் நிற்கிறான்) ஏய்! பகா! ஒரு விஷயம் சொல்லட்டுமா?

**பகா:** (பின்னால் திரும்பி) நீ ஏன் நின்னுட்டே?

**கோதர்:** (ஏதோ ரகசியமாய் சொல்ல விரும்புவன் போல் தன்னருகில் அழைக்கிறான்) நாமும் திருவிழாவுக்குப் போகலாமா?

**பகா:** (கோபத்தினால் முகம் சிவக்க) ஏன்? நீ அழைச்சிட்டுப் போக வந்திருக்கியா? இல்லே...

(கோதர் பெண்கள் கோஷ்டியில் பாடும் ரூகியையும், ஜமுனாவையும் மெய்ம்மறந்து பார்த்துக் கொண்டிருக்கிறான்)

(இரண்டடி முன்னே சென்ற பகா ஏதோ சொல்வதற்காக, பின்னால் திரும்பிப் பார்க்கிறான். கோதர் ரூகியைப் பார்த்து தன்னை மறந்து நிற்பதைக் கண்டு அவனது ஆத்திரம் பின்னும் அதிகரிக்கிறது. ரூகி, கோதர், இருவரின் விழிகள் உறவாடுவதைக் கண்டு) கிண்டலாக—

**பகா:** மேளாவுக்குப் போகும் எண்ணமுண்டா?

**கோதர்:** (மகிழ்ச்சியுடன்) நிஜமாகவா? நீ சொன்னால்...

**பகா:** (பாம்பு படம் எடுப்பது போல் கையை ஆட்டி) பேஷ். மனைவி இன்னொருவனுடன் போகிறாள். கணவன் அவளுக்கு விடை கொடுத்தனுப்புகிறானாம். இதெல்லாம் உன்னைப் போன்றவனால்தான் முடியும். (தனக்குள்) அடேயப்பா! எப்படி பெட்டிப்பாம்பாய் ஆக்கி விட்டாள். இல்லா விட்டால் இப்படியா? கடவுளே!

**ஒரு பெண்மணி:** (அந்த வழியாக வரும் கோதர், பகாவை நோக்கி) வாங்க, கோதர், வாங்க இரண்டு பேரும்.

(ரூகி ஏதோ நினைப்பில் மௌனமாகிறாள்)

(மற்ற பெண்கள் பாடுகிறார்கள்)

மற்றொரு அடியைப் பாடும்போது ஜமுனா அவளது தலைப்பை இழுத்து விட்டு பாட்டின் பால் கவனத்தை ஈர்க்கின்றாள். ரூகி பாட மனமின்றி பாடு கிறாள். ஆனால் அவளது பார்வையும் கவனமும் கோதரின்பால் தானிருக் கிறது.

*விழிகளெனும் கூர்வேல் தாக்கி கிறங்குறானய்யா!*
*இளைஞர்கள்—கண்ணை வீசாதே.*
*தம்பி கண்ணை வீசாதே*
*அஞ்சிப் போகுமோ பெண்மான் அஞ்சிப் போகுமே!*
*பெண்கள் துள்ளுது பார் இதயம்*
*துள்ளிப்பாயுதே நெஞ்சம் துள்ளிப் பாயுதே*

(பாடலின் ஓசை மெதுவாகக் குறைந்து அடங்குகிறது. இதற்குள் கோதரும், பகாவும், மாமியாரின் இல்லத்தை அடைகின்றனர்) மாமியார் முற்றத்திலிருந்து முளைக் கொம்பில் கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்துக் கொண்டு உள்ளே போகிறாள். செருப்பு சத்தம் கேட்டதும் பின்னால் திரும்பிப் பார்க்கிறாள். காலனையே கண்டதுபோல் முகம் மிரட்சியடைகிறது)

**மாமியார்:** வாங்க

(நேராக உள்ளே போய்விடுகிறாள். திண்ணையின் வலதுபுறம் ஒரு அறை. அதை அடுத்து வீட்டினுள்ளே செல்லும் உட்புறக் கதவு. கோதர் கதவின் இடது பக்கம் சாத்திவைத்திருந்த கட்டிலை எடுத்துப் போடுகிறான்)

**கோதர்:** உட்கார்

**பகா:** (மெதுவாக தனக்குள கோபத்துடன்) நீயெல்லாம் ஏன்தான் பிறந்தாயோ?

**கோதர்:** ஏன்?

**பகா:** ஏனா? அவள் பாட்டுக்கு திருவிழாவுக்குப் போயிட்டா. அதைப் பற்றி உனக்கு ஒரு உணர்ச்சியுமில்லை. அந்த தேவியின் மனத்தில் உன் மீது கொஞ்ச மாவது அக்கறையிருந்தால்...அம்மாவை மீறிக் கொண்டு புருசன் வீட்டிற்கு வந்திருக்க மாட்டாளா? இப்பொ. திருவிழாவுக்குப் போகாமல் நின்றிருக் கலாம் இல்லே? அவளுக்கு உன் மீது ரொம்பப் பிரியம் என்றாயே அதனால் தான் இதை சொல்றேன்.

**கோதர்:** (ஏமாற்றத்தை மறைக்க முயன்று) அவள் நம்மைப் பார்த்திருக்க மாட்டாள்...

**பகா:** (கண்ணும் முகமும் சிறுத்து விடுகிறது. கோதரின் பக்கம் மெல்ல நகர்ந்து) அட, சும்மா இருடா! கடவுள் உன்னை எப்படித்தான் பொய்

பேசவைக்கிறாரோ! (கோதரின் விழிகளை நேருக்கு நேர் பார்த்து விரலை உயர்த்தி) உண்மையைச் சொல்! பொய் சொன்னால், நீ யாரை அழைத்துப் போக வந்திருக்கிறாயோ அவள் மீது ஆணை. சொல்லு. உங்களிருவரின் விழிகளும் உறவாடவில்லையா?

**கோதர்:** (லேசான எரிச்சலுடன்) பார்த்தோம். அப்பா, பார்த்தோம். ஒரு வேளை அவள் திரும்பி வந்து கொண்டிருக்கலாம். உனக்கே தெரியும். இவளுடைய அம்மா இருக்கிறாளே. அவள் தேள் மாதிரி. ஏண்டி திரும்பி வந்தாய் என்று கேட்டால்...

**பகா:** இந்த விளக்கமெல்லாம் இருக்கட்டும். இதற்குள்ளேயே எல்லாம் தெரிஞ்சு போச்சு. இதில் அம்மா சொல்ல என்னடா இருக்கிறது? ஆனால் இப்படி நாள் முழுவதும் வேலையிருந்தா, காசு, பணம் நிறையச் சேரும்.

**கோதர்:** நிஜமாகவே எரிச்சலுடன்) விடப்பா! இந்தப் பேச்சையெல்லாம்.

(இச்சமயத்தில் ரூகியும், ஜமுனாவும் அறையின் மறுபக்கச் சுவற்றைத் தாண்டி வருவது தெரிகிறது. கோதரின் முகம் மலருகிறது. இதைக் கண்ட பகா பின்னால் திரும்பிப் பார்க்கிறான். ரூகி, ஜமுனாவைக் கண்டதும் அவன் முகம் ஏமாற்றமடைகிறது. ரூகி மௌனமாக நிற்க ஜமுனா அவர்களை வரவேற்க உள்ளே வருகின்றாள்.)

**பகா:** புருசன் வந்திருக்கிறான். ஏதாவது காசு பணம் தருவான்னுதான் திரும்பி வந்திருக்கிறாள். கொண்டா, (கையை நீட்டுகிறான்) உனக்கு வெட்கமாக இருந்தால் நான் கொடுத்திட்டு வறேன்.

**கோதர்:** அப்பா! முதலில் நீ எந்தக் காரியத்திற்காக வந்திருக்கிறாயே. அதைக் கவனி. என் மாமியாராகவே கேட்பாள்னு நினைக்கிறாயா? நீ பதினைந்து நாள் இருந்தாலும், எதிர்பார்க்கவே வேண்டாம்.

**ஜமுனா:** (உட்காருவதற்கு திண்டை எடுத்துக் கொண்டு வெளியே வருகிறாள்) எழுந்திருங்க இதைப் போடுகிறேன்.

(இருவரும் எழுந்திருக்கின்றனர்)

**பகா:** இதெல்லாம் அவசியம் இல்லே. நாங்க திரும்பிப் போகணும்.

**ஜமுனா:** குதிரை கொண்டு வந்திருந்தால் கட்டிப் போடுங்கள். (கடைக் கண்ணால் கோதரைப் பார்க்கிறாள்) வருவதற்கு ரொம்ப நேரமாகி விட்டதா? (பகா பார்வையை வேறுபுறம் திருப்பிக் கொள்கிறான்) பேசுவதற்கு வெட்கமாக இருக்கிறதா?

**கோதர்:** இதில் வெட்கப்பட என்ன இருக்கிறது? உன் அத்தையைக் கூப்பிட்டு நாங்கள் ரூகியை அழைச்சிட்டுப் போக வந்திருக்கோம்னு சொல்லு.

**மாமியார்:** (கதவிற்கு வெளியே வந்து) செருப்பின் ஓசை கேட்டதுமே இது புரிந்தது. ஆனால் ஐயாவுக்கு பண்டிகையன்றுதான் அவகாசம் கிடைத்ததோ?

**பகா:** நீங்களே சொல்லுங்கள். மற்ற நாளிலே இவன் தனியா ஏர்கட்டி உழுவானா இங்கு வருவானா?

**மாமியார்**: அதைப் பற்றி எனக்கென்ன?

(பகா வியப்பினால் விழிகள் அகல பார்த்துக் கொண்டே நிற்கிறான்)

**பகா**: என்ன அப்படிச் சொல்லிட்டீங்க! எனக்கென்னன்னு! ஒரு தடவை இரண்டு தடவை இல்லை. இவன் இத்தோட ஐந்தாவது தடவை வந்திருக்கான்.

**மாமியார்**: ஐந்தென்ன? பத்தாகத்தானிருக்கட்டுமே! இன்னும் ஏதாவது சொல்ல மிச்சம் இருக்கிறதா?

**பகா**: அது என்னமோ, அம்மா-உங்களுக்குத் தெரியும், உங்க மாப்பிள்ளைக்குத் தெரியும், (கோதரை கோபத்துடன் பார்க்கிறான்) இந்தாப்பா! இவங்க சொல்லிவிட்டாங்க, நீ ஏதாவது சொல்ல வேண்டுமா?

**கோதர்**: (சற்றே கோபத்துடன்) இந்தத் தடவை அனுப்பித்தானாகணும். கட்டாயமா அனுப்பணும்.

**மாமியார்**: (வியப்புடன் இடுப்பிலே கை வைத்துக் கொண்டே) என்ன சொன்னே? மறுபடியும் சொல்லு!

**கோதர்**: (ஆத்திரத்துடன்) உங்களிடம் பயமா என்ன? அனுப்பப் போறீங்களா இல்லே புதுசா ஏதேனும் புரடாவிடப் போறீங்களா? வீட்டி லேயே வெச்சுக்கிடணும்னா எதுக்கு கல்யாணம் செய்து கொடுத்தீங்க?

**மாமியார்**: ஒகோ! அப்பவே இளவரசரிடம் வந்து ஆலோசனை கேட்காமல் போனேனே! ரொம்ப சரி. (கதவின் பக்கம் திரும்பி) நானும்தான் பார்க்கிறேன். துரை எப்படி பலவந்தமாக கூட்டிப் போறான்னு. (வீட்டிற்குள் சென்று ரூகியிடம்) ஏய்! பெண்களா!எதுக்காகத் திரும்பி வந்தீங்க? போங்கடீ, திருவிழாவிற்கு. யார் பலவந்தமாக கூட்டிப் போறான்னு பார்க்கிறேன்.

**பகா**: (தணிந்த குரலில்) கேட்டாயா!

**கோதர்**: (மாமியாருக்கு பதில் கூறுவது போல்) வராட்டி, தலைமயிரைப் பிடிச்சு இழுத்துக்கிட்டுப் போக எத்தனை நேரமாகும்?

**மாமியார்**: (திரும்பி வந்து) உன் வாயிலே எத்தனை பல் இருக்கிறதென்று ஒரு தடவை நல்லா எண்ணிக் கொள். நானிருக்கும் போது நீ என் மகள் தலை மயிரைத் தொட்டுவிடுவாயா? இதோபார்! என் வீட்டு முற்றத்திலே எத்தனை கல் இருக்கிற தென்று பார்த்துக்கொள். எண்ணிக் கொண்டாயா?

**ஜமுனா**: அத்தை! நீ பேசாமல் உள்ளே வாயேன் (பிடித்திழுக்கிறாள்)

**கோதர்**: கல்லு, கில்லுன்னு பேசறீங்களே...முன்னே பின்னே யோசித்து விட்டுத்தான் பேசறீங்களா? ஆமா? நீங்க என்ன செய்து விட முடியும்?

(முற்றத்தில் நிற்கும் ரூகி முகத்தை தூக்கி வைத்துக் கொள்கிறாள்)

**மாமியார்** :நீ ரொம்ப யோசிச்சுப் பேசினே என்று நினைப்பா?

(வீட்டிற்குள்ளே செல்ல திரும்புகிறாள். முற்றத்தில் நிற்கும் ரூகியைப் பார்த்து) போ, உள்ளே! திருவிழாவுக்குப் போகலேன்னா வீட்டிலே வேலையா இல்லை? இங்கே எதுக்குச் சும்மா நிற்கிறே?

(மாமியார் வீட்டினுள்ளே சென்று எதையோ கடபுடாவென்று உருட்டு

கிறாள். ரூகி நின்ற இடத்திலேயே நிற்கிறாள். ஜமுனாவும் வெளியே வந்து அவளைப் பார்த்தவாறு நிற்கிறாள்)

**பகா:** உன் மாமியார் அப்பப்பா! ரொம்ப கில்லாடி! கல்லை எடுத்து தலையிலே வீசினாலும் அதிசயமில்லே.

**கோதர்:** அரே! கல்லால் அடிப்பாளா? அதையும் பார்த் துடலாம்.

**பகா:** நீ இல்லை என்னதான் நினைக்கிறே?

(வியப்புடன் கோதரைப் பார்க்கிறாள்)

**கோதர்:** (நீண்ட பெருமூச்செறிந்து) பகா—மனதும், கண்ணாடி மணியும் ஒரு முறை உடைந்தால் பிறகு ஒட்டாதுன்னு நினைக்கிறேன்.

**பகா:** இன்னிக்குள்ள ஆங்கிலேயே சமூகத்தில் அதுவும் ஒட்டுமடா!

**கோதர்:** (வறண்ட சிரிப்புடன்) அப்படியே ஒட்டினாலும் ஒட்டிய இடம் தனியாகத் தெரியும்.

(ரூகி முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு உள்ளே போகிறாள்)

**பகா:** அப்போ நீ ஒண்ணு செய். தனியா உட்கார்ந்து உடைஞ்ச மனசையும் கண்ணாடியையும் ஒட்ட வை. (எழுந்திருக்கிறான்) நான் போறேன்.

**கோதர்:** எங்கே?

**பகா:** திருவிழாவுக்கு.

**கோதர்:** (விழிகளை உயர்த்திப் பார்த்து) உட்கார், பேசாமல், உன் சாமர்த் தியத்தையெல்லாம் காட்டாதே. (உட்புறம் நோக்கி அழைக்கிறான்) ஜமுனா எங்கே போனாள்?

**ஜமுனா:** (ஜமுனாவும் ரூகியும் தங்களுக்குள் ஏதோ ரகசியம் பேசிக் கொண்டிருக்கின்றனர்) என்ன? (வெளியே வருகிறாள். ரூகி அவளது கையைப் பிடித்து அழுத்தி கண்களில் ஜாடையாக எதையோ உணர்த்து கிறாள். ஜமுனா வெளியே வந்து, போர்வையை கையில் வைத்துக் கொண்டு, பகாவிற்கு எதிரே நின்று பார்க்கிறாள்) கிளம்பியாச்சா?

(ரூகி உள்ளே செல்ல முற்படுகிறாள்)

**பகா:** வேறென்ன செய்ய? இன்னும் கூட நேரமிருக்கிறது. திருவிழா விலிருந்து நேராக வீட்டிற்குப் போய்விடுவோம். யாராவது கேட்டால் திரு விழாவுக்கு போயிருந்தோம்னு சொல்லிடுவோம்.

**கோதர்:** (ஜமுனாவிடம்) உன் அத்தைகிட்டப்போய், ரூகியை அழைத்துச் செல்லாமல் போக மாட்டோம்னு சொல்லிடு.

**ஜமுனா:** (செய்வதறியாது குழம்பியவளாய்) ஆனால், அத்தை யார் சொன்னால் கேட்கிறாங்க? எதையோ, தனியாகக் குறிப்பிட்டு உணர்த்த விரும்புகிறவன் போல் ஜாடையாக கதவின் பக்கம் நோக்கி) அவள் போக்கிலே விட்டால் அத்தை ஒரு நாளும் அனுப்ப மாட்டா. எப்படியும் தீவாளி வரை அனுப்ப மாட்டாள். இதைத் தான் உங்ககிட்ட சொல்லிட் டாங்களே!

(உள்ளே செல்லுகிறாள்)

**கோதர்:** (சிந்தனையிலாழ்கின்றான். சற்று நேரம் பொறுத்து பகாவிடம்) அப்ப, நீ போ. நான் கூட்டிக் கொள்ளாமல் கிளம்ப மாட்டேன். இதோ, இந்த கட்டிலிருக்கு, இந்த முற்றம் இருக்கு. எத்தனை நாளானாலும் சரி.

**பகா:** (தலையை அசைக்கிறான்) சரி, நான் வரேன். நீ களைத்துப் போய் விடுவாயடா, ஆனால் உன் மாமியார் சோர்ந்து போகமாட்டாள்.

(ரூகி குப்பையைப் பெருக்கிக் கொண்டே கதவுவரை வந்து விடுகிறாள்)

**கோதர்:** எத்தனை நாளைக்கு? இரண்டு நாள், நாலுநாள், ஆறுநாள், கடைசியிலே தன்னைப் போல ஊரு, உலகத்துக்கு அஞ்சி அனுப்பிவிடுவா.

**பகா:** அதுசரி, அங்கே உன் மாடு கன்னு எல்லாம் என்னவாகிறது?

**கோதர்:** அம்மாகிட்டச் சொல்லு. தினமும் அவிழ்த்து, கட்டச் சொல்லு.

**பகா:** (சிரித்துக் கொண்டு) அதெல்லாம் முறையா நடக்கும். ஆனால் எனக்கென்னமோ நீ இறங்கி யிருப்பது வீண் முயற்சின்னு தோணுது.

**கோதர்:** ஏன்?

**பகா:** ஏன்னு கேட்கிறியா? உலகத்திலே யோசித்து, செயல்படுகிறவன் தலையிலேதான் எல்லாம் விடியறது. புத்திசாலிதான் தாழ்ந்து போக வேண்டி இருக்கிறது.

**கோதர்:** எதற்காகத் தாழ்ந்து போவது? அப்படி யெல்லாம் கேட்கலேன்னா கடைசில...

(சிரிக்க முயற்சிக்கிறான்)

உனது வித்தைதான் இருக்கவே இருக்கே.

**பகா:** எது? ஓகோ...புரிஞ்சுது, புரிஞ்சுது.. அது தான் தலைமயிரைப் பிடிச்சி (ரூகி குப்பையை எடுத்துக் கொண்டு வெளியே வரகிறாள்) பகா சட்டென்று மௌனமாகி விடுகிறான்)

**கோதர்:** (ரூகியின் காதில் விழும்படியாக) ஆமாம், வேறுவழியில்லாமல் தானே மசிந்து விடுவாள். இல்லேன்னா...தலைமயிரைப் பிடிச்சு...

**ரூகி:**( குப்பை வாருவது தொடர்கிறது. கதவின் பக்கம் ஒரு முறை பார்த்துவிட்டு, கோதரை அலட்சியமாக நோக்கிய வண்ணம் மெதுவாக அவனுக்கு மட்டும் கேட்கும்படியாக) கூந்தலைப் பிடிப்பேன், தலைமயிரை பிடிச்சு இழுத்துகிட்டுப் போவேன்னு சொல்லிக் கொண்டே இருக்கிறீங்களே. ..என்னிக்காவது ஆட்டின் வாலையாவது பிடித்திழுத்ததுண்டா?

(கோதரும், பகாவும் கணநேரம் அப்படியே பிரமித்து நின்று விடு கின்றனர்)

**கோதர்:** (முகம் கோபத்தினால் சிவந்து விடுகிறது) என்ன சொன்னே?

**ரூகி:** உங்க நண்பரிடம் கேளுங்க.

(பூமி நடுங்கும்படியான சினத்துடன் முதலில் ரூகியையும், பிறகு கோதரையும் நோக்குகிறான்) அலட்சியமும் கோபமும் கலந்த குரலில்—

**பகா:** "இப்பொழுது நிம்மதியாய் போயிற்றா? நீ உட்கார்ந்திரு நான் போறேன்.

**கோதர்:** (பகா கூறியது காதில் விழாதது போல் ரூகியைப் பார்க்கிறான். கணத்திற்கு கணம் அவனது கோபம் அதிகரித்துக் கொண்டே போகிறது. பகா கட்டிலிலிருந்து இறங்கும் முன்னரே, அவன் விரிப்பைச் சுற்றியவாறே ரூகியின் பக்கம் வைத்து விடுகிறான்) நான், எதற்காக ஒருவரை அவமானப் படுத்த வேண்டு மென்று நினைத்தேன். ஆனால் இவள் வந்து (குப்பையை எடுத்துக் கொண்டிருக்கும் ரூகியின் கழுத்தில் கையை வைக்கிறான்)—நட, நட முன்னால் (உந்தித் தள்ளுகிறான்... மீண்டும் தோளைப் பிடிக்கிறான். அழுது கொண்டிருக்கும் ரூகியை முன்னால் தள்ளியவாறே படபடக்கிறான்) "எனக்குத் தெரியாமெ இல்லே! நாலுபேருக்கு முன்னால் இவ எப்படி முகத்தைக் காட்டவான்னு நினைத்தேன்...ஆனால்...ஊம்—நட—நட இல் லேன்னா எலும்பை நொறுக்கிடுவேன்.

**மாமியார்:** (புயல்போல் சீறி வருகிறாள்) நாசமாய் போகிறவனே! நீ போகிறாயா இல்லையா? (முற்றத்தில் கிடக்கும் கல்லைக் கையில் எடுத்துக் கொள்கிறாள்)

**பகா:** சம்பந்தியம்மா! கொஞ்சம் நிதானியுங்க!

**ஜமுனா:** (அத்தையின் கையைப் பிடிக்கிறாள்) ஏய் கிழவி! அந்தப் பெண்ணின் தலையை உடைச்சிடாதே!

(இதற்குள் அக்கம் பக்கத்திலிருந்து சிலர் உதவிக்கு ஓடி வருகின்றனர். வாயில் வந்தபடி திட்டிக் கொண்டும், மார்பில் அடித்துக் கொண்டும் புலம்பும் மாமியாரை சூழ்ந்து கொள்கின்றனர்.

(ரூகி அழும் குரல் கேட்கிறது)

**மாமியார்:** நானிருக்கும்போது என் பெண்ணின் தலை முடியைப் பிடித்து ஒருத்தன் இழுக்கிற தென்றால்—நானிருந்து என்ன பிரயோசனம்? விடுங்க என்னை... இல்லேன்னா...

**ஜமுனா:** (கூட்டத்திலிருந்து வெளியே வருகிறாள். பித்துப் பிடித்தவன் போல் நிற்கும் பகாவினருகே வருகிறாள்) என்ன பார்த்துக்கிட்டிருக்கீங்க? (ரூகி அழும் குரல் கேட்கிறது. கோதர் அவளை அடிக்கும் ஓசையும் இலேசான கூச்சலும் கேட்கிறது) உனக்கு இத்தனை தைரியமா? நட! இல்லாட்டி...என்ன நடக்கும் தெரியுமா?) பாவம் அந்த அப்பாவிப் பொண்ணைக் கொன்று விடுவானா?

**பகா:** (அமைதியுற்று) அவள் பேசுவதும் அப்படித் தானே இருக்கு! அடி வாங்குவதற்கு ஏற்றமாதிரி தானே அவளும் நடந்தா இல்லே?

**ஜமுனா:** (கோபத்துடன்) நல்லாச் சொன்னீங்க! அடி வாங்கற மாதிரி நடந்தாளா? நல்லது—இருக்கட்டும், ரூகி அப்படி ஏசாட்டி உங்க நண்பர் யோசிச்சு யோசிச்சு யோசிச்சுக்கிட்டே நின்னிருப்பார் இல்லே!

**பகா**: (சரியாகப் புரிந்து கொள்ள இயலாமல் வியப்புடன்) அப்படீன்னா ரூகி அண்ணி வேணும்னே...புருசனுடன் போகணும்னுதான் இத்தனை....

**ஜமுனா**: (உரக்க அழுது கொண்டிருக்கும் கிழவியின் பக்கம் பார்த்துக் கொண்டே இடையே பேசுகிறாள்)— வேறென்ன? அந்தப் பாழாய் போற வளுக்கு புருசன் மீது அத்தனை ஆசை.

**பகா**: (சந்தோஷமாக) ஒகோ! அப்படிச் சொல்லு! ரூகி அண்ணி, தான் கோதரை மயக்கியிருக்கான்னு நினைச்சேன். ஆனா நேர் மாறாகவல்லவா இருக்கு! உண்மையிலே மயக்கி இருப்பது கோதர் அல்லவா?

**ஜமுனா**: (உதட்டில் சிரிப்புத் தவழ குற்றம் சாட்டும் பார்வையுடன்) நீர் மட்டும் குறைந்தவரா?

(பகாவின் முன் சுவர்க்கமே இறங்கி வந்த மாதிரி ஆனந்தம். ஜமுனா லேசாக அவனை இடித்து போங்களேன்! அவர் அவளை அடித்து குற்றுயி ராக்கியபின் தான் போவீங்களா?

**பகா**: (இடுப்பிற்குப் பின்னால் போர்வையைச் சுருட்டியவாறு பரபரப் படைந்தவன் போல் அபிநயத்து) இதோ போறேன்! ரூகி அண்ணியை திருவிழாவுக்கு அழைச்சிட்டுப் போக வேண்டாமா? (ஒரடிபின்னே நகர்ந்து) ஒண்ணு கேட்கட்டுமா? (மெதுவாக) நீயும் திருவிழாவுக்கு வருவாயா? (ஜமுனா சிந்தனையில் ஆழ்ந்தவளாய் அத்தையைப் பார்க்கிறாள். அத்தை மூக்கை சிந்திக் கொண்டு அழுகை கலந்த குரலில் சொல்லுகிறாள்)

**மாமியார்**: ஜமுனா! எங்கேயடீ போய்விட்டாய்? போய் அந்த சிறுக்கிக்கு துணிமணிகளைக் கொடுத்து விட்டு வா. திருவிழாவுக்குப் போக புடவையைக் கட்டிக் கொண்டு கிளம்பியவள், அப்படியே...

**ஜமுனா**: (துள்ளிக் குதிக்கிறாள். பகாவின் முன்னே விழி களைத் தாழ்த்தி, கழுத்தை அசைத்து எதையோ உணர்த்தியவாறே அத்தையை நோக்கி ஓடு கிறாள். கொஞ்சலாக) ஏய்! அத்தை! பகா மேளாவிற்குப் போகிறார். நீ சரி என்றால், நானும் போய், கோதரைச் சமாதானப்படுத்தி அப்படியே ரூகியையும் திருவிழாவுக்கு....

**மாமியார்**: போங்களடி! எல்லாரும் போங்க. அவங்க அவங்க புருசனோட (ஜமுனா வீட்டிற்குள்ளே ஓடுகிறாள். மாமியார் முணுமுணுக்கிறாள்) உன் கோதர் எப்படியோ போகட்டும். பாவம் அந்தப் பெண்ணை. அந்த நாசமாய் போகிறவன்...வரட்டும், இனிமேல் என் வாசலில் கால் வைத்தால் முறித்து விடுவேன் அவன் காலை...ஆமாம்.

**ஜமுனா**: (புடவை, மற்றும் சில துணிமணிகளை எடுத்துக் கொண்டு மின்னல் வேகத்தில் வெளியே வருகிறாள். முற்றத்தில் நிற்கும் பகாவிடம் வந்து ஒயிலாக நின்று) இன்னுமா இங்கே நிற்கிறீங்க? அவளை வந்து அங்கே...

**பகா**: (அருகே வந்து) அவள் உன் அக்கா தானே! இப்பச் சத்தமே கேட்கலை பாரு. இதிலே யிருந்து புரிஞ்சுக்கோ. (இருவரும் செல்லுகின்றனர்)

**அண்டை அயலார்கள்:** *(மாமியாரைச் சமாதானப் படுத்துகின்றனர்)* பெண் வீட்டுக்காரங்கன்னா தாழ்ந்துதான் போணும்.

**மாமியார்:** ஐயோ! அவன் ஈவு இரக்கம் இல்லாமெ என் பெண்ணை அழைச்சிட்டுப் போய்க் கொன்னுடுவானே!

**மற்றொருத்தி:** பார்த்துக் கொண்டே இரு! அத்தை! இரண்டு நாளிலே இரண்டு பேரும் ஒன்றாய்...

*(பாடும் குரல் கேட்கிறது. இரண்டொரு நிமிட மௌனத்திற்குப் பின் எல்லாப் பெண்களும் சிரிக்கின்றனர்)*

**இன்னொரு வயதான மாது:** அட, அதென்ன இரண்டு நாள்னு சொல்றே? இங்கேயே இப்பவே! (மாமியாருக்கு கண்ணால் ஜாடை காட்டி) காலம் அப்படியே இருக்குது பாரு! இரண்டு பேரும் பாடிக்கிட்டே இல்ல திருவிழாவுக்கு போறாங்க! (எழுந்து நின்று) போங்கடி! போங்க! அவங்க அவங்க வீட்டு வேலையைப் பாருங்க.

*(எல்லாப் பெண்களும் எழுந்து நிற்கின்றனர். வயதானவள் மட்டும் பின்னால் வந்து மாமியாரின் முன்னே கைகளை நீட்டி)* புரிஞ்சுக்கம்மா புரிஞ்சுக்க! இதெல்லாம் இளம் பருவத்து ஊடலடி— தெரிஞ்சுதா?

*(செல்லுகின்றனர்)*

**மூன்று பெண்களும்:** *(சிரித்துக் கொண்டே செல்லுகின்றனர்)*

*சரியாகச் சொன்னே அம்பா சித்தி.*

**வயதானவள்:** (நடந்து கொண்டே) கொஞ்சம் கவனமாய் கேளுடி. நம்ம பெண்கள் தான் பாடுது.

*(மேளாவிற்குச் செல்லும் இளம் பெண்கள். இளைஞர்களின் குரல்கள் கேட்கின்றன)*

கோதர், பகாவின் குரல்

*பறக்கட்டுமா? சிறகடித்துப் பறக்கட்டுமா?*

(ரூகி—ஜமுனாவின் குரல்)

*காதலனுடன் இணைந்து பறப்போமா?*

*நாம் பறந்து செல்வோமோ?*

**மாமியார்:** (எழுந்து நின்று பெருமூச்செறிகின்றாள்)

பெண் என்னிக்கும் பிறர்வீட்டு சொத்து, எத்தனை நாள் வைத்துக் கொள்ள முடியும்?

*திரைவிழுகின்றது*

# ஊசியின் காது

## ஜயந்தி தலால்

**பாத்திரங்கள்**

பாயி சாகப்
நாகர் தாஸ்
நந்தநந்தன்
அரச சேவகர்
உத்தம் சந்த்
சித்திரகுப்தன்
போகிலால்
அக்கினி குமார்
சக்தி சரண்

(பார்வையாளர்கள் மேடைக்கருகே உட்கார வைக்கப்படுகின்றனர். சாதாரணமா நாடக மேடையைவிட இது வித்தியாசமானதாக பார்வையாளர் களுக்குத் தோன்றுகிறது. இதில் பார்வையாளர்களையும், நடிகர்களையும் பிரிக்கும் திரை எதுவுமில்லை. பார்வை யாளர்களுக்கு நாற்காலிகள் போடப் பட்டுள்ளன. அதே போல மேடையின் மீதும் பிறைச் சந்திர வடிவில் நாற்காலிகள் போடப் பட்டிருக்கின்றன. நடுவே ஒரு பெரிய மேஜையுள்ளது. அந்த மேஜையின் மீது விரிக்கப்பட்டிருக்கும் விரிப்பு ஒன்றுதான் திரை எனலாம்.

சற்று நேரத்திற்குப் பின்னர் பார்வையாளர் வருவதும் போவது மாயிருக் கின்றனர். பலர் அரங்கத்தில் போடப்பட்டிருக்கும் நாற்காலிகளில் சென்று அமர்கின்றனர். எல்லோருடைய முகங்களிலும் தீவிரமான சிந்தனையின் சாயல். ஒருவருக்கொருவர் பேசிக் கொள்வதில்லை. தீவிரமான முனைப் புடன் காணப்படும் செயலாளர் ஒருவர், மேஜையினருகே, கையிலிருக்கும் ஒரு செய்தித்தாளைப் பார்த்தவாறு அமர்ந்திருக்கிறார்.

நுழைவாயில் வழியாக பிரவேசிக்கும் நடுத்தர வயதுடைய ஒருவரின் மீது அனைவர் கவனமும் பதிகிறது. குல்லாய், குர்தா, குர்தாவின் கைப்பகுதியின் மீது கட்டப்பட்டிருக்கும் கடிகாரத்தில் தங்க சங்கிலி இணைக்கப்பட்டிருக்கிறது. ஒரு கையில்தடி, தடியுடன் கூடிய கையை இணைத்து வணக்கம் தெரிவித்த வாறே அந்தப் பிரமுகர் வருகிறார். நாடகத்தில் 'நாந்தி' எனப்படும் துவக்கப் பகுதி இவ்வாறு நிறைவேறுகிறது.

நாடகம் துவங்குகிறது. செயலாளர் செய்தித்தாளைப் படிக்கிறார்.

"நகரத்தின் மதிப்பிற்குரிய பெருமகனும் பிரபல தொழிலதிபரும் புகழ் பெற்ற கொடை வள்ளலும் தனது சுயமுயற்சியால் முன்னுக்கு வந்த வருமான சேட் நந்த நந்தன் அவர்களது அகால மரணத்தில், வருத்தம் தெரிவித்துக் கொள்ள, நகர மக்களின் ஒரு இரங்கற் கூட்டம் வியாழனன்று மாலை சுமார் ஆறு மணி அளவில் நடைபெறும்." (செய்தித் தாளை மடித்தவாறே) நான் திரு. பாயி சாகப் அவர்களை இன்றைய இக்கூட்டத்திற்கு தலைமை தாங்கும்படி கேட்டுக் கொள்கிறேன். திருவாளர் பாயி சாகப்புக்கு அறிமுகம் ஏதும் தேவையில்லை. கடந்த மூன்று ஆண்டுகளாக, இந்த நகரத்தில் நடைபெற்று வரும் நற்பணிகளை, ஊக்குவித்து, ஆதரவு நல்கி, அவற்றை முன் நின்று நடத்தும் பாயி சாகபை நகரமக்கள் யாவரும் அறிவார்கள். காலம் சென்ற சேட் நந்த நந்தலுடன் இவர் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தவர்.

(செயலாளர் தமது இருக்கையில் அமருகின்றார். பார்வையாளர் பக்க மிருந்து இலேசாகக் கைதட்டல்)

**நாகர் தாஸ்:** தலைமை வகிக்கும்படி திரு பாயி சாகபைக் கேட்டுக் கொள்ளும் பிரமேயத்தை நான் வழி மொழிகிறேன்.

(திரு பாயி சாகப் தலைமைப் பீடத்தில் அமருகிறார். ஜேபியிலிருந்து காகிதத்தையும், கண்ணாடியையும் எடுக்கிறார். கண்ணாடியை சரிவர அணிந்த பின், கையிலிருக்கும் காகிதத்தை உற்றுப் பார்க்கிறார். அருகிலமர்ந் திருக்கும் செயலாரிடம் ஏதோ கலந்தாலோசிக்கிறார் இதன் பின் தனது பேச்சைத் துவங்குகிறார்.

**பாயி சாகப்:** சகோதரர்களே! சகோதரிகளே! காலம் சென்ற சேட் நந்த நந்தனுடன் எனக்கிருந்த நெருங்கிய தொடர்பை நினைக்கும் போது, இன்று இந்தச் சபையில் அவரைப் பற்றிப் பேசுவது எனக்கு மிகவும் கடினமாக இருக்கிறது. உலகில் தோன்றும் எவருமே நிரந்தரமாக வாழ்ந் திருப்பதில்லை. யாவருமே மரணத்தைச் சந் திக்க வேண்டியவர்கள்தான். ஒரு மனிதன் விட்டுச் செல்லும் நறுமணம் போன்ற புகழ் ஒன்றுதான் அவனுக்குப் பின்னர் எங்கும் விரவி நிற்கிறது. இத்தகைய மனிதர்கள் தான் உயிர் வாழும் உரிமை பெற்ற பெருந்தகை யாளர்கள். தாம் செய்த நற்பணிகளின் மூலம் சேட் நந்தநந்தன் இந்த உரிமையைப் பெற்றிருக்கிறார் என்ற உண்மைக்கு நானே சாட்சி, எனக்கும் அவருக்கும் முப்பது வருடங்களாக நெருங்கிய தொடர்பு இருந்தது. சேட் நந்த நந்தன் அவர்களது வாழ்வில் விரவி நிற்கும் நறுமணம் குஜராத் முழுவதிலும், குறிப்பாக இந்நகரத்திலுள்ள ஒவ்வொரு குடிமகனின் உள்ளத் திலும் மாறா நினைவாக அழியாமலிருக்கும் என்பதிலும் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கிறது. அடி மட்டத்திலிருந்து துவங்கி தனது செயலாற்றலின் மூலம் மிக உயர்ந்ததொரு இடத்தை அவர் பெற்று விட்டார். தமது இந்த வெற்றியைப் பற்றிய கர்வம் அவருக்கு துளிக்கூட இருந்ததில்லை, விடா முயற்சி அவரது...

(திடீரென மேடையில் இருள் சூழ்கிறது. பார்வையாளர்களிடம் லேசான சலசலப்பு உண்டாகிறது. ஆனால் இரங்கற் கூட்டத்தின் முக்கியத் துவத்தைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு அவர்களைக் கட்டுப்படுத்தி வைக்கிறது. அரங்கத்தில் மீண்டும் ஒளி பரவுகிறது. முதலில் கண்கள் கூசுகின்றன. பின்னர் வியப்பை உணர்த்தும் ஒலிகள் எழுகின்றன. ஏனெனில் அரங்கில் இப் பொழுது இரங்கல் கூட்டத்தின் சூழல் காணப்படவில்லை. மாறாக, அகலமான தொரு ராஜபாட்டை தெரிகின்றது. இருமங்கும் படிகத்தினாலான கம்பங்களி னிடையே அது நீண்டு செல்லுகின்றது. பார்வையாளர்களின் வியப்பு சற்றே குறைகின்றது. சேட் நந்த நந்தன் பிரவேசிக்கிறார்)

**நந்த நந்தன்:** இது என்ன முறைகேடு? யாரிடம், எப்படிப் பேச வேண்டும், என்ற அறிவு, வழிமுறை ஏதாவது தெரியுமா தெரியாதா?.

(நந்த நந்தனை தொடர்ந்து வரும் தடிமனான அவை உறுப்பினர் நந்த நந்தனை முன்னே நிறுத்தி பதிலளிக்கிறார்)

**அரச சேவகர்:** மனிதன் எப்படிப்பட்டவன், என்பதும், இதோ தெரிந்து விடும்.

**நந்த நந்தன்:** இதற்கு என்ன பொருள்? உனக்குப் பேசத் தெரியுமான்னு கேட்டேன். உனது எஜமானர் யார்?

**சேவகர்:** எஜமான் கிஜமான் எல்லாம் நீ வந்த இடத்தோடு நின்று போய்விட்டது.

**நந்த நந்தன்:** பின்னே இங்கே என்ன தான் இருக்கு? மாமா வீடு.

**சேவகர்:** கிட்டதானிருக்கு வெகு தூரமில்லை.

**நந்த நந்தன்:** என் வீட்டில் யாராவது இந்த மாதிரி பேசினால் நாலு அறை கொடுத்து வெளியே தள்ளியிருப்பேன்.

**சேவகர்:** அதெல்லாம் உனக்கு இப்பொழுது நினைவுக்கு வந்துவிடும்.

**நந்த நந்தன்:** முட்டாள். இன்னுமா என்னை அழைத்துக் கொண்டு போக யாரையும் அனுப்பவில்லை?

**சேவகர்:** ஏன்? நான் வந்திருக்கிறேனே.

(அந்த வழியாக ஒரு பல்லக்கு செல்லுகிறது)

**நந்த நந்தன்:** அட! இந்த இடம் யார் நிர்வாகத்திலே இருக்கு? அவன் பல்லக்கில், நான் கால்நடையாகவா? அவன் யார்னு தெரியுமா? வேலைக் காரன், என்கிட்ட வேலைக்காரனாக இருந்தவன்.

**சேவகர்:** நீ நாலு அறை கொடுத்து அனுப்பினாயே! அவன்தானே?

**நந்த நந்தன்;** இல்லை, இல்லை, அவனில்லை, இவன் எனது மில்லில் வேலை செய்துட்டிருந்தான். இப்பத்தான் மூணு நாளைக்கு முன்னாலே நாய்க்கு கழுத்திலே பட்டை கட்ட வந்திருந்தான். அவனுக்குப் போய் பல்லக்கா?

**சேவகர்:** ஆமாம். அவனுக்கு நடந்து வர கால் எங்கே இருக்குது பாவம்!

**நந்த நந்தன்:** இது காலைப் பற்றிய பிரச்னை அல்ல. மரியாதைப் பிரச்னை. கௌரவப் பிரச்சனை.

**சேவகர்:** யாருடைய மரியாதை? யாருடைய கௌரவம்?

**நந்த நந்தன்:** இவன் என்ன ஜாதி தெரியுமா? நீசனே, இது கூடத் தெரியவில்லையே!

**சேவகர்:** உயர்ந்த ஜாதி எது, தாழ்ந்த ஜாதி எது என்பதை உரைத்துப் பார்க்கத்தான் நீ போயிட்டிருக்கே.

**நந்த நந்தன்:** போயிட்டிருக்கேனா? அப்படீன்னா நீ என்னை எங்கே இட்டுட்டுப் போறே?

**சேவகர்:** யாரையும் நான் எங்கேயும் அழைத்துப்போவ தில்லை. மனிதன் இறந்ததும், தனது வாழ்க்கையின் பாவ புண்ணியங்களைக் கணக்கிட்டுப் பார்க்க சித்திரகுப்தனின் அவைக்கு வரவேண்டியிருக்கிறது.

**நந்த நந்தன:** சித்திரகுப்தனா? யார் அந்தச் சித்திரகுப்தன்?

**சேவகர்**: இதோ தெரிந்து விடும்.

**நந்த நந்தன்**: என்ன சொன்னே? பாவ புண்ணியங்கள் கணக்குப் பார்க்கப்படும். உம், பிறகு என்ன நடக்கும்?

**சேவகர்:** எல்லாத்தையும் கூட்டிக் கழிச்சு லாப நஷ்டக் கணக்குப் பார்க்கப்படும். இதெல்லாம் இதோ இப்பவே தெரிஞ்சுடும். அதிகம் சொல்ல வேண்டிய அவசியமில்லை.

**நந்த நந்தன்:** சித்திரகுப்தனின் தர்பாருக்கு விவேகமே இல்லை. யாருக்கு எப்படி மரியாதை தருவது என்பதுப் பற்றி விவஸ்தையே இல்லை. மனிதர்களை நடத்தும் முறையிலும் பாரபட்சம் இருக்குது.

**சேவகர்**: அதெப்படி?

**நந்த நந்தன்:** அதைத்தான் பாரேன்! அவனுக்குப் பல்லக்கு. நான் நடந்து வறேன். நான் யார்னு தெரியுமா உனக்கு?

**சேவகர்:** அதெல்லாம் எனக்குத் தெரியாது. ஆனால் உனக்கென்ன நடக்கும் என்பது மட்டும் தெரியும்.

**நந்த நந்தன்**: என்ன நடக்கும்?

**சேவகர்**: அதை, தேவாதிதேவரின் வாயாலேயே கேட்டுக் கொள்ளும்.

(அரங்கத்தில் மீண்டும் இருள் சூழ்கின்றது. மீண்டும் ஒளி பரவும்போது சபை தெரிகின்றது. உத்தம் சந்த் பேசிக் கொண்டிருக்கிறார்)

**உத்தம் சந்த்**: நான் உங்களுக்கெல்லாம் காலம் சென்ற சேட் நந்த நந்தன் அவர்களைப் பற்றிக் கூற ஆசைப் படுகிறேன். எத்தகைய கடினமான, கஷ்டமான சூழ்நிலையில் அவர் தமது வாழ்க்கையைத் துவக்கினார். தனது முயற்சிகளின் மூலம் எவ்வாறு முன்னேறினார் என்பதைக் கூற விரும்புகிறேன். இந்நகரத்தின் வயது முதிர்ந்த ஆண் பெண்களுக்கு ஒரு இளைஞனின் முகம் நினைவிருக்கலாம். அந்த இளைஞன் தெருத் தெருவாய் அலைந்து பண்டங்களை விற்கும் வியாபாரியாக இருந்தான். தனது சிரித்த முகத்தினால் அவன் மக்களின் மனத்தை விரைவிலேயே வென்று விட்டான். தனது திறமையினாலும், வியாபார மதி நுட்பத்தினாலும் வியாபாரிகளின் அன்பைப் பெற்றுவிட்டான். தெருவில் வியாபாரத்திற்காக சுற்றியவன் இரண்டு, மூன்று வருடங்களுக்குப் பிறகு ஒரு சிறிய கடையைத் திறந்தான். இது தான் காலம் சென்ற சேட் நந்த நந்தன் அவர்களின் வணிக வாழ்வின் துவக்கம்.

(இருளும்—பின் ஒளியும் உண்டாகிறது. சித்திரகுப்தனின் தர்பாரில் சேட் நந்த நந்தன் நிற்கிறார்)

**நந்த நந்தன்:** இதைக் கூற உமக்கென்ன அதிகாரம் இருக்கிறது? நான் சம்பாதித்ததெல்லாம் எனது அறிவினால், எனது தோள்வலிமையால்.

**சித்திரகுப்தன்:** நீ உனது பலத்தினால், தோள்வலிமையினால் மட்டும்தான் சம்பாதித்தாயா?

**நந்த நந்தன்:** ஆமாம். எனது சக்தியினால்தான் பொருள் ஈட்டினேன்.

**சித்திரகுப்தன்:** இதோபார்! இந்த விஷயத்தில் தெளிவாக, உள்ளதைச் சொல்லிவிடு. அதுதான் உனக்கு நல்லது.

**நந்த நந்தன்:** நான் பொய் சொல்லுகிறேன் என்ற கூறுகிறீர்களா?

**சித்திரகுப்தன்:** உன் வாழ்க்கையிலேயே ஒருக்கால் நீ இப் பொழுது தான் முதல் முறையாக உண்மை பேசியிருக்கிறாய்.

**நந்த நந்தன்:** இந்த மாதிரி அவமானத்தை என்னால் சகித்துக் கொள்ள முடியாது.

**சித்திரகுப்தன்:** அவமானம் என்று சொல்லாதே நந்தநந்தா? உனது வாழ்க்கையை உன் அடிமனத்தின் அந்த ரங்கமான, மிகமிக ரகசியமாக விஷயங்களைக் கூட நானறிவேன். நீயாகவே சொல்லிவிடு. நான் ஏற்றுக் கொள்கிறேன். மீண்டும் சொல்லு கிறேன். இதுதான் உனக்கு நன்மை, நல்லது.

**நந்த நந்தன்:** நான்சொல்ல வேண்டியது எதுவுமில்லை.

**சித்திரகுப்தன்:** நல்லது பிறகு உன்னிஷ்டம். (உறுப்பினரிடம்) போய் போகிலாலை அழைத்து வா.

(சேவகன் போகிறான்)

**நந்த நந்தன்:** போகிலாலா?

**சித்திரகுப்தன்:**ஒ! உனக்கு இன்னமும் நினைவிருக்கிறதா?

**நந்த நந்தன்:** போகிலாலா? போகிலாலா? இங்கே எப்படி? இங்கே எதற்காக வந்திருக்கிறான்?

**சித்திரகுப்தன்:** நீ இங்கு வரப் போகும் செய்தி வந்ததுமே அவன் உடனே இங்கு வரவழைக்கப்பட்டான். இதோ! போகிலாலே வந்து விட்டான்.

**நந்த நந்தன்:** (போகிலாலை வைத்த விழிவாங்காமல் பார்க்கிறான்) போகிலால்! போகிலால்!

**போகிலால்:** ஆமாம். நந்தன் சேட், அடையாளம் தெரிஞ்சுக் கிட்டீங்களா?

**நந்த நந்தன்:** இங்கே!நீ எப்படி?

**போகிலால்:** நாம் என்ன செய்ய? ஏழை-பணக்காரன், சிறியவன், பெரியவன் என்ற எல்லோரும் ஒன்றாக வரக்கூடிய இடம் இது ஒன்றுதான்.

**நந்த நந்தன்:** போகிலால்! நீ என்ன சொல்லுகிறாய் என்பது எனக்குப் புரியவில்லை.

**சித்திரகுப்தன்:** இதோ! நான் புரிய வைக்கிறேன்.

**நந்த நந்தன்:** எங்கள் இருவரின் பேச்சில் நீ ஏன் வீணாகத் தலையிடுகிறாய்?

**சேவகர்:** ஏன்? உலக வாழ்வின் மயக்கம் இன்னும் தெளியவில்லையா?

**சித்திரகுப்தன்:** நந்த நந்தா! வாழ்க்கையில் நீ உனது சுயபலத்தினால் முன்னேறியதாக கூறினாய். அப்படித்தானே.

**நந்த நந்தன்:** ஆமாம். இது முற்றிலும் சரியானது.

**சித்திரகுப்தன்:** இந்த போகிலாலைப் பார்த்த பின்னும் அதையேதான் சொல்லுவாயா?

**நந்த நந்தன்:** இது நாங்கள் இருவரும் யோசிக்க வேண்டிய விஷயம்.

**சேவகர்:** இங்கு நாம், நாங்கள் எல்லாம் கிடையாது. இங்கிருப்பது நானும் நீயும்தான்..

**நந்த நந்தன்:** உதவாக்கரை! சுயநலமி!

**சித்திரகுப்தன்:** நந்த நந்தன், உன்னைத் தவிர இந்த வார்த்தைகளை ஏற்கும் தகுதி வேறெவர்க்குமில்லை. ஏனெனில் சுயநலத்திற்காக, சுயலாபத்திற்காக, ஒரு நல்ல நண்பனின் கழுத்தில்....

**நந்த நந்தன்:** இது பொய். நான்....

**போகிலால்:** நான் எப்பொழுது அப்படிக் கூறினேன்? நான் சொல்வ தெல்லாம் எதை நீ சுய முயற்சி, சொந்த பலம் என்கிறாயோ, அதற்குப் பின்னால் இரண்டு, மூன்று வருடமிருந்த நம்முடைய உறவும் உன்னை உயர்த்திவிட என்னுடைய பத்தாயிரம் ரூபாயும் இருந்தது என்பது தான்.

**நந்த நந்தன்:** ஆனால்—ஆனால்...

**சித்திரகுப்தன்:** இப்பொழுதும் சொல்லுகிறேன் ஒப்புத்துக் கொண்டு விடு. முடிவில் எப்படியும் நீ ஒப்புக் கொண்டுதானாக வேண்டும்.

**நந்த நந்தன்:** ஆனால் இவ்விஷயத்தில் எனக்கு கெட்ட எண்ணம் எதுவு மிருக்கவில்லை. என் கைக்கு பணம் வந்ததும், போகிலாலின் பணத்தை உடனே திருப்பித் தர விரும்பினேன். ஆனால் அதற்குள் போகிலால் இறந்து விட்டான்.

**சித்திரகுப்தன்:** ஆகவே, பின்னால் அந்த ரூபாயைத் திருப்பித் தர உனக்கு அவகாசமே இல்லாமல் போய் விட்டது. சரிதானே?

**நந்த நந்தன்:** ஆமாம்—இல்லை....வந்து...

(இருள், அதன்பின் ஒளி பரவுகிறது. மீண்டும் சபை தெரிகின்றது. பேச்சாளர் ராஜஸ்ரீ அக்கினிகுமார் சொற்பொழிவாற்றிக் கொண்டிருக் கிறார்)

**அக்கினிகுமார்:** நகரப் பெருமக்களே! யாவரும் ஒப்புக் கொள்ளக் கூடியதான, அத்தாட்சி பூர்வமான தன்மைதான் நடைமுறை வாழ்க்கையின் அடிப்படையாக, அடித்தளமாக அமைய வேண்டும் என்பதை யாவரும் கூறக் கேட்டீர்கள். இதன் பொருள் பணம் காசு அல்ல: கொடுக்கல் வாங்கல் அல்ல. காலம் சென்ற சேட் நந்த நந்தன் அவர்கள் இதனை சொந்த வாழ்க்கையில் நடை முறையாக வாழ்ந்து காட்டியவர். அவரது வாழ்வில் எத்தனையோ நிகழ்ச்சிகளுக்கு நான் சாட்சியாக இருந்திருக்கிறேன். ஒருவருடைய செல்லா காசு தம்மிடம் இருந்து விட்டால்கூட அவர் மனம் வருந்தும். அதனை அதற் குரியவனிடம் சேர்ப்பிக்காதவரை அவர் நிம்மதியடைய மாட்டார். எத்தனையோ சிறுவர்கள், விதவைகளின் சொத்து அவரிடம் ஒப்படைக்கப் பட்டிருந்தது. அவர்கள் ஒவ்வொருவரும் இதய பூர்வமாக அவரை வாழ்த்தினர். கீதையின் லட்சியம்தான் அவரது வாழ்க்கையின் ஆதாரமாக விளங்கியது.

(மீண்டும், இருள். பின்னர் ஒளி. சித்திரகுப்தனின் தர்பார்)

**நந்த நந்தன்:** பொய்—இவள் கூறுவது சுத்தப் பொய்.

**கிழவி மூலி:** வாழ்நாள் எல்லாம் இவன் பொய்யே பேசினான். ஆனால் இங்கே அதை ஒப்புக் கொண்டால்தானே விடுதலை கிடைக்கும்?

**நந்த நந்தன்:** எதை ஒப்புக் கொள்ள வேண்டும்? உன் தலையையா?

**சித்திரகுப்தன்:** நந்தநந்தன், நிறையப்பேர் தங்கள் உடைமைகளைப் பத்திரமாக வைத்திருக்க உன்னிடம் கொடுத்து வைத்திருந்தனர். இல்லையா?

**நந்த நந்தன்:** அதுதான் என் மீதிருந்த நம்பிக்கை. மரியாதை. அதனால்தான் எல்லோரும் என்னிடம் அவர் தம் பொருள்களைப் பாதுகாப்பாக வைத்தனர். நான் அவற்றை நாகப்பாம்புபோல், பத்திரமாக கவனிக்க வேண்டி வந்தது. இதற்கு பதிலாகக் கிடைத்ததுதான் கெட்ட பெயர்தான்.

**கிழவி மூலி:** நந்துபாய்! நீ இவ்வளவு மோசக்காரனாக இருபபாய் என்று நான் நினைக்கவில்லை.

**நந்த நந்தன்:** மூலி அக்கா; நீ என்னைப்பற்றி என்ன நினைத்திருந்தால் எனக்கென்ன? நான் மற்ற காரியங்களையும் கவனிக்க வேண்டியதிருந்த தல்லவா?

**சித்திரகுப்தன்:** மற்ற காரியங்கள், அதாவது பணம் சம்பாதித்தல், பொருளீட்டுதல், அப்படித்தானே?

**நந்த நந்தன்:** ஆம். எது கடமையோ, அதை நிறைவேற்றித் தானாக வேண்டும். இல்லையா?

**சித்திரகுப்தன்:** நான் சொன்னேன் அல்லவா? இதனால்தான் இத்தனை செல்வமும சிறப்பும் ஏற்பட்டது. பாதுகாப்புப் பொருளை காப்பதும் பொருளீட்டுவதற்கு ஒரு சாதனம்தான் இல்லையா? எத்தனை பேருடைய பொருளை, முதலை நீ திருப்பித்தந்தாய்? நம்பிக்கையாக வைத்திருந்த வர்களில் எவ்வளவு பேர்களுடைய நகைப் பெட்டிகளை அபகரித்தாய்? சொல்லு!

**நந்த நந்தன்:** இது பொய்.

**சித்திரகுப்தன்:** இந்தக் கிழவி மூலியின் பணத்தைத் திருப்பித் தந்தாயா?

**நந்த நந்தன்:** இல்லை. ஏனென்றால் அந்தப் பணம் இவளுடையது அல்ல.

**கிழவி மூலி:** பின் யாருடையது?

**நந்த நந்தன்:** தான தர்மத்திற்கு, என்று சொல்லித்தான் இவள் என்னிடம் பணத்தைத் தந்தாள்.

**கிழவி மூலி:** அயோக்கியன். கூசாமல் பொய் சொல்லுகிறான். நான் அப்படியெல்லாம் சொல்லவே யில்லை.

**நந்த நந்தன்:** இதைச் சொல்லவேண்டிய அவசியமென்ன? ஒருவருக்கு வாரிசு எவருமில்லை என்றால் அந்தப் பணம் தான தர்மத்திற்குத்தானே அர்த்தம்?

**சித்திகுப்தன்:** அதாவது அவளுக்கு வாரிசு, அதை அனுபவிப்பவன் நீதான். இல்லையா?

**நந்த நந்தன்:** நீங்களெல்லோரும் ஒரேமாதிரியாகச் சிந்திக்கிறீர்கள். இதன் பொருளையும் புரிந்து கொள்ள வேண்டும்.

**சித்திரகுப்தன்:** ஒருவர் தன் வாழ்க்கையிலே சம்பாதித்ததையெல்லாம் பிடுங்கிக் கொள், அவர்களை பட்டினியாக சாகும்படி செய்துவிடு. இதுதானே நீ கூறும் பொருள்?

**நந்த நந்தன்:** எனக்கு இங்கே நியாயம் கிடைக்காதென்று தோன்றுகிறது.

**சித்திரகுப்தன்:** ஏன் என்றால் உண்மையான நியாயம் எது என்று உனக்குத் தெரியவே தெரியாது.

(இருள் மீண்டும் ஒளி. சபை. ஸ்ரீசேதன் பிரசங்கம் செய்து கொண்டிருக் கிறார்)

**சேதன்:** உலகத்தில் ஒரு மனிதன் எத்தனைக்கெத்தனை நற்பணிகளைச் செய்கிறேனோ அத்தனைக்கத்தனை அவன் மனத்தில் புகழ் பெற வேண்டு மென்ற ஆசை உண்டாகிறது. இது என்னுடைய அசைக்க முடியாத துணிவு. சுயநலமற்ற சேவை, இவ்வுலகத்தில் காணக்கிடைக்காத ஒன்று. அது வேறொரு உலகத்தைச் சார்ந்தது என்று உறுதியாக நம்புகிறேன். ஆனால் காலம் சென்ற சேட் நந்த நந்தன் இதற்கு விதிவிலக்காக இருந்தவர் என்பதை எனது சொந்த அனுபவத்திலிருந்து நான் கூறமுடியும். தானம் வழங்குவதற்குப் பின்னால் புகழாசையோ, உலகத்தின் பாராட்டுதலைப் பெறவேண்டுமென்ற எண்ணமோ அவருக்கு இருந்ததே இல்லை. சகோதரர் நந்த நந்தன் அவர்கள் வாழ்வின் இன்பதுன்பங்களை அனுபவித்தவர். குளிரையும், வெப்பத்தையும் தாங்கியவர். வசந்தத்தின் இனிமையையும், இலையுதிர் காலத்தின் வெறுமை யையும் கண்டவர். இந்த அனுபவம் பிறர்பால் இரக்கத்தின் அடிப்படையில் அவருக்குக் கிடைத்திருந்தது.

பிறருடைய துன்பத்தின் மீது தனது புகழெனும் கோபுரத்தை நிலை நிறுத்த வேண்டுமென்ற ஆசை அவருக்கு ஒரு பொழுதும் இருந்ததில்லை. ஒருவருடைய துன்பத்தைக் கடுகளவாவது குறைக்க முடிந்தால் அதுவே என் வாழ்வின் குறிக்கோள் என்று அவர் அடிக்கடி கூறுவது வழக்கம். செல்வம் படைத்த பயன் பிறருக்கு பயன்படுவதுதான். இதை விட நல்ல பலன் வேறெதுவும் இல்லை என்பார் அவர். அதனால் தான் இவர் தாராளமாக திறந்த மனத்துடன் தனிமனிதர்களுக்கும் நிறுவனங்களுக்கும் தானமளித்தார். அவற்றை திறமையாக நிர்வகித்தார். இன்று சேட் நந்த நந்தன் நம்மிடையே இல்லாத குறையை சமுதாயத்தினால் புறக்கணிக்கப்பட்டவர்களும், ஏழை எளிய வர்களும்தான் அதிகம் உணருவார்கள்.

(இருளும் ஒளியும்மாறி வருகிறது.சித்திரகுப்தனின் தர்பார்)

**சித்திரகுப்தன்:** அப்படி என்னால் உனது தானம் புகழுக்காகத்தானே?

**நந்த நந்தன்:** புகழ் எனக்கு ஏராளமாகக் கிடைத்தது. அதை வாங்க வேண்டிய அவசியம் எனக்கு ஏற்படவில்லை.

**சித்திரகுப்தன்:** உனது தானத்தின் நோக்கம்தான் என்ன?

**நந்த நந்தன்:** இதென்ன கேள்வி? தானத்திற்கு நோக்கம் எதுவாக இருக்க முடியும்? பிறர் துன்பத்தைக் காண சகிக்காவிட்டால் அதனைக் குறைக்க முயல வேண்டும். இரண்டு பைசாவாவது கொடுத்து நிம்மதி பெற வேண்டும்.

**சித்திரகுப்தன்:** பிறர் துன்பத்தைக் காண சகிக்காத நிலை எப்பொழுது வருகிறது?

**நந்த நந்தன்:** மனிதன் என்றால் இதயம் என்று ஒன்று உண்டு. இந்த நிலைக்காக எதிர்பார்த்திருக்க வேண்டியதில்லை.

**சித்திரகுப்தன்:** நல்லது. (பேச்சை மாற்றி) உனக்கு மாலதியைத் தெரியுமல்லவா?

**நந்த நந்தன்:** மாலதியா? என்ன சொல்லுகிறீர்?

**சித்திரகுப்தன்:** நினைவுகளை சற்று பசுமையாக்கிக் கொண்டு பார். உனது பங்களாவுக்கருகே ஒரு குடும்பம் இருந்தல்லவா? அந்த வீட்டின் ஒரு மருமகள் விதவை. (சற்று நிறுத்தி) நினைவு படுத்திக் கொள்ள இன்னும் கொஞ்சம் விரிவாகச் சொல்லட்டுமா?

**நந்த நந்தன்:** நினைவு வந்ததுவிட்டது. உமக்கு இதைப் பற்றி என்ன?

**சித்திரகுப்தன்:** மாலதியால்தான் அனாதாசிரமத்துடன் உனக்கு தொடர்பு ஏற்பட்டது என்பதைச் சொல்ல விரும்புகிறேன். இதன்பின் இதே காரணத்திற் காகத்தான் நீ விதவாசிரமத்திற்கு உதவி புரிந்தாய்.

**நந்த நந்தன்:** நான் உலகத்தின் மாபெரும் பாவி என்று காட்ட விரும்புகிறீர் அப்படித்தானே?

**சித்திரகுப்தன்:** பாவத்தைப் பற்றிய உனது விளக்கம் என்ன என்று எனக்குத் தெரியாது. ஆனால் மாலதிக்கு அடிக்கடி நேர்ந்த துன்பகர நிலையில் உனது செயலைப் பற்றிய எண்ணம் உனக்கு எழுந்த பொழுது நீ உடனே அனாதா ஆசிரமத்திற்கு உதவி புரிய நிச்சயித்தாய். இதெல்லாம் உண்மையா இல்லையா?

**நந்த நந்தன்:** மனிதனுக்கு இதற்காக உன்னதமான இடம் தரப்பட வேண்டும்.

**சித்திரகுப்தன்:** உன்னதமான இடம்தான் உனக்கு கிடைத்து விட்டதே. நீ உயிர் வாழ்ந்தபோதும், இறந்த பின்னரும் கூட உலகம் உன்னைக் கொடை வள்ளல் என்றுதானே புகழுகிறது. இத்தனை மரியாதையும், பெருமையும் குறை வானதா என்ன?

**நந்த நந்தன்:** கிண்டலையும் நையாண்டியையும் நன்றாகப் புரிந்து கொள்கிறேன். ஆனால் இவற்றை யெல்லாம் நான் பாவமாகக் கருதவில்லை. கீதையின் உபதேசத்தை வாழ்க்கையில் கொணர்ந்த பெருமை கூட...

**சேவகர்:** கர்மயோகியின் ஆதரிசமா?

(இருளும்-ஒளியும். சபை. தேசப்பிரிய சக்தி சரணன் சொற்பொழிவாற்றிக் கொண்டிருக்கிறார்)

***சக்திசரணன்:*** நம் நாட்டில் செல்வந்தர்களின் அரசியல் ஒரு தனியான விஷயம். அவர்களுடைய முக்கியமான கொள்கை, சுயலாபம் அடைவதுதான். திருடனிடம், திருடு என்ற சொல்லி பணக்காரிடம் போய் ஜாக்கிரதையாக இருங்கள் என்று சொல்வது போல. மக்களின் உணர்ச்சிகளை தவறாகப் பயன்படுத்தி லாபமடைவதைத் தான் இவர்கள் தேசசேவை என நினைக்கின்றனர். இத்தகைய சூழ்நிலையில், நற்கதி அடைந்துள்ள நந்த நந்தனின் தேசப்பற்று, அவருடைய சீரிய தேசபக்தி, கொள்கைப் பிடிப்பு, கொடைத் தன்மை, உண்மையிலேயே இணை யற்றது. தியாகம் புரிய அவர் என்றும் தயங்கியதில்லை. அவமானத்துடன் கூடிய சிறிய சுயலாபத்திற்காக, அவர் ஒரு பொழுதும் செயலில் ஈடுபட்டதில்லை. அவரது ஒவ்வொரு செயலிலும் தேச பக்தியின் மிகச் சிறந்த உதாரணத்தை. நாம் நிதரிசனமாகக் காண்கிறோம்.

(இருள், ஒளி, சித்திரகுப்தனின் தர்பார்)

***சித்திரகுப்தன்:*** நந்தநந்தன், இனி உமது தேச சேவையைப் பற்றி பேசலாம்.

**நந்த நந்தன்:** இதில் பேசுவதற்கென்ன இருக்கிறது? எனது கடமை அது. அதனை நான் நிறைவேற்றினேன்.

***சித்திரகுப்தன்:*** ரொம்ப சரி. அனைவருடைய கடமை அது. ஆனால் எதை நிறைவேற்றினாய் என்பதுதான் கேள்வி.

**நந்த நந்தன்:** தேசபக்தர்கள் மூலம் துவக்கப்பட்ட நிதிகளுக்கு பண உதவி புரிய நான் என்றும் தயங்கியதேயில்லை. அவர்களது கொடுக்கல் வாங்கல் பற்றி ஒரு வார்த்தை கூட நான் கூறவில்லை. நான் அவர்களுக்கு பணம் கொடுத்தேன். அவர்கள் என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்தார்கள்.

***சித்திரகுப்தன்:*** நீ தேசத் தொண்டர்களுக்கு மட்டும் பணம் தரவில்லை. அரசு ஊழியர்களுக்கும் நிறையப் பணம் கொடுத்தாய் அல்லவா?

**நந்த நந்தன்:** ஆமாம். உம்மைப் போன்றவர்களுக்கு இது சரியில்லை எனத் தோன்றலாம். ஏன் என்றால் நீங்கள் நடைமுறை உலகத்தைப் பற்றி அறியாதவர்கள். உலகத்தில் வாழ உங்களுக்குத் தெரியாது. உலகத்தில் வாழ வேண்டுமென்றால் சிறு தூசிகூட அவசியமானது. தேவை ஏற்படும் போது, எல்லாப் பொருட்களுக்கும் அதனதன் மதிப்பு உள்ளது. வெறும் காற்றும், தண்ணீரும் வயிற்றை நிரப்புமா?

***சித்திரகுப்தன்:*** அப்படி என்றால் இந்த நிதியும், வாழ்வின் விலை செலுத்தும் பிரச்சனை போன்றதுதான். இல்லையா?

**நந்த நந்தன்:** இதில் தவறென்ன? இந்த சாக்கில் கொஞ்சம் நாட்டு மக்களுக்கும் நான் உதவியாக இருக்க முடிந்தது.

***சித்திரகுப்தன்:*** அந்த சுதேசி இயக்கம் என்னவாயிற்று?

**நந்த நந்தன்:** அதைப் பிரசாரம் செய்வதற்காக நான் லட்ச லட்சமாகச் செலவு செய்தேன். நாட்டில் சுதேசிக்கு ஊக்கமளித்தால் வெளிநாட்டு ஆதிக்கம் தானாகவே குறைந்து விடும்.

***சித்திரகுப்தன்:*** இதில் ஒட்டு மொத்தமாக எத்தனை லாபம் கிடைத்தது? இந்த சுதேசி உணர்வினால் உமது தொழிற்சாலைக்கு எத்தனை ஆதரவு கிடைத்தது?

**நந்த நந்தன்:** இது பொருளாதாரத்தைப் பற்றிய நேரடி யான கேள்வி. அதாவது தேவைக்கு ஏற்ப பூர்த்தியாதலும் நடக்கும்.

***சித்திரகுப்தன்:*** உறங்கி கிடந்த தேவைகளை தண்டோராப் போட்டு எழுப்ப வேண்டியிருக்கிறது. இல்லையா?

**நந்த நந்தன்:** ஆமாம். அப்படியும் ஏற்படும்.

***சித்திரகுப்தன்:*** சுதேசி என்ற பெயரில் நீ கொடுத்தது எல்லாம் சுதேசி தானா?

**நந்த நந்தன்:** சுதேசிக்கு நீர் எவ்வளவு குறுகிய விளக்கம் தருகிறீர்?

***சித்திரகுப்தன்:*** நீர் எதை விற்றாலும் அவையெல்லாம் சுதேசி என்ற விளக்கம் உனக்கு சுவையாக இருக்கிறது இல்லையா?

**நந்த நந்தன்:** அது சரி, மக்களின் தேவையைப் பூர்த்தி செய்வது என்பது என்னுடைய திடமான கொள்கையாக இருந்து வந்தது.

***சித்திரகுப்தன்:*** அப்படியென்றால் நீ ஏன் கறுப்பு மார்க்கெட்டை நடத்துகிறாய்?

**நந்த நந்தன்:** அறிவுள்ள மனிதன் இப்படிக் கூறும்போது எனக்குக் கோபம் வருகிறது. முதலாவது மார்க்கெட் என்பது வெறும் கறுப்புத்தான். வெள்ளை மார்க்கெட் என்பது முட்டாள்களின் கற்பனை. மற்றொன்று அப்படி செய்வதினால் நாட்டின் பொருட்கள் நாட்டிலேயே இருக்கும். இதன் சிறப்பு உமக்குப் புரியாது. மூன்றாவது புதைத்த பிணத்தை தோண்டி எடுப்பதில் உமக்கு அர்த்தமற்ற ஆர்வம். சகோதரர்களே. நடந்தது, நடந்துவிட்டது இனி நடக்கப்போவது பற்றி சிந்தியுங்கள் என்றுதான் நான் எப்பொழுதும் கூறுவது வழக்கம்.

***சித்திரகுப்தன்:*** கறுப்புச் சந்தை ஒழிப்புக் கமிட்டியில் நீ இருந்தாய் அல்லவா?

**நந்த நந்தன்:** ஆமாம். அதன் தலைவராக இருந்தேன்.

***சித்திரகுப்தன்:*** அப்போ, சரி நீ நடைமுறை அறிந்தவன். உங்களுடைய கமிட்டி இயங்க வேண்டுமென்றால் கறுப்பு மார்க்கெட் இருந்தே தீர வேண்டும். இல்லாவிட்டால் நீங்களெல்லாம் எதை ஒழிப்பீர்கள்?

**நந்த நந்தன்:** உண்மையைச் சொன்னால் இப்பொழுதுதான் எனக்கு உம் மீது மரியாதை அதிகரித்துக் கொண்டுவருகிறது. என்னுடன் நீர் இருந்தால் உமது உலக விவகார அறிவு வளரும். உம்மை உலக நடைமுறையில் விற்பன்னரா ராக்கி விடுவேன்.

***சித்திரகுப்தன்:*** நன்றி. ஆனால் எனக்கு இந்த பாக்கியம் கிடைக்க வாய்ப்பு இருக்காது.

**நந்த நந்தன்:** காரணம்?

**சித்திரகுப்தன்:** ஏனெனில் உமது வழக்கு விசாரணை முடிந்துவிடடது. இனித்தீர்ப்பு சொல்ல வேண்டியதுதான்.

**நந்த நந்தன்:** யாருக்குத் தீர்ப்பு? எதற்குத் தீர்ப்பு?

**சேவகர்:** நான்தான் சொன்னேனே—லாப நஷ்ட கணக்கு. அதைக் கூட்டிக் கழித்தாகிவிட்டது. இனிப் பெருக்க வேண்டியது தான் மிச்சம்.

(இருளும் ஒளியும். சபை. பாய்சாகப் முடிவுரை வழங்குகிறார்)

**பாயிசாகப்:** இப்படிப்பட்ட வீரபுருஷரின் இழப்பினால் நகரமே இன்ற நிலைகுலைந்து போய்விட்டது.அவரது காலியான இடத்தை நிரப்ப வேறு எவரும் இருப்பதாகத் தெரியவில்லை. வருத்தம் தரக்கூடிய விஷயம் இது மட்டுமல்ல. மனித இதயம் மேலும் மேலும் குறுகிக் கொண்டு போவதுதான் விசனத்தை அளிக்கின்றது. அனைத்து மக்களின் நன்மை பொதுநலம் என்பதெல்லாம் இன்று ஏட்டளவில் நின்று விட்டது. ஆனால் எனக்கு இதைப்பற்றிய வருத்தமில்லை. தனது வாழ்கையில் உபநிடத்தில் கூறியபடி 'ஈந்த பின் புசி' என்ற சீரிய லட்சியத்திற்கு ஒரு எடுத்துக்காட்டாக, காலம் சென்ற நந்தநந்தனை நிதரிசனமாக காணும் வாய்ப்பை நான் பெற்றேன். இதனை எனது சிறந்த பாக்கியமாகக் கருதுகிறேன். நினைவுச் சின்னம் பற்றி இக்கூட்டத்தில் பேச்சு எழுந்தது. இப்பணியை உற்சாகத்துடன் ஏற்றிருக்கும் சகோதரர்கள் இதனைச் சிறந்த முறையில் நிறைவேற்றுவார்கள் என்பதில் எனக்குச் சற்றும் ஐயமில்லை. முடிவில் பைபிளின் ஒரு வாக்கியம். அதாவது, ஊசியின் காது வழியே ஒட்டகம் வெளிவந்தாலும் வரலாம். ஆனால் சுவர்க்கத்தின் வாயிலிலே செல்வந்தர்கள் நுழைய முடியாது என்ற வாக்கியம் நினைவு வருகிறது. இன்று நற்கதியடைந்த நந்த நந்தன் இதனைப் பொய்யாக்கி விட்டார். உயிருடனிருக்கும் போதும், வாழ்க்கையெனும் குறுகிய பள்ளத் தாக்கின் வழியே, கறை எதுவும் படியாமல் தப்பித்துக் கொண்டு வெளியேறி விட்டார். ஊசியின் காதுக்கு ஒரு விதி விலக்காக இருந்தவரை இறைவன் அமரராகட்டும். என்றென்றும் அழியாத அமைதியை அவருக்கு அளிப்பாராக!

(இருளும்-ஒளியும் உண்டாகிறது. அரங்கத்தில் இப்பொழுது சபையில்லை. பார்வையாளர்கள் உட்காருமிடத்திலிருந்து வெளியேறிக் கொண்டிருந்த பார்வையாளர்கள் காலியான நாற்காலிகளினிடையே, இரங்கற் கூட்டத்தின் அழைப்பை சலனமற்ற பார்வையுடன் பார்க்கின்றனர்)

(திரை விழுகின்றது)

# புதிய பிறவி

## கிருஷ்ணலால் ஶ்ரீதரானி

**பாத்திரங்கள்**

சர் அமல்
நந்தராய்
தீபக்
டாக்டர்
மைனா
உர்மி

(17 மே 1930. இருள்படர்ந்த இரவு. மணி எட்டு. தேவி கிராமத்தின் பாதையில் சர் அமல் தேராசரியின் மாளிகை மூன்றாவது மாடியின் வரவேற்பறை.

லஸ்தர் குளோப் விளக்குகளில் மின்சார பல்புகள் எரிகின்றன. வடபுறமும் தென்புறமும் உள்ள சுவர்களை ஒட்டிய அறைகளின் நுழைவாயில்கள் எதிரும் புதிருமாய் அமைந்துள்ளன. கிழக்குப்புறம் மாடிக்குச் செல்லும் பால்கனி உள்ளது. அதனருகே தோட்டத்திற்கு இறங்கிச் செல்லும் படிகளும் உள்ளன. மேற்கேயுள்ள சாளரம் தெருவை நோக்கியுள்ளது.

அறையில் காஷ்மீரத்துக் கம்பளம் விரிக்கப்பட்டுள்ளது. மூலைகளிலுள்ள முக்காலிகளின் மீது கிரேக்க நாட்டு சிலைகள் அழகாக வைக்கப்பட்டுள்ளன. சுவற்றையொட்டி, சிகப்பு வெல்வெட் தைத்த சோபாக்கள் போடப்பட்டிருக் கின்றன. அவையின் நடுவே ஒரு பெரிய மேஜை இருக்கிறது. அதன்மீது பூவேலைப்பாடு செய்யப்பட்ட பித்தளை பூஜாடியில் ரோஜா மலர்க்கொத்து களும் சற்றே வாடிய சூரியகாந்தி மலர்களும் அழகாக வைக்கப் பட்டுள்ளன. தோட்டத்திலிருந்து வீசும் மென் காற்று, ஊதுவத்தியின் நறுமணத்தையும் சுமந்து கொண்டு மேற்குப் புறச் சாளரத்தினூடே தவழ்ந்து வருகிறது.

சுவர்களில் கவர்னர் வைசிராய் போன்ற துரைகளின் படங்கள் உள்ளன. உயரமான மேற்புறச் சுவற்றில் மகாராணி விக்டோரியாவின் நீண்ட அங்கியைத் தாங்கிச் செல்லும் அரசர்களின் வண்ண ஓவியம் காட்சி தருகிறது. அதற்குக் கீழே தங்கச் சட்டமிடப்பட்ட, 'சர்' பட்டத்தின் அத்தாட்சி பத்திரம் மின்சார விளக்கின் ஒளியில் தகதகக்கிறது.

மேல்புறத்துச் சாளரத்தின் அருகே ஒரு கட்டிலின் மீது எட்டு வயது பாலகன் தீபக் கடுஞ்சுரத்துடன் படுத்திருக்கிறான். அவனது நெற்றியைப் பாதிக்கு மேல் மறைத்துக் கொண்டு வெள்ளைத் துணி கட்டப்பட்டிருக்கிறது. துணியின்மீது ரத்தக்கறை படிந்துள்ளது. நடு நெற்றியிலும், காதுகளுக்கருகிலும் நீண்ட பொன்னிறக் கேசச் சுருள்கள் எட்டிப் பார்க்கின்றன. தீபக்கின் தாய் மைனா தீபக்கின் தலைமாட்டில் அவனது மூடிய விழிகளைப் பார்த்த வண்ணம், வாடிய முகத்துடன் அமர்ந்துள்ளாள். தீபக்கின் சகோதரி ஒன்பது வயதுச் சிறுமி உர்மி தலைமாட்டின் இன்னொருபுறம் நின்று தம்பியின் முகத்தை கண் இமையாமல் நோக்கிய வண்ணமிருக்கிறாள். அருகிலுள்ள நாற்காலிகளில் தீபக்கின் தந்தை அமல் தேராசரி, டாக்டர், போலீஸ் ஆபீசர், நந்தராய், மற்றும் சிலரும் கவலையுடன் அமர்ந்துள்ளனர்.

கையிலிருக்கும் கடிகாரத்தைச் சற்று நேரம் பார்த்துவிட்டு டாக்டர் எழுந்து நிற்கிறார். பின் தீபக்கின் தலைமாட்டை நோக்கிச் செல்லுகிறார்)

**டாக்டர்:** மைனாஜீ கொஞ்சம் தர்மா மீட்டரை எடுங்கள்.

(மைனா தீபக்கின் அருகிலிருந்த தர்மா மீட்டரை எடுத்து டாக்டரிடம்

கொடுக்கிறாள். பின்னர் வாடிய முகத்துடன் டாக்டரைப் பார்க்கிறாள். அனைவருடைய பார்வையும் டாக்டரின் மீதே நிலைத்திருக்கிறது)

**டாக்டர்:** காய்ச்சல் அதிகரித்துக் கொண்டே போகிறது. (டாக்டரின் முகத்தில் கவலைக் குறி படருகிறது)

**சர் அமல்:** (வரண்ட குரலில்) எவ்வளவு இருக்கிறது?

**டாக்டர்:** நூத்தி நாலு.

அனைவரும் (திடுக்கிட்டு) நாலா?

**டாக்டர்:** ஆமாம். ஐஸ்வைக்க வேண்டியது அவசியம். ஆனால் நெற்றியில் பட்டிருக்கும் காயம் ஆழமானது. அதனால் வைக்க முடியாது.

(சர் அமல் பெருமூச்செறிகின்றார். டாக்டர் குனிந்து தீபக்கின் கரத்தைத் தன் கையிலெடுத்துக் கொள்ளுகிறார்)

தீபக்! இப்பொ எப்படி கண்ணு இருக்குது? தலையை வலிக்குதா?

**மைனா:** (தீபக்கின் காதருகில் குனிந்து "தீபக்! டாக்டர் மாமா கேட்கிறார். இப்பொழுது எப்படி இருக்குது. தலைவலி தேவலையா?

**தீபக்:** (மெதுவாகக் கண்களைத் திறக்கின்றான்) அம்மா! தலையை ரொம்ப வலிக்கிறது அம்மா! ஆனால் நான் சரியாகத் தானிருக்கிறேன். (மீண்டும் கண்களை மூடிக் கொள்கிறான்) கண நேரத்திற்குப்பின்னர் மீண்டும் திறந்து) அம்மா! உர்மியைக் கூப்பிடேன்.

**மைனா:** உர்மி இங்கேதானிருக்கா கண்ணு! உன்னருகிலேயேதான் இருக்கா.

(உர்மியின் கையை அன்புடன் தன்னருகே இழுத்து, மடியில் வைத்திக் கொண்டு தலையைக் கோதிவிடுகிறாள்)

நீ கீழே விழுந்ததிலிருந்து இவளுடைய கண்ணீர் நிற்கவே யில்லை.

(உர்மிக்கு மீண்டும் அழுகை வருகிறது. மைனாவின் மார்பில் தனது முகத்தைப் புதைத்துக் கொண்டு அழுகிறாள்)

**தீபக்:** உர்மி, அழக்கூடாது. தேசியக் கொடியைப் பறக்க விட நான் மேல் மாடியிலே ஏறினேனா, திடீரென்னு அப்பா பார்த்துவிடப் போகிறாரே என்ற பயம் வந்தது. அந்த அவசரத்தில் விழுந்துவிட்டேன். இதில் உன்னுடைய தப்பு ஒண்ணுமே இல்லை.

**சர் அமல்:** தீபக்! தேசீயக் கொடியை மறந்திட்டு கொஞ்ச நேரம் அமைதியா இரேன்.

**நந்தராய்:** இந்த வினையெல்லாம் அந்த தேசீயக் கொடியால் வந்ததுதான். ஆயிரக்கணக்கானவர்களின் மண்டை உடைந்தும் மக்களுக்கு இன்னும் புத்தி வரவில்லை. தலைவர்களெல்லாம் ஜெயிலில் தூங்குகிறார்கள். அறிவில்லாதவர்கள் இந்தக் காரியத்தில் இறங்குகிறார்கள்.

**தீபக்:** அப்படிச் சொல்லாதீங்க, நந்த மாமா! நீங்க இப்படியெல்லாம் சொன்னால் என் நெற்றியிலிருக்கும் பாண்டேஜ் அவிழ்ந்து, காலையிலே மாதிரி ரத்தம் கொட்டுவது போலிருக்கிறது. (சில நிமிடங்களுக்குப் பிறகு

மீண்டும்) அம்மா! நான் விழுந்த போது அழவில்லை. இல்லையா அம்மா! நான் ஏன் அழ வேண்டும்? நான் தேசியக் கொடியை பறக்கவிடும் போதெல்லாம் விழுந்தேன்.

**சர் அமல்:** தீபக்! இன்னமும் நீ அந்த தேசீயக் கொடி பற்றி பேசுவதை நிறுத்தப் போகிறாயா இல்லையா? தப்புக் காரியம் செய்திருக்கே. ஆண்டவன் அதற்கான தண்டனையைக் கொடுத்துட்டார். நீ ஏன் இதைப் புரிஞ்சுக்க மாட்டேங்கிறே?

**தீபக்:** தேசியக் கொடியை நான் எப்படி மறப்பேன்? அப்பா! கண்களை மூடிக் கொண்டால் வானவெளி முழுவதும் வெள்ளை, பச்சை, சிவப்பு வண்ணப் பட்டைகளாகக் காட்சி தருகிறது. மினுமினுக்கும் தாரகைகள் சர்க்காவாகி விடுகின்றன. கண்களைத் திறந்தாலோ ஒவ்வொரு சுவற்றிலும் அதே மூவர்ணம்தான்.

**சர் அமல்:** (கடுமையான குரலில்) தீபக்...

**டாக்டர்:** சார், சற்றுப் பொறுமையாக இருங்க. நீங்கள் நினைப்பதைவிட இந்த கேசு சீரியஸானது. உங்களது பேச்சினால் தீபக் மேலும் உணர்ச்சி வசப்படுவான். தயவு செய்து...

**மைனா:** (கண்ணீரைத் துடைத்துக் கொண்டு) தீபக்— கொஞ்சம் தூங்கறியா?

**தீபக்:** அம்மா! கொரியாவில் என்னைப் போல ஆயிரக்கணக்கான சிறுவர்கள் கொடிக்காக உயிரைத் தியாகம் செய்தாங்களாம். எங்க ஆசிரியர் கூறினாரம்மா! அவர்களின் அப்பாமார் இது பற்றி பெருமைப்பட்டார்களாம். ஆனால் நம்ம அப்பா மட்டும் என்கிட்ட ஏன் கோபித்துக் கொள்கிறார்?

**மைனா:** (நெற்றியில் போடப்பட்டிருக்கும் துணிப்பட்டையை லேசாகத் தடவிய வண்ணம்) குழந்தாய்! தூங்கப்பா...தூங்கு.

**தீபக்:** (பேசிக் கொண்டே இருக்கிறான். விழிகள் பின்னும் கூர்மை பெறுகின்றன) உர்மி, மத்தியானம் அம்மா தூங்கிய பிறகு, நீ வந்து, சொன்னேல்லே; ராமாவின் மகன் சுந்தரை அப்பா அடித்து அறையிலே அடைத்து வைத்திருக்கார்னு சொன்னாயே, அவனை விட்டு விட்டாரா இல்லையா? (உர்மியின் கையைப் பிடிக்கிறான்)

**உர்மி:** (பயந்த குரலில்) அப்பா அவனை இன்னமும் விடவில்லை. ராமாவை இங்கிருந்து அனுப்பிட வேண்டியதுதான்னு அப்பா சொல்கிறார். இதைக்கேட்டதிலிருந்து ராமாவும் சுந்தரின் அம்மாவும் அழுதுக்கிட்டே இருக்காங்க.

**தீபக்:** (வருத்தத்துடன் விழிகளை மூடிக் கொள்கிறான்) அவனது விழிக் கடையிலிருந்து கண்ணீர் வழிகிறது) அப்பா! ஏனப்பா! அப்படிச் செய்றீங்க? எனக்கு இது பிடிக்கவே யில்லை. இதில் சுந்தரின் தப்பு ஒண்ணுமேயில்லை யப்பா! அவன் கொடியை வாங்கி வர போக மாட்டேன்னுதான் சொன்னான்.

நான் அவனுடன் 'டு' விட்டு விடுவேன், பேசமாட்டேன்னதும் பயந்துக்கிட்டே போனான். அதுக் கப்புறமும் அவன் என்னை எத்தனையோ தடவை தடுத்தான். இதில் அவனுடைய தப்பு எதுவுமேயில்லை. அப்பா! அவனை விட்டுடுங்க. ராமாவைப் போகச் சொல்லாதீங்க. இல்லேன்னா நான்...நானும். ..கூட (விம்மி விம்மி அழுகின்றான்)

**சர் அமல்:** (மனமுருகியராய் தீபக்கின் தலைமாட்டருகே சென்று, நெற்றியின் மீது கை வைக்கிறார்)

"கண்ணூ, நீ எப்படிச் சொல்றயோ, அப்படியே செய்கிறேன். இப்பொ நீ தூங்கு...தீபக்.

**தீபக்:** அப்பா— என்கிட்டே உட்கார்ந்துக்குங்க...அம்மா! நீ கூடத்தான் உர்மியும்தான். தூக்கம் வந்தால் கூட எழுந்திருக்கக் கூடாது. என்ன? இன்னிக்கு நீங்க எல்லாரும் என் கிட்டவே இருக்கணும். ஆமாம். என்கிட்டவே.

**மைனா:** நாங்களெல்லோரும் இருக்கோம் கண்ணூ. நீ நிம்மதியாய் தூங்கு.

**தீபக்:** அம்மா! எனக்குத் தூக்கமே வரலே. கண்ணை மூடினால் அப்பா கொடியை இறக்க வந்திருப்பது போல் கனவு வருது. திடுக்கிட்டு கண்ணைத்திறந்தால் அப்பாவை இங்கே பார்த்த பிறகுதான் நிம்மதியாக இருக்கிறது. உர்மி! போ! போய் பாரேன்! கொடி பறக்கிறதா இல்லையான்னு பார்த்திட்டு வாயேன்.

**சர் அமல்:** தீபக் கொடி பறக்கிறது. நீ பேசாமலிருக்கணும். சும்மா இரு பார்க்கலாம். எல்லாம் சரியாகி விடும்.

**தீபக்:** அப்பா! என்ன சொன்னீங்க. இடிந்து விழுதா? உங்க பங்களா இடிந்து விழுதா? இதற்கு என்ன காரணம் சொல்லட்டுமா? அப்பா! இதோ பாருங்க. நீங்க உங்க பங்களாவின் மீது தேசியக் கொடியைப் பறக்கவிடலை இல்லே? அதனால் தான் இப்படி. நீங்க கொடியைப் பறக்க விட்டால பங்களா அசையாமல் நிற்கும்.

**மைனா:** இனி தூங்கு தீபக்! இல்லேன்னா தலையை ரொம்பவும் வலிக்கும். (தீபக் கண்களை மூடிக் கொள்கிறான். சற்ற நேரம் அறையில் அமைதி நிலவுகிறது. அனைவரும் ஒருவரையொருவர் கவலை தோய்ந்த விழிகளால் பார்த்துக் கொள்கின்றனர். சிறிது நேரத்திற்குப் பின்னர் தீபக் கண் விழிக்கிறான்)

**தீபக்:** உரிமி! இதோ பார்! ஒன்பது மணிக்கு, சரியாக ஒன்பது மணிக்கு நான் உலாவச் செல்வேன். நீ என்னுடன் வர விரும்பினால் தயாராகி விடு. சுந்தரையும் தயாராக இருக்கச் சொல்லு. ஆமாம். (மீண்டும் விழிகள் தாமாகவே மூடிக் கொள்கின்றன. டாக்டர்—ஹரி—ஹரி என்று ஆண்டவனின் நாமங்களைக் கூறியவாறே வருத்தத்துடன் அறையில் இங்குமங்கும் நடக்கிறார்.

**சர் அமல்:** தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள இயலாதவராய் சாளரத்தினருகே சென்ற கண்களைத் துடைத்துக் கொள்கிறார். மைனாவின் கண்

களிலிருந்து கண்ணீர் ஆறாகப் பெருகுகிறது. தீபக் சற்றே கண்களைத் திறக்கிறான்) அம்மா! நீயும் வருவாய் அல்லவா? அப்பாவின் வேலையல்ல இது. நாமெல்லோரும் காட்டிற்குச் சென்று கொடியை நடுவோம். அங்கு யாராவது வந்தால் அவர்களுடன் போராடுவோம். என்ன? (மீண்டும் இமைகள் மூடிக் கொள்கின்றன. மூச்சு வேகமாய் வாங்குகிறது)

**நந்தராய்:** சார்—நான் வரட்டுமா? ஏதாவது வேலை யிருந்தால் போன் செய்யுங்க. உங்க வீட்டில் கொடி பறக்கிறது என்பதையாருக்கும் தெரியப் படுத்த மாட்டேன். கவலையில்லாமல் இருங்க. இந்த அறிவிலிகளை ஏமாற்று வது எனக்கு மிக நன்றாக...

**சர் அமல்:** (சட்டெனத் திரும்பி) நல்லது...நந்தராய்! நீங்கள் போகலாம். மிக்க நன்றி.

(நந்தராய் செல்லுகிறார். சற்று நேரம் ஒருவரும் பேசுவதில்லை. உர்மி கடவுளை வேண்டிக் கொண்டே சர் அமலையும், மைனாவையும் மாறி மாறி பார்த்த வண்ணமிருக்கிறாள். தூரத்திலிருந்து ஊர்வலத்தினர் பாடும் குரல் மெல்ல மெல்லத் தெளிவாகக் கேட்க ஆரம்பிக்கிறது)

*முப்பது கோடி தலைகள் உன்னை வணங்குகின்றன*
*பாரதநாட்டின் மணிக் கொடியே உன்னை*
*வணங்குகின்றன*
*லட்ச லட்சம் ஆசிகள் எமக்கு*
*பாரதத்தின் அறக் கொடியே!*

**தீபக்:** (திடுக்கிட்டு கண் விழிக்கிறான்) அம்மா! மாலை நேர தொண்டர் அணி புறப்பட்டு விட்டது போலிருக்கிறது. என்னை வராண்டா பக்கம் அழைச்சிட்டுப் போயேன். அம்மா! சீக்கிரம்! நான் எல்லோரையம் பார்க்கணும்.

**மைனா:** குழந்தாய். உனக்கு சிரமமாக இருக்குமடா! இங்கேயே தூங்கு. நாளைக்குப் பார்க்கலாம். நாளைக்குக் கூட ஊர்வலம் வரும்.

**தீபக்:** அம்மா! இன்னிக்கு நீ என்னைத் தடுக்கவே கூடாது. உனக்கு எப்படி நான் புரியவைக் கட்டும்? என்னை வராண்டா பக்கம் அழைச்சிட்டுப் போயேன்.

**டாக்டர்:** அவன் விருப்பப்படி செய்யுங்க. அவன் உணர்ச்சி வசப் படக்கூடாது. அவனுக்கு ஆவேச மூட்டாதீர்கள்.

(எல்லாருமாகக் கட்டிலைப் பிடித்து தீபக்கை சாளரத்தினருகே எடுத்துச் செல்லுகின்றனர். மைனாவின் உதவியுடன் தீபக் உட்கார்ந்து கொள்கிறான். கீழேயிருந்து வரும் தீவர்த்திகளின் ஒளியில், பாடல்களைக் கேட்டு அவன் பரவசமடைகின்றான். அவன் முகம் பிரகாசமடைகின்றது.

(ஆண்களும் பெண்களும் உரத்த குரலில் பாடுகின்றனர்)

*விண்ணிலே பறக்குது கொடி*
*இமயமெனும் உயர்கம்பத்திலே*

*உலகக் கலாசாரத்தின் இருப்பிடத்திலே*
*கொடி பறக்குது விண்ணிலே.*

**தீபக்:** (மைனாவின் விழிகளைச் சந்திக்க தனது பார்வையை உயர்த்து கிறான்) அம்மா! எத்தனை இனிமையான பாடல்? உனக்குத் தெரியுமா? தெரிந்தால் பாடேன்.

(துள்ளி எழுந்து ஒரு முத்தம் கொடுக்கிறான். கீழேயிருந்து வரும் மக்களின் குரலோடு மைனாவின் குரலும் சேர்ந்து கொள்ளுகின்றது)

*காந்தி அண்ணல் உயர்த்திய*
*தூய்மையான கொடி இது*
*வெள்ளை நிறக் கொடி இது*
*பகத் சிங்கின் குருதிபட்டு*
*சிவப்பு நிறம் படிந்ததே*
*அமைதி தந்த பச்சை வண்ணம்*
*கலந்து பறக்கும் கொடி இது.*
*பாரதத்தின் அறக்கொடி!*

(கீழே சிறுவர்களின் அணியொன்று, 'தீபக்கிற்கு ஜெய்' என்ற கோஷ மிடுகிறது. அனைவரும் மேலே செல்லுகின்றனர்)

**தீபக்:** அம்மா! அவர்கள் யாருக்கு ஜெய கோஷமிட்டனர்?

**மைனா:** தீபக்கிற்கு.

**தீபக்:** யாரது அந்த தீபக்?

**மைனா:** நீதான் குழந்தாய்! இன்னிக்கு நீ கொடியைப் பறக்க விடறப்ப உன் மண்டையை உடைச்சிட்டே! உன்னையே பலியிட்டுக் கொண்டாய் அல்லவா? அதுக்குத்தான் எல்லாரும் உன்னை வாழ்த்தி ஜெய கோஷம் செய்யறாங்க.

**தீபக்:** அம்மா! கொடியைப் பறக்க விட்டா அதுக்கு இப்படி ஜெய கோஷமிடுவாங்களா? அப்போ நீயும் கொடியைப் பறக்கவிடேன். நான், உர்மி, சுந்தர், மூணுபேரும் உனக்கு ஜெய கோஷம் போடறோம்.

(மைனா தீபக்கை முத்தமிடுகிறாள். தீபக் சற்று நேரம் வானத்தைப் பார்க்கிறான்)

அம்மா! பார்த்தாயா! நட்சத்திரங்கள் கண் சிமிட்டுகின்றன. இன்னிக்கு ஒன்பது மணிக்கு நான் உலாவப் போகணும். நட்சத்திரங்கள் இதை எனக்கு நினைவு படுத்துது. நீயும் வருவாய் இல்லே!

**மைனா:** ஆமாம் தீபக்.

(தீபக் மீண்டும் வானத்தையே உற்றுப் பார்க்கிறான்)

**தீபக்:** அம்மா, வானத்தில் நட்சத்திரங்கள் உதிக்குது. ஆனால் அறைக் குள்ளே ஏன் உதிப்பதில்லை? அம்மா! பங்களாவிலே கொடி ஏற்றினால் அறைக்குள்ளே கூட நட்சத்திரங்கள் உதிக்குமல்லவா?

(மைனாவின் விழிகளிலிருந்து இரு சொட்டுக் கண்ணீர் உதிர்ந்து தீபக்கின் சுருண்ட கேசத்தில் படிகின்றது)

அம்மா! எனக்கு தூக்கம் வருகிறது. நான் தூங்கட்டுமா? அம்மா! நான் தூங்கின பிறகும் கூட நீ என்கிட்டேயிருந்து எழுந்திருக்கக் கூடாது. சரியாக ஒன்பது மணிக்கு என்னை எழுப்பணும் சரியா? நீ, உர்மி, சுந்தர், எல்லோரும் தயாராக இருங்க.

(மைனா தீபக்கை உறங்க வைக்கிறாள். சர் அமல் அருகே வந்து அவனது நெற்றியை மெதுவாக வருடுகிறார். அவரது கண்களி லிருந்தும் கண்ணீர் பெருகுகின்றது. தீபக் மீண்டும் விழித்துக் கொள்கிறான்)

**தீபக்:** அம்மா! மத்தியானம் உர்மி, பாண்டேஜ் கட்டியதால் என் முகம் அழகாக இருக்குன்னு சொன்னா. கண்ணாடியை எடுத்துவாயேன். பார்த்துக் கறேன்.

(சர் அமல் கண்ணாடியை எடுத்து வந்து தீபக்கின் முகத்திற்கு எதிரே வைக்கிறாா. தீபக் கண்ணாடியில் தன்னைப் பார்த்துக் கொள்கிறான். அவனது விழிகள் மின்னுகின்றன)

அம்மா! இந்த பாண்டேஜ்கூட தேசீயக் கொடி மாதிரித்தான் தோன்றுகிறது. என் ரத்தத்தின் சிவப்பு, பாண்டேஜ் துணியின் வெண்மை, பச்சை நிறத் திற்குப்பதிலாக என் தலைமுடி. வந்து...சர்க்கா வேண்டுமென்றும் எத்தனை தரம் சொன்னேன். அப்பா கொண்டுவந்தே கொடுக்கவில்லை. (கோபத் துடன்) எடுத்துக் கொண்டு போ. உன் கண்ணாடியை. உன்னுடைய கண்ணாடியை நான் பார்க்க வேண்டியதில்லை.

(சர் அமல் கண்ணாடியை எடுத்துச் செல்லுகிறார். சிறிது நேரம் நிசப்தம் நிலவுகிறது. தீபக் கண்களைத் திறக்கின்றான்)

அம்மா! நான் உலாவப்போகும் போது, நீ காந்திஜிக்கு தீபக் வெளியே சென்றிருக்கிறான் என்று ஜெயிலுக்கு கடிதம் எழுது. தீபக் எங்கே போனாலும் கொடி ஏற்றிக் கொண்டிருப்பான்னு எழுது.

**மைனா:** (முத்தமிட்டவாறே) ஆகட்டுமடா குழந்தாய். கட்டாயம் எழுது கிறேன். ஆனால் இப்போ நீ தூங்கு.

**தீபக்:** சரி, தூங்குகிறேன். சரியாய் ஒன்பது மணிக்கு. (தீபக் கண்களை மூடிக் கொள்கிறான். எங்கும் நிசப்தம் விரவி நிற்கிறது. தீபக்கின் இதய துடிப்பின் சீரான போக்கு தடைப்படுகிறது.

**சர் அமல்:** (அருகே வந்து) தூங்கிட்டான் போலிருக்கே!

**மைனா:** ஆமாம். ஆனால்... (கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாகப் பெருகுகிறது)

**டாக்டர்:** மைனாஜீ! கடவுளை நம்புங்கள். படைத்த கடவுள்தான் காப்பாற்றுவார்.

**மைனா:** டாக்டர்! உங்களுக்கு மகன் இருக்கிறானா?

**டாக்டர்:** இல்லையம்மா.

**மைனா:** சும்மாதான் கேட்டேன்.

(டாக்டர் அறையைச் சுற்றிச் சுற்றி வருகிறார். சர் அமல் தீபக்கின் தலை மாட்டினருகே கீழே அமர்ந்திருக்கிறார்) இதெல்லாம் உங்க பெருமைதான்!

**சர் அமல்:** மைனா? இப்படியெல்லாம் சொல்ல உனக்கு உரிமையிருக்கிறது. ஆனால் என் மனநிலையை நீ அறிந்திருந்தால்...

**மைனா:** (கண்ணீரைத் துடைத்தவாறு) எனக்கு மனசுன்னு ஒண்ணு இப்பொ இல்லவே இல்லை.

**சர் அமல்:** சரியாத்தான் இருக்கும் மைனா!

**மைனா:** (அழுகிறாள்) சபாஷ் தந்தையே! எந்த அளவுக்கு பற்றற்ற தன்மை?

**சர் அமல்:** (மன எழுச்சியைக் கட்டுப் படுத்திய வண்ணம்) நான் ஆண் மகன். மைனா!

**மைனா:** நான் தாய் அமல். தீபக் இல்லாமல் எனக்கு... (கடிகாரத்தில் ஒன்பது மணி அடிக்கிறது. தீபக் திடுக்கிட்டு கண் விழிக்கிறான். யாவரும் ஸ்தம்பித்து நிற்கின்றனர்)

**தீபக்:** அம்மா! அம்மா! ஒன்பது மணி அடித்தது இல்லையா? புறப்படு. நான் இப்பொழுது வெளியே உலாவ போகணும். ஆனால்— அம்மா நான் என் எண்ணத்தை மாத்திட்டேன். நான் தனியாகப் போறதுன்னு முடிவு பண்ணிட்டேன். இந்த வழியிலே தனியாகப் போவதுதான். சரி அப்பா! உர்மி! நான் வருகிறேன். அம்மா! இரவு திரும்பி வர நேரமானால் என்னை எதிர்பார்த்து காத்திராதே. நல்லது நான் வருகிறேன்! (சற்று நேரத்திற்குப் பின்னர்) அம்மா! காந்திஜிக்கு கடிதம் எழுத மறந்துவிடாதே!

(தீபக் கண்களை மூடிக் கொள்கிறான்)

**மைனா:** தீபக்— என்மகனே! மகனே!

(அவளது குரல் உடைகிறது. தீபக்கின் உடல் சலனமற்றதாகி விடுகிறது. உர்மி அழ ஆரம்பிக்கிறாள்)

**டாக்டர்:** (அருகில் வந்து நாடியைப் பார்த்தவாறு) தீபக் போய்விட்டான்.

**சர் அமல்:** (உலகமே இருண்டுவிட்டதே! இருள்—இருள். எங்கும் இருள். ஓ. என்னால் சகிக்க முடியவில்லையே!

(இரு கைகளாலும் தலையைப் பிடித்துக் கொண்டு சாளரத்தில் மோதிக் கொள்கிறார். மைனாவின் அலறல் அறை எங்கும் எதிரொலிக்கின்றது. மென்காற்றின அலைகளில் தீபக்கின் சுருண்ட முடி சிரித்த முகத்திலே தவழ்ந்து விளையாடுகிறது)

**சர் அமல்:** (டெலிபோன் செய்கிறார்) எஸ், ஒன்ஃபோர், நாட், சேவன் (சற்று நேரத்திற்குப் பின்னர்)

ஆம்—காங்கிரஸ் ஹவுஸ்? நீங்கள் யார்?

(கேட்கிறார். இதன் பின்) தொண்டரா? கொஞ்சம் சிசிர்குமாரைக் கூப்பிடுங்கள்.

(காது கொடுத்துக் கேட்கிறார்)

போராட்டக் குழுவின் கூட்டம் நடந்து கொண்டிருக்கிறதா? அதனால் அவர் வர இயலவில்லையா? அவர் எப்படி வராமலிருப்பார்! சர் அமல் தேராசரி ஒரு முக்கியமான வேலையாக இரண்டு நிமிடம் வரச் சொன்னார்னு சொல்லு. சீக்கிரம்

டெலிபோன் ரிசீவரைக் கீழே வைத்துவிட்டு நடக்க ஆரம்பிக்கிறார். சர் பட்டத்தின், சட்டமிடப்பட்ட அத்தாட்சிப் பத்திரத்தினருகே சென்று அதை ஒரு குத்து விடுகிறார். படம் உடைந்து தூள் தூளாகின்றது. கையில் ரத்தம் பீறிடுகிறது. ஏதோ வெறி கொண்டவர் போல் ரத்தம் வழியும் கரத்துடன் தீபக்கின் கட்டிலினருகே சென்று அவனது பாதத்தை தொட்டு வணங்குகிறார். பின்னர் அந்தக் கால்களிலே முகத்தைப் பதித்துக் கொண்டு விம்மி விம்மி அழுகின்றார்.

மகனே! நீ உன் தந்தைக்கு இன்று புதிய பிறவி கொடுத்து விட்டாயடா!

(மீண்டும் டெலிபோன் அருகே சென்று ஒரு கையினால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு மறு கையினால் டெலிபோன் ரீசீவரை எடுக்கிறார்)

எஸ்—யார் பேசுவது?

(கேட்கிறார்)

சிசிர்குமாரா? சரி, நாளை ஊர்வலத்திற்கு சர் அமல் தேராசரி தலைமை தாங்கி நடத்திச் செல்வார் என்று ஊர்பூராவும் அறிவிச் சுடுங்க. புரிஞ்சுதா? நன்றி!

(ரிசீவரை சத்தத்துடன் கீழே வைத்து விட்டு அடுத்த அறையை நோக்கி விரைகிறார்)

திரை விழுகிறது

# வரலாற்றின் ஒரு ஏடு

## குலாப் தாஸ் ப்ரோக்கர்

**பாத்திரங்கள்**

ராவ் சாகப் மேஹ்தா
வசந்த்
சரளா
காவலாளி

(நேரம் 1943ஆம் ஆண்டின் ஒரு பிற்பகல் நேரம்)

இடம்: பம்பாய் போலீஸ் அலுவலகத்தின் சி.ஐ.டி, பிரிவில் ராவ் சாகப் மேஹ்தாவின் அலுவலக அறை)

அறையில் அலுவலகத்திற்குரிய மேஜை நாற்காலி முதலியன போடப் பட்டிருக்கின்றன. திரை விலகும்போது ராவ் சாகப் மேஹ்தா மிகுந்த ஆவலுடன் யார் வரவையோ எதிர்பார்த்தவராய் அறையில் உலாவிக் கொண்டிருக்கிறார். வயது அறுபது ஆனாலும்கூட பார்ப்பதற்கு 45-50 வயது தான் மதிக்கலாம். சிறைக்காப்பாளன், கைதி வசந்த் சுக்லாவை அழைத்துக் கொண்டு அறையில் நுழைகின்றார். இருபத்தி நாலு, இருபத்தி ஐந்து வயதுள்ள இந்த ஒளி நிறைந்த இளைஞனைக் கண்டதுமே...)

***ராவ் சாகப் மேஹ்தா:*** (இனிமையாக) ஓ-கோ! வாங்க மிஸ்டர் சுக்லா! வாங்க. உட்காருங்க. (காவலாளியிடம்) இனி நீ போகலாம். வெளியே கவனமாக இரு.

**காவலாளி:** (சலாம் செய்து) நல்லது அய்யா. (போகிறான்)

***ராவ் சாகப் மேஹ்தா:*** (அதே இனிமையுடன்) மிஸ்டர் சுக்லா! நீங்க இன்னும் உட்காரலே? இந்த நாற்காலியில் உட்காரலாம். (ஒரு நிமிடத்திற்குப் பிறகு) எஸ். எல்லாம் சரியா இருக்குதா? சிரமம் ஒண்ணும் இல்லையே?

**வசந்த்:** இல்லை இல்லை. சிரமமென்ன? எல்லாம் சரியாக இருக்குது ராவ் சாகப்.

***ராவ் சாகப் மேஹ்தா:*** நல்லது. இந்தப் போலீஸ் தொழில் இருக்கு பாருங்க இதிலே வந்து சேர்ந்தா, மென்மை யான இயல்புடையவன் கூட கடுமையானவ னாக மாறிடறான். அப்புறம் இவங்க ரொம்ப சாமான்யமானவங்க. இவங்களைப் பொறுத்த வரையில் (சிரித்துக் கொண்டே) கொலைகாரனும் உங்களைப் போன்ற புரட்சிவாதிகளும் ஒண்ணுதான்.

**வசந்த்:** ஆம். அதுசரிதான்.

***ராவ் சாகப் மேஹ்தா:*** ஆனால் நான் இவங்களுக்கு தனியாக என்ன உத்தரவு போட்டிருக்கிறேன் தெரியுமா? அரசியல் கைதிகள் யாராக இருந் தாலும் சரி, அது சத்தியாகிரகி அறப்போராட்டம் செய்பவர்களோ அகிம்சா வாதிகளோ அல்லது தீவிர என்ன சொல்வாங்க? எனக்கு வார்த்தையே கிடைக்கவில்லையே? உங்களைப் போன்ற புரட்சிக்காரர்களோ அதாவது இம்சை அகிம்சையைப் பற்றிக் கவலைப்படாதவங்க இந்த மாதிரி யாராக இருந்தாலும் அவங்களுக்கு கஷ்டம் கொடுத்தீங்கன்னா அடுத்த நாளே உங்க வேலை போயிடும் அப்படீன்னு மிரட்டி வைச்சிருக்கேன். என்ன ஆனாலும் (குரலில் இன்னமும் இனிமையை வரவழைத்துக் கொண்டு, மெதுவாக குரலில்)

—பாரத மாதாவுக்கு வேலை செய்ய நாட்டு விடுதலைக்காகத் தானே இதெல்லாம் செய்யறீங்க இல்லையா?

**வசந்த்:** (சிரித்துக் கொண்டே) ஓ-கோ, ராவ் சாகப்! 42-ம்வருஷத்துக் காற்று உங்க மேலேயும் அடிச்சிருக்கு போலிருக்கிறதே?

**ராவ் சாகப் மேஹ்தா:** (தணிந்த குரலில்) ஏன் அடிக்காது? நான் பாரத நாட்டுக்காரன். (சற்று உரக்கவே) ஆனால் உங்கள் இடத்தில் நானிருந்தால் உங்களைப் போல் கூட்டாளிகளை ஒரு பொழுதும்தேடி இருக்க முடியாது.

**வசந்த்:** உங்களுக்கு இது கூட தெரிஞ்சு போச்சா ராவ் சாகப்? (வியப்புடன்) அதாவது எனக்கு கூட்டாளிகள் இருக்காங்கன்னு...

**ராவ் சாகப் மேஹ்தா:** நீங்கள் ஆண் மகன் வீரபுருஷன். வசந்த்! இதனால் இந்தக் கூட்டாளிகளை தோழர்களை நீங்க மறைக்கப் பார்க்கிறீங்க. என்பது சரிதான். ஆனால் (கபடமாக) எதிராளியும் இப்படிப்பட்ட ஆண் மகனாக இருக்கணும் இல்லையா?

**வசந்த்:** அப்பமென்னா?

**ராவ் சாகப் மேஹ்தா:** அப்பமென்னா என்ன? அந்த நரேந்திரனுக்கு நாலு அடி விழுந்ததும் எல்லா விஷயத்தையும் கக்கி விட்டான்.

**வசந்த்:** (தெரியாதவன் போல்) எந்த நரேந்திரன்?

**ராவ் சாகப் மேஹ்தா:** (சிரித்துவிட்டு) நீங்க இப்படி ஒண்ணும் தெரியாதவர் போல் பாவிக்கிறீங்க. அந்த நரேந்திரன் தன் வார்த்தைகளில் சிக்கிட்டான். இனி அவன் தப்ப முடியாது வசந்த். இதோ பாருங்க! இது என்ன சொல்கிறதுன்னு கேளுங்க. நான் டைரியிலிருந்து படித்துக் காட்டுறேன். (இழுப்பறையைத் திறந்து டைரியை எடுக்கிறார். அதன் பக்கங்களைப் புரட்டியவாறு! எஸ்— இதோ பாருங்கள. (படிக்கிறார்) வேண்டாம். பேரைச் சொல்ல மாட்டேன். ரகசிய உத்தரவுகளின்படி நாங்கள் செயலாற்றுகிறோம். அவன் அடிக்கடி லோகியா, அச்சுத் போன்றவர்களைச் சந்திக்கிறான். மேல் உத்தரவின்படி வேலை செய்றான். ஒருநாள்... ஆனால் வசந்த் இதை முழுவதும் உங்களுக்கு எப்படிப் படித்துக் காட்ட முடியும்? இந்த ஒருவன் மட்டுமல்ல, பாத்தியே பிருந்தாவன் எல்லோருமே எல்லாவற்றையும் ஒப்புக் கொண்டுட்டாங்க உங்களுக்கு இன்னமும் நல்ல தோழர்கள் கிடைச்சிருக்கணும்.

**வசந்த்:** (ஓரக் கண்களால் பார்த்த வண்ணம்) உங்களது அனுதாபத்திற்கு நன்றி ராவ் சாகப்.

**ராவ் சாகப் மேஹ்தா:** நீங்க கிண்டலாகச் சொன்னாக் கூட உங்க பேரிலே எனக்கு அனுதாபம் உண்டு மிஸ்டர் வசந்த்! உங்களுக்கு சின்ன வயசு. ஒருவேளை இந்த விஷயம் உங்களுக்குத் தெரிந்திருக்க நியாயம் இல்லை! நானும் உங்க அம்மாவும் குழந்தைகளாக இருக்கும் போது அம்ரேலியில் ஒண்ணாச் சேர்ந்து விளையாடினவங்க. பிறகு அவளுக்கு வெளியூரிலே கல்யாணமாச்சு. நானும் போலீஸ் துறையில் அகப்பட்டுக் கொண்டேன். அதனால் தொடர்பு விட்டுப் போசசு. பாவம் அவளும் காலமாகிவிட்டாள்.

உங்களுக்கு இதெல்லாம் எப்படித் தெரிஞ்சிருக்க முடியும்? ஆனால் இந்த காகிதங் களிலிருந்து நீங்க யார்ன்னு விவரங்கள் கிடைச்சதுமே, நானே வலிய உங்கள் வழக்கை எடுத்துக்கிட்டேன்.

**வசந்த்:** ராவ் சாகப்! ஒரு வேண்டு கோள்.

**ராவ் சாகப் மேஹ்தா:** சொல்லுங்க. எதை வேணுமானாலும் தாராளமா சொல்லலாம். கொஞ்சம் கூட தயக்கமே வேண்டியதில்லை. இங்கே நம்ம பேச்சும் நம்மிருவரைத் தவிர மூணாவது ஆள் யாருமே...

**வசந்த்:** (புன் முறுவலுடன்) நன்றி. ஆனால் அப்படி விசேஷமாகக் கூற எதுவுமில்லை.

**ராவ் சாகப் மேஹ்தா:** என்ன சொல்லணுமோ, சொல்லலாம்.

**வசந்த்:** நீங்க பெரியவர், வேண்டப்பட்டவராகவும் ஆயிட்டீங்க. உங்க ளிடம் என்ன சங்கோஜம். இருந்தாலும் ஒரு விஷயம் சொல்லறேன். இங்கே நாம் உறவினர்கள் போல் சந்திக்க வில்லை. நீங்க அரசாங்க அதிகாரி. நான் அரசின் நோக்கில் குற்றவாளி. உங்களுடைய தனிப்பட்ட அன்பை நம்மிரு வருடைய கடமைகளுக்கு இடையே கொண்டு வராமலிருப்பது நல்லது. நீங்க உங்கள் கடமையைச் செய்யுங்க. நான் என் மனதிற்கு எது சரின்னு படுதோ அதைச் செய்கிறேன்.

**ராவ் சாகப் மேஹ்தா:** சபாஷ்! மிஸ்டர் வசந்த்! உங்களைப் பற்றி நான் கேள்விப்பட்ட மாதிரியேதான் இருக்கீங்க. ஆனால் இந்த விஷயம் சற்று தீவிரமானது. இதில் சொந்த உறவைக் கொண்டு வராமலிருக்க முடியாது.

**வசந்த்:** என்னைப் பொறுத்த வரையில் எதுவும் தீவிர மானதோ, கெடுபிடி யானதோ அல்ல. ஆகஸ்ட் அறிக்கை வெளியாகி விட்டது. மகாத்மாஜியை முன்னறிவிப்பின்றி அரசு கைது செய்துவிட்டது. நாட்டில் சத்தியாகிரகம் தொடங்கி விட்டது. என்னைப் போன்ற இளைஞர்கள் இதில் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். எங்க கொள்கைப்படி நாங்க அரசாங்கத்தை எதிர்த் தோம். அதன் பலனாக இதோ இங்கே நான் உங்க முன்னால உட்கார்ந்திருக் கிறேன். ஆயிரக்கணக்கானவர்கள் இச்செயல்களைச் செய்தனர். ஆயிரக் கணக்கானவர்கள் பிடிபட்டனர். ஆயிரக்கணக்கானவர்கள் தண்டனையை அனுபவித்துக் கொண்டிருக்கின்றனர். நானும் அனுபவிப்பேன். இதில் சீரிய சான விஷயம் என்ன இருக்கிறது?

**ராவ் சாகப் மேஹ்தா:** இதில் சீரியசான விஷயம் எதுவுமில்லைன்னு நீங்க சொல்றீங்க மிஸ்டர் சுக்லா! ஆனால் உங்களுக்கும், எனக்கும் இது நல்லாவே தெரியும். நீங்க சொல்றது போல இது அவ்வளவு சுலபமானது இல்லே.

**வசந்த்:** இல்லை. எனக்கு இது தெரியாது!

**ராவ் சாகப் மேஹ்தா:** முழுதிட்டத்தையும் தீட்டி செயலாற்றிய ஆளுக்கு இது கூடவா தெரியாது?

**வசந்த்:** எனக்குத் தெரிஞ்சதை உங்ககிட்டச் சொல்லிட்டேன். ஆமாம்.

மகாத்மாஜீயின் உத்தரவின்படி கூட இந்தத் திட்டத்தை ரகசியமா வைச்சுக்க கூடாதுதான்.

**ராவ் சாகப் மேஹ்தா:** (கோபத்துடன்) வெடிகுண்டு தயாரித்து குற்றமற்ற போர்வீரர்கள். பொது மக்களின் உயிர்களுக்கு விடுதலை கொடுக்க நேர்ந்தது இல்லையா மிஸ்டர் வசந்த்?

**வசந்த்:** ஒ! நீங்க அந்த வெடிகுண்டு வெடித்ததைப் பற்றிக் கூறுகிறீர்களா?

**ராவ் சாகப் மேஹ்தா:** ஏன்? இதைப் பத்தி உங்களுக்கு எதுவுமே தெரியாதா?

**வசந்த்:** எனக்கெப்படி தெரிஞ்சிருக்க முடியும்?

**ராவ் சாகப் மேஹ்தா:** சொல்லட்டுமா? 1942 டிசம்பர் 22ம் தேதி குண்டு வீசப் பட்டது. பத்து சிப்பாய்கள் கொல்லப் பட்டனர். இன்னும் பத்துப்பன்னி ரெண்டு சிப்பாய்களுக்கும் காயம்பட்டது. இருபத்தியோராம் தேதி பாத்தேயின் இல்லத்தில் வட்டம் கூடியது. இதில் துஷார் எப்படி குண்டுகளை வீசணும் பிருந்தாவன் எங்கு நின்னுக்கிட்டு கண்காணிக்கணும், எச்சரிகை செய்ய எந்த மாதிரியான சமிக்ஞைகள் தரணும் என்பதெல்லாம் முடிவாகிறது. இதற்கு முன்னாலே இருபதாம் தேதிக்குள் பாத்தே மூலமாக குறிப்பிட்ட இடத்தில் குண்டுகள் தயாரிக்கப்பட்டன. இந்த ஏற்பாடுகளின் ஆரம்பத்தில் கேசவனின் கை உடைந்து போகிறது. இக்குழுவிலுள்ள டாக்டர் தேசாய் அவனுக்கு வைத்தியம் செய்கிறார். பதினைந்தாம் தேதி இரவு ஒன்பது மணிக்கு...

**வசந்த்:** (கேலியாக) ஏதோ பள்ளிப் பாடத்தை மனப்பாடம் செய்து வைச்சிருப்பது போலல்லவா ஒப்புவிக்கிறீங்கள்,

**ராவ் சாகப் மேஹ்தா:** (சிரித்துக் கொண்டு) உண்மையில், இது முழுவதும் எனக்கு மனப்பாடமே ஆகிவிட்டது.மிஸ்டர் வசந்த் (தீவிரமாக) அடிக்கடி நான் அதை மனப்பாடம் செய்ய வேண்டிருந்தது. இப்படி மனப்பாடம் செய் விச்சவர்களோட முகங்கள் வெவ்வேறா இருந்தாலும் பாடம் என்னவோ ஒண்ணுதான். பாத்தியே, பிருந்தாவன், துஷார், நரேந்தின், எத்தனை பெயர் களைச் சொல்ல?

**வசந்த்:** உங்களுக்கு ரொம்ப நல்ல ஆசிரியர்கள் கிடைச் சிருக்காங்க!

**ராவ் சாகப் மேஹ்தா:** ஆமாம். இது உண்மைதான். அதனால்தான் அவங்க குருவைப் பற்றி அறியும் ஆவல் எனக்கேற்பட்டது. எல்லோரும் ஒரே குரலாக குருவைப் பற்றிப் புகழச் சளைக்கவில்லை.

**வசந்த்:** எல்லோரையும் தோற்கடித்துவிட்டவன், மிகவும் சக்திவாய்ந்த வனாகத் தானிருப்பான்.

**ராவ் சாகப் மேஹ்தா:** ஆமாம். அதனால்தான்நான் அவனைத் தேடு கிறேன்.

**வசந்த்:** அப்படீன்னா அவன் பாக்கியசாலிதான்! ராவ் சாகப்?

**ராவ் சாகப் மேஹ்தா:** அவனை பாக்கியசாலின்னு நான் சொல்ல மாட்டேன். பாக்கியசாலியாக இருந்தா அவனுக்கு இப்படிப்பட்ட கோழைகள் தோழர்களாகக் கிடைச்சிருக்கமாட்டாங்க. ஆனால் நிச்சயமா அவன் ரொம்ப கெட்டிக்காரன். அற்புதமான திறமைசாலி. மத்தவங்க எல்லோரும் உடல் உறுப்புகள்தான். இந்த குருதான் மூளைன்னு எல்லாரும் சொல்றாங்க. இந்த மதி நட்பத்தைப் பற்றி புகழ்ந்து பாராட்டுவதில் எவரும் சலிப்பதேயில்லை.

**வசந்த்:** (அலட்சியமாக) ஓகோ! அப்படியா?

**ராவ் சாகப் மேஹ்தா:** இதோ பாருங்க! மிஸ்டர் வசந்த்! இந்தச் சம்ப வத்தைப் பொறுத்த வரையில், அணு அணுவாக எல்லாத்தையும் அறிவேன் என்பதை நீங்க தெரிஞ்சிருப்பீங்க. யார் என்ன பேசினாங்கள்; என்னிக்கு யார், என்ன வேஷம் போட்டுக்கிட்டாங்க இந்த விவரமெல்லாம் என்னிடம் இருக்கு. இதனால் இந்த விஷயம் பற்றி நாமிருவரும் வெளிப்படையாக பேசிக்கலாம். உயிரையே தியாகம் செய்யத்தயாரா இருக்கும் தோழர்களை நீங்க காப்பாற்ற முடியாது. ஆனால் உங்க உயிரையாவது...

**வசந்த்:** (கம்பீரமாக) ராவ் சாகப் அவர்களே! இந்த மாதிரி செயல்லே ஈடுபட்டுட்டு ஒரு மனிதன் தன்னுயிரைக் காப்பாத்திக்க ஒடிப் போவானா?

**ராவ் சாகப் மேஹ்தா:** (உரக்கச் சிரித்தவாறே) என்ன சொல்றீங்க மிஸ்டர் சுக்லா! அப்படித்தானே நடக்குது. இல்லாட்டி பாத்தியே, பிருந்தாவன் இவங் கள்ளாம் ஏன் ஒடுறாங்க?

(தீவிரமான பாவத்துடன்) இதோ பாருங்க! உங்கள் உயிரைக் காப்பாத்திக் கொள்ளுங்கன்னு நான் ஆசை காட்டலே. அப்படி செய்வது எனக்கோ, உங்களுக்கோ அழகில்லே. இந்த ஆண்மையில்லாத கோழைகளுடன் உங்களைப் போன்ற ஆண்மையுள்ள வரைச் சேர்த்துப் பார்க்க நான் விரும்ப வில்லை. ஒரே ஒரு விஷயத்தில்தான் உங்க உதவி தேவை.

**வசந்த்:** (சிரித்துக் கொண்டு) பரிகாசம் செய்றீங்களா ராவ் சாகப்? நான் ஒரு சாதாரணக் கைதி, இந்த இலாக்காவின் சர்வ வல்லமை பொருந்திய அதிகாரி. அரசின் பிரதிநிதி.நான் உங்களுக்கு என்ன உதவி செய்ய முடியும்?

**ராவ் சாகப்மேஹ்தா:** இந்த விஷயத்திற்கும், குண்டுவீச்சு, புரட்சிக்காரர் களுக்கும் எந்த விதமான சம்பந்தமும் இல்லை.இந்த விஷயத்தில் நான் உங்களிடம் எதுவும் சொல்ல விரும்பவில்லைன்னு சொல்லி யிருந்தேன் இல்லே? சத்தியாகிரகத்தைப் பற்றித்தான் உன்னிடம் நான் பேசவேண்டி யிருக்கிறது.

**வசந்த்:** ஓ! பேசுங்களேன்.

**ராவ் சாகப் மேஹ்தா:** நீ இவ்வளவு சிறிய வயதிலேயே எவ்வளவு தூரம் முன்னேறிட்டே! உன்னைப் பார்க்கும் போது எனக்கு எனது இளம்பருவத்தின் கனவுகள், உணர்ச்சிகள் நினைவுக்கு வருகிறது. அந்தப் பொன்னான கனவுகள் எங்கே இந்த போலீஸ் உத்தியாகத்தின் தொந்தரவுகளெங்கே, தேசத் தலைவர்களுடன் கொண்ட நெருங்கிய தொடர்பினால் நீ ஆனந்தமாக

இருக்கிறே, இங்கே நாங்க இடைவிடாமல் தேசத் துரோகம் செய்து கொண்டே இருக்க வேண்டியிருக்கிறது.

**வசந்த்:** (விழிப்படைந்தவனாய்) என்னைப் போன்ற சாதாரணத் தொண்டன் தேசத் தலைவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொள்வது எப்படி சாத்தியம் ராவ் சாகப்? அவர்களுக் எங்களைத் தெரியவே தெரியாது.

***ராவ் சாகப் மேஹ்தா:*** மகாத்மாஜீயும், ஜவகர்லாலும் உன்னை எப்படித் தெரிந்து கொள்ள முடியும்? இப்போ அச்சுத், லோகியா, அருணின் செல்வாக்குதானே அதிகமா இருக்குது. அவர்களோட நம்பிக்கைக்கு நீ உரியவனாக இருக்கிறாயே இதுவே அதிர்ஷ்டமில்லையா?

**வசந்த்:** என் எண்ணப்படி அவர்களும் காந்தீஜீ, நேருஜீயைப் போன்றே முக்கியமானவர்கள்தான். அவர்களுடைய நம்பிக்கையைப் பெறுவது இருக் கட்டும். அவர்களுடன் அறிமுகமாகி இருந்தாலே பாக்கியசாலிகள்தான்.

***ராவ் சாகப் மேஹ்தா:*** அதாவது, உனக்கு அவர்களைத் தெரியாது. அறிமுகமில்லை என்று சொல்ல விரும்புகிறாய். அப்படித்தானே?

**வசந்த்:** இல்லை இல்லை. அப்படியிலை. நான் அவர்களை நன்றாக அறிவேன். அவர்கள் மேல் மதிப்பும் மரியாதையும் வைத்துள்ளேன். நான் அறிந்ததெல்லாம் ஒரு தலைப்பட்டது. இதைத் தான் சொல்ல விரும்புகிறேன்.

***ராவ் சாகப் மேஹ்தா:*** உனக்கு அவர்களைத் தெரியும் என்பது மட்டு மல்ல, மற்ற ஊர்களிலிருந்து வருபவர்களை, அச்சுத் சந்திக்கும்படி செய்யும் தலைவனும் நீதான். நவம்பர் 15ம் தேதி தில்லியிலிருந்து லாலாராம் நாராயண் வந்தார். அவரை இரவு ஒன்பது மணிக்கு நீ அச்சுத்திடம் அழைத்துச் சென்றாய். பதினெட்டாம் தேதி பகல் அன்று நீ...

**வசந்த்:** (சிரித்துக் கொண்டு) இது கூட மனப்பாடமா? ராவ் சாகப்?

***ராவ் சாகப் மேஹ்தா:*** உன்னைப் போன்றவர்கள் பொய் பேசினால் எனக்கு எவ்வளவு தூரம் விஷயங்கள் தெரியும் என்பதைக் கூற வேண்டிய அவசியமில்லை. நான் அவர்களைப் பற்றிய தகவல்களை உன்னிடமிருந்து தெரிந்து கொள்ள வேண்டும். அந்த வெடிகுண்டு வழக்கில் நான் உன்னைச் சம்பந்தப் படுத்த மாட்டேன் என்று உறுதியாக வாக்களிக்கின்றேன்.

**வசந்த்:** மிக்க நன்றி! ராவ்சாகப்! ஆனால் எனக்கு லஞ்சம் கொடுக்கவோ, வாங்கிக் கொள்ளவோ தெரியாது. அப்படி இருக்கையில் நான் என்ன பதில் கூறட்டும்?

***ராவ் சாகப் மேஹ்தா:*** இதோ பாரப்பா! நீ அறியாதவன். எனக்கு உலக அனுபவம் நிறைய இருக்கிறது. இந்த விஷயத்தில் பிடிவாதம் செய்யாதே. இது வாழ்க்கைப் பிரச்சனை. உயிர் யாருக்குத்தான் பிரியமானது அல்ல? அதை இப்படி அப்படி உதறவிட முடியாது.

**வசந்த்:** நீங்க சொல்வது முற்றிலும் உண்மை.

***ராவ் சாகப் மேஹ்தா:*** (மீண்டும் அன்பு ததும்பும் குரலில்) இதனால் தான் சொல்லுகிறேன். நீ அச்சுத்தைச் சந்திச்சியா இல்லையா?

**வசந்த்:** சந்திச்சதில்லைன்னு எப்பொச் சொன்னேன்? சந்திச்சிருக்கிறேன்.

**ராவ் சாகப் மேஹ்தா:** (நம்பிக்கையுடன்) ஊம்..சரி. எங்கே சந்திச்சே? எப்பொ? எதற்காக?

**வசந்த்:** கடைசி கேள்விக்குப் பதில் முதலில் கூறுகிறேன். சத்தியாகிரகிகளான தொண்டர்களின் பட்டியல் தயாரிக்கும் பணி என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. இந்த வியத்தைப் பற்றிய விவரங்களைப் பெற வேண்டி ஒன்றரை இரண்டு மாதங்களுக்கு முன்னர் நான் அழைக்கப்பட்டேன்.

**ராவ் சாகப் மேஹ்தா:** எங்கே சந்தித்தாய்?

**வசந்த்:** புரோகித் ஹோட்டலில்.

**ராவ் சாகப் மேஹ்தா:** (கோபத்துடன்) என்ன விளையாடுகிறாய் சுக்லா? என்னை ஏமாற்றுகிறாயா? அச்சுத் போன்ற தலைவர், இந்தியா முழுவதும் போலீசார் இரவுபகலாய் அவரைத் தேடி அலையுது, அவர், ஒரு சாதாரண விஷயத்தைத் தெரிஞ்சுக்க இத்தனை பெரிய ஆபத்தை எடுத்துக்கிட்டு பொது இடத்திற்கு வருவாரா?

**வசந்த்:** (உறுதியுடன்) ஆம். வந்திருந்தார்.

**ராவ் சாகப் மேஹ்தா:** (அதே கோபத்துடன்) எப்படித் தெரியும்?

**வசந்த்:** ஏன்னா...அவர் வந்திருந்தார்.

**ராவ் சாகப் மேஹ்தா:** ஆனால் உமக்கு புத்தி இருக்கிறதா? இல்லையா மிஸ்டர் சுக்லா? அர்த்தமில்லாமல் பேசுவது உமக்கே புரியவில்லையா? என் இடத்தில் நீர் இருந்தால் இதை ஏற்றுக் கொள்வீரா? அவர் எதற்காக வந்திருந்தார்?

**வசந்த்:** இதோ பாருங்கள் மிஸ்டர் ராவ் சாகப், நான் ஒரு சாதாரண ஊழியன், என்னுடைய மேலதிகாரி எதற்காக இதையெல்லாம் செய்கிறார், என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டியது எனது வேலையல்ல. எனது பணி அவரது உத்தரவை நிறைவேற்றுவதுதான்.

**ராவ் சாகப் மேஹ்தா:** (கோபத்துடன்) நல்லது (மணியை அடிக்கிறார்) காவலாளி! கைதியை அழைத்துச் செல். நான் மறுபடியும் கூப்பிடும்போது அழைத்து வா.

**காவலாளி:** நல்லது. எஜமான். (வசந்தும், காவலாளியும் செல்லுகின்றனர்)

**ராவ் சாகப் மேஹ்தா:** பயல் இப்படியெல்லாம் மசியமாட்டான். அந்தச் சித்தியைப் பார்த்தால் ஆசாமி நிலைக்கு வந்துடுவான். அப்படியும், இப்படியுமாய் அவள் ஒருவழிக்கு வந்திருக்கிறாள். அவள் மட்டும் என்ன, இவனுக்குக் குறைஞ்சவளா? (மணி அடிக்கிறார்) அந்தப் பெண்ணை அழைத்து வா!

(காவலாளி இருபத்தி இரண்டு வயதுடைய இளம் பெண்ணுடன் வருகிறான். அவளது முகத்தில் திகில் படர்ந்திருந்தாலும் பார்க்க அழகாகவும், கவர்ச்சியாகவும் இருக்கிறாள். அவளைக் கண்டதும்) வாங்க, வாங்க சரளா தேவி! உட்காருங்க. இதோ இந்த நாற்காலியில் உட்காருங்க!

**சரளா:** நல்லது.

**ராவ் சாகப் மேஹ்தா:** இதோ பாருங்க சரளாதேவி (சிரித்துக் கொண்டே) உங்களுக்கே எல்லாம் தெரியும். நான் அதிகமாக என்ன சொல்லணும்?

**சரளா:** (ஆவலுடன்) சார், வசந்தைச் சந்தித்தீங்களா?

**ராவ் சாகப் மேஹ்தா:** சந்திக்காமல் எப்படி? இந்தத்தொழில் அப்படிப் பட்டதாச்சே. மண்டையைக் குடைந்து கொள்ள வேண்டும். வந்து...நான் உங்களுக்கு அதிக சிரமம் தர நினைக்கலே. ஆனால் அவன் அப்படி லேசில் ஒப்புக் கொள்றவனாக இல்லை.

**சரளா:** என்ன சொன்னார்?

**ராவ் சாகப் மேஹ்தா:** (சிரித்துக் கொண்டு) புரோகித் ஹோட்டலில் ஒரு முறை அச்சுத்தைச் சந்தித்ததாகச் சொல்லுகிறான். அவ்வளவுதான்.

**சரளா:** (சிரித்துக் கொண்டு) அவர் உறுதியுடையவர், அவர் என்னதான் நினைச்சிட்டிருக்காரோ தெரியலே.

**ராவ் சாகப் மேஹ்தா:** அதிருக்கட்டும் சரளா ஜீ! சிரிப்பதற்கு இது ஏற்ற நேரமில்லை. அவனது வாழ்க்கையில் எத்தனை பெரிய ஆபதது வர இருக்கு துன்றதை அவன் மறந்து விடுகிறான்.

**சரளா:** (கெஞ்சும் குரலில்) நீங்கள் அதில் அவளை மாட்டிவைக்க மாட்டீங்க இல்லே?

**ராவ் சாகப் மேஹ்தா:** நான் முயற்சி செய்து பார்க்கிறேன். ஆனால் அவன் ஒப்புக் கொண்டால்தானே? அவனிடம் நான் இதுபற்றிச் சொன்னேன். அவன் அந்தப் பேச்சையே தட்டிக் கழித்துவிட்டான்.

**சரளா:** (பயந்து போய்) என்ன ஆகும்; ராவ் சாகப்?

**ராவ் சாகப் மேஹ்தா:** (தைரிய மூட்டுகிறார்) ஒண்ணும் ஆகாது. ஆனால் நீ கொஞ்சம் உறுதியா இருக்கணும்.

**சரளா:** (தைரியமிழந்தவளாய்) எனக்கு தைரியம் வரவில்லையே ராவ் சாகப்!

**ராவ் சாகப் மேஹ்தா:** இப்படி மன தளாந்து போனால் எப்படி சரளாஜீ! நான் உனக்கு டைரியைக் காட்ட வில்லையா? அவனுடைய தோழர்கள் எல் லோரும் ஒப்புக் கொண்டாங்க. எல்லோருமே அவனைத் தலைவனாக கருதறாங்க. அந்த வழக்கில் தண்டனை...என்பது தூக்கு தண்டனைதான்.

**சரளா:** (வருத்தமடைந்தவளாய்) வேண்டாம்; வேண்டாம், ராவ்சாகப்!

**ராவ் சாகப் மேஹ்தா:** (அன்புடன்) பயப்படாதே சரளா! உன் அன்புக்குப் பாத்திரமானவர்களை மரணத்தின் வாயிலிருந்து மீட்டு வருவேன். உன் தந்தையுடன் கொஞ்சமாகவா சுற்றி இருக்கிறேன்? (நினைவுபடுத்திக் கொண்டு) கஸ்தூர்சந்தும் நானும் நெருங்கிய நண்பர்கள். நான் முழுவதும் ஒன்றாகவே இருப்போம். கோதாராவின் சந்து பொந்துகளிலெல்லாம் கூட இப்பொழுதும் எங்கள் காலடியின் சின்னமிருக்கும். அவ்வளவு சுற்றுவோம். நானும் அவனுமாய் வியாபாரம் செய்யத் துவங்கினோம். பிறகு விட்டு

விட்டோம். பாவம், இளமையிலேயே காலமாகிவிட்டான். உங்களுக் கெல்லாம் எங்களுடைய இளம்பருவத்து நட்பைப் பற்றி என்ன தெரியும்? கான்தேஷில் எனக்கு வேலையாகி விட்டது. இதனால் உன் அம்மாவிடம் எனக்கு பரிச்சயம் ஏற்படவில்லை. ஆனால் (மீண்டும் விழிப்படைந்து எச்சரிக் கையுடன்) கஸ்தூரியின் பெண்ணுக்கு நானிருக்கும் போது துன்பம் ஏற்பட முடியாது. நீ எனக்கும் மகள் தானே? பயப்படாதே மகளே!

**சரளா**: (விம்மியவாறு) பயப்படவில்லை ராவ் சாகப். ஆனால் அதைப் பற்றிய கற்பனையைக் கூட என்னால் சகித்துக் கொள்ள முடியவில்லை.

**ராவ் சாகப் மேஹ்தா**: இதனால்தான் உனக்கு வழி காண்பித்தேன். மகளே! இல்லையா? அதிலிருந்து உன்னை மீட்க, முடிந்ததையெல்லாம் செய் திட்டிருக்கேன். ஆனால் அந்தப் பைத்தியக்காரன் ஏற்றுக் கொண்டால் தானே?

**சரளா**: (மனம் தளர்ந்து) ஆனால்—ஆனால்...ராவ் சாகப்...

**ராவ் சாகப் மேஹ்தா**: (உணர்ச்சியுடன்) இதற்குப் போய் இவ்வளவு ஏன் பயப்படறே சரளா? "அவன் அச்சுதனுடன் அடிக்கடி, தொடர்பு கொண் டிருந்தான், இது எனக்குத் தெரியும்". இவ்வளவுதான் நீ சொல்ல வேண்டியது. வேறெதுவும் இல்லை. விசேஷமாக நீ சொல்ல வேண்டியதோ, உன்னைக் கொண்டு நாட்டுக்கு துரோகம் செய்விக்க வேண்டிய அவசியமோ, எதுவு மில்லையே?

**சரளா**: (தனக்குள் கூறிக் கொள்வது போல்) அது சரி தான். எனக்கு வேறு எதுவும்தெரியாதே. இல்லாவிட்டால் அவனைக் காப்பாற்ற நான் ஏதாவது செய்யாமலிருப்பேனா?

**ராவ் சாகப் மேஹ்தா**: காதல் என்பது அப்படிப்பட்டது. நான் உன்னிடம் கூறினேனே அதைக் கூடச் சொல்ல வேண்டிய அவசியமிராது. உன்னைக் கண்டதுமே அவன் தானாகவே ஒப்புக் கொண்டு விடுவான். அவனுடைய உயிரும் காப்பாற்றப் பட்டுவிடும். சரளா! உயிர் யாருக்குத்தான் பிரியமானது அல்ல?

**சரளா**: ஆமாம். அது சரிதான். ஆனாலும், ராவ் சாகப்! உங்களுக்கு வசந்தைப் பற்றித்தெரியாது. வளைவது, தாழ்ந்து போவது இதெல்லாம் அவருடைய் சுபாவத்திலேயே கிடையாது.

**ராவ் சாகப் மேஹ்தா**: இதில் அப்படியெல்லாம் எதுவுமில்லை மகளே! அச்சுத்தைச் சந்திப்பது அப்படியொன்றும் பெரிய குற்றம் அல்ல. எங்கே சந்திச்சாங்க என்பதை மட்டும் சொல்ல வேண்டியதுதானே? இதிலென்ன கஷ்டம்?அச்சுத் இதற்குள் எங்கிருந்து எங்கேயோ போயிருப்பார். இதனால் அவர் பிடிபடக் கூடிய சாத்திய கூறே இல்லை. பின் எதற்காக பயம்? நீ இப்படிப் பயப்படக் கூடாது. நீ யாரை விரும்புகிறாயோ, அவரது உயிரைக் காப்பாற்றத்தான் இதெல்லாம் செய்து கொண்டிருக்கிறாய். இதில் உன் னுடைய சுயநலம் எதுவுமேயில்லை. மேலும் இன்னிக்கே இது தெரிந்துவிட

வேண்டும். ஒரு முறை என் கையிலிருந்து இந்த விஷயம் போய் விட்டால் பிறகு வசந்திற்கும், தூக்கு மேடைக்கும் இடையே நான் ஒண்ணும் செய்ய முடியாது.

**சரளா:** (ஆவேசத்துடன்) அப்படிச் சொல்லாதீங்க. ராவ் சாகப் அப்படிச் சொல்லாதீங்க. அவரோட உயிரைக் காப்பாத்த. நீங்கள் என்ன சொன்னாலும் அதைச் செய்வேன். (அழுது கொண்டே) இதனால் அவர் என்னிடம் பரா முகமாக மாறிவிட்டாலும் சரி. நான் செய்கிறேன்.

**ராவ் சாகப் மேஹ்தா:** யாரும் பராமுகம் ஆகமாட்டாங்க அம்மா! நீ தைரியமா இரு.

**சரளா:** நான் உங்க காலிலே விழுந்து கேட்டுக்கறேன் ராவ் சாகப்! என் வசந்த் என்னைக் கைவிட்டுடாம இருக்கணும். அப்படி ஏதாச்சும் ஆச்சுன்னா என்னாலே பொறுத்துக்கவே முடியாது!

**ராவ் சாகப் மேஹ்தா:** அமைதியாக இரும்மா. தைரியமாக இரு.

இந்தா தண்ணீர் குடி. உன்னுடைய தேவையிருந்தால் மட்டும் கூப்பிடுவேன். நீ தைரியத்தை வரவழைச்சுக்க அம்மா. அவன் எதிரே நீ இப்படி உன் வசமிழந்து போனால் அவனுக்குப் பிடிக்காது. போம்மா! போய் உன்னை சுதாரித்துக் கொள். (கூப்பிடுகிறார்) காவலாளி!

**காவலாளி:** (வந்து) எஜமான்!

**ராவ் சாகப் மேஹ்தா:** இவங்களை அடுத்த அறையில் உட்கார வை. நான் கூப்பிடும்போது அழைத்து வா.

**ராவ் சாகப் மேஹ்தா:** போம்மா. இறைவன் விரும்பினா உன்னை மீண்டும் கூப்பிட வேண்டிய அவசியமிராது.

**சரளா:** நல்லது (செல்லுகிறாள்)

**ராவ் சாகப் மேஹ்தா:** (உரத்த குரலில்) வசந்த் சுக்லாவை இங்கு அனுப்பு. (மெதுவாகத் தனக்குள்) அச்சுத் அல்லது லோகியா என் கைக்குக் கிட்டி விட்டால் பெரிய காரியம் முடிந்த மாதிரிதான். ராவ் சாகப்பிலிருந்து சர்நைட் (பிரபு) ஆகி விடுவேன். அப்புறம் அந்த வெடிகுண்டு கேசில் இந்தப் பசங்க எங்கே தப்பிக்கப் போகிறாங்க? (யோசிக்கிறர்) எல்லோரும் பாறை மாதிரி என்ன இருக்காங்க. அசைந்து கொடுக்காமல். உம் பார்க்கலாம்.

(வசந்த் சுக்லா வருகிறான்)

வாங்க மிஸ்டர் வசந்த்! உட்காருங்க. இந்த நாற்காலியில் உட்காருங்க (அழைத்து வந்தவனிடம்) நீ போகலாம். (வசந்திடம்) சிகரெட்?

**வசந்த்:** வேண்டாம். நன்றி.

ராவ் சாகப் மேஹ்தா:சிகரெட் பிடிப்பதில்லையா?

**வசந்த்:** எப்பொழுதாவது பிடிப்பேன். ஆனால் பழக்க மில்லை.

**ராவ் சாகப் மேஹ்தா:** (அன்புடன்) அப்படீன்னா எடுத்துக் கொள்ளேன். நான் இப்பொழுது ஒரு அதிகாரி மாதிரி உன்கிட்ட பேச விரும்பலே.

**வசந்த்:** (திடுக்கிட்டு) அப்படீன்னா?

**ராவ் சாகப் மேஹ்தா:** உன் குடும்பத்தில் அன்புடைய ஒருவன் என்ற

முறையில்—அப்பொழுது நீயும் கோபப்பட்டாய். நானும் தொழில் ரீதியாக பேச வேண்டி இருந்தது. இதனால் சொந்த உறவை நம்மிடையே கொண்டு வருவது உசிதமென நான் நினைக்கவில்லை. இப்பொழுது தனிமையில் சில முக்கியமான விஷயங்களைப் பேசிட்டு, உன்னை அனுப்பிடறேன்.

**வசந்த்:** போலீஸ் துறையிலே உங்களைப் போன்ற அன்பான உள்ளம் படைத்தவர்களும் இருக்க முடியும் என்பதைக் கண்டு மகிழ்ச்சி உண்டாகிறது, ராவ் சாகப்!

**ராவ் சாகப் மேஹ்தா:** அன்புள்ளம் எந்தத் துறையிலே இல்லை? நீங்கள் எல்லாம் இந்த மாதிரி மாபெரும் போராட்டம் நடத்த உயிரைத் திருணமாக மதித்து புறப்பட்டிருக்கும்போது, எங்களைப் போன்ற அன்புள்ளங்கள் உங்களுடன் இருக்கு மல்லவா?

**வசந்த்:** என்ன சொல்றீங்க?

**ராவ் சாகப் மேஹ்தா:** (சிரித்துக் கொண்டு) எனக்குத் தெரிஞ்சாச்சு மிஸ்டர் வசந்த். நீங்கள் நல்ல பெண்ணாகத் தான் தேர்ந்தெடுத்திருக்கிறீங்க. பம்பாய் நகரத்தில் சரளா மார்பதியா போல அன்புள்ளம் கொண்ட, அறிவுள்ள கபடமறியாத பெண் கிடைப்பது கடினம்.

**வசந்த்:** (சிரித்துக் கொண்டு) அவளையும் தெரியுமா? ராவ் சாகப்?

**ராவ் சாகப் மேஹ்தா:** தொழில் அப்படி! எல்லோரையும் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. மிஸ்டர் வசந்த். எப்பொழுது திருமணம் செய்து கொள்வதாக உத்தேசம்?

**வசந்த்:** (சிரிப்புடன் வேடிக்கையாக) நீங்கள் எப்பொழுது என்னை இங்கிருந்து விடுதலை செய்ய நினைக்கிறீங்க.

**ராவ் சாகப் மேஹ்தா:** என்னால் முடியுமானால் இப்பொழுதே...

**வசந்த்:** அப்படீன்னா நானும்கூட இப்பொழுதே திருமணம் செய்து கொள்ளத் தயார்.

**ராவ் சாகப் மேஹ்தா:** இது உங்க கையில் தானே இருக்கிறது? நீங்கள் விரும்பினால்...

**வசந்த்:** நீங்கள் மீண்டும் அரசியலுக்கு வந்து விட்டீங்களே ராவ் சாகப்? நாம் சொந்த முறையில் அல்லவா பேசுவதாக இருந்தோம்?

**ராவ் சாகப் மேஹ்தா:** பாவம் அவள் எவ்வளவு கவலைப்பட்டுக் கொண்டிருப்பாள். தெரியுமா?

**வசந்த்:** யாரைப் பற்றிய கவலை?

**ராவ் சாகப் மேஹ்தா:** உங்களைப் பற்றித்தான்.

**வசந்த்:** என்னைப்பற்றிக் கவலைப்படுகிறாளா? எதற்காக?

**ராவ் சாகப் மேஹ்தா:** எதற்காகவா? தன் காதலனின் தலைக்குமேல் கத்தி தொங்குவதைக் கண்டு எந்தப் பெண் தான் கவலைப்பட மாட்டாள்?

**வசந்த்:** தனது கடமையைப் பற்றிய ஞானமுள்ள எந்த அறிவுளள பெண்ணும் இப்படிச் செய்ய மாட்டாள். மேலும்...

**ராவ் சாகப் மேஹ்தா:** ஏன் நிறுத்திட்டீங்க? சொல்லுங்கள்! மிஸ்டர் வசந்த்.

**வசந்த்:** தனது தோழன்மேல் பரிபூர்ணமான அன்பு கொண்டவள்...

**ராவ் சாகப் மேஹ்தா:** என்னசெய்ய வேண்டும்?

**வசந்த்:** என்ன தோணுதோ செய்யட்டும். காத்திருக்கட்டும்.

**ராவ் சாகப் மேஹ்தா:** எது வரையிலும் காத்திருப்பது?

**வசந்த்:** காதலன் திரும்பி வரும்வரை, நிச்சயமாக.

**ராவ் சாகப் மேஹ்தா:** ஆனால்... மன்னியுங்கள். சும்மா பேச்சுக்காகக் கேட்கிறேன். அவன் திரும்பி வராமலேயே போனால்?

**வசந்த்:** (உற்சாகத்துடன்) போனால்... அப்பெண்ணின் உள்ளத்தில் தன் துணைவனின் நினைவு அழியாமலிருக்கும்... அங்கே பிரிவாற்றாமைக்கோ எதிர்பார்ப்புக்கோ இடம் எங்கே? அவனுடைய நினைவின் மங்காத ஒளியில் அவள் தன் கடமையை மட்டும் நிறைவேற்றுவாள்.

**ராவ் சாகப் மேஹ்தா:** இதிலிருந்து மாறுபட்ட கடமையைப் பற்றிய எண்ணம் உண்டானால்?

**வசந்த்:** மாறுபட்ட கடமை எதுவாக இருக்கமுடியும்?

**ராவ் சாகப் மேஹ்தா:** தன் காதலனின் உயிரைக் காப்பாற்றுவது.

**வசந்த்:** (வெறுப்புடன்) உயிரா? . உயிருக்கென்ன மதிப்பிருக்கிறது? எதற்காக இந்த உயிரைக் காப்பாற்றி வைக்க வேண்டும்? உண்மையாக நேசிக்கும் பெண் ஒரு பொழுதும் இவ்வாறு செய்ய மாட்டாள்!

**ராவ் சாகப் மேஹ்தா:** இதில் தியாகம் என்ற எண்ணமே இல்லாம லிருந்தால்? தனது துணைவன் தவறான பாதையில் சென்று, தன் உயிரை, தன்வாழ்வை நாசமாக்கிக் கொண்டிருக்கிறான் என்றால் எந்த ஒரு பெண்ணும்...

**வசந்த்:** ஏதோவொரு பெண் என்றால் எனக்கென்ன வந்தது? நான் யாரை விரும்புகிறேனோ அந்தப் பெண் ஒரு பொழுதும் அவ்வாறு செய்ய மாட்டாள். இதை நான் நன்றாகவே அறிவேன்.

**ராவ் சாகப் மேஹ்தா:** ஆனால் மிஸ்டர் வசந்த் இதில் யாரும் எதுவும் செய்ய வேண்டியதில்லை. அச்சுத்தை தேடிக் கண்டுபிடிப்பதென்று அரசு உறுதிபூண்டிருக்கிறது. நீங்க அவரை எங்கே சந்திச்சீங்கன்னு சொன்னாலும் கூட இத்தனை நாட்களுக்குப் பிறகு போலீஸிற்கு அவர் இருக்குமிடம் தெரியப் போவதில்லை. ஏன் வீணாக...

**வசந்த்:** ராவ் சாகப்! மீண்டும் அரசியலுக்கு வந்துவிட்டீர்களே!

**ராவ் சாகப் மேஹ்தா:** இதைத்தவிர வேறு வழியே இல்லை. இத்தனை அழகான, இன்பமான வாழ்க்கையை அனாவசியமாக பலியாவதைக் காண என்னால் பொறுக்க முடியவில்லை. மென்மையான உள்ளம் கொண்ட அந்த சரளாவிற்காக...

**வசந்த்:** அவளைப்பற்றிய கவலை வேண்டாம் ராவ் சாகப்! தன்னைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொள்ள அவளுக்குத் தெரியும்.

**ராவ் சாகப் மேஹ்தா**: என்ன தெரியும்? அழுது அழுது பாவம் உருகிக் கொண்டிருக்கிறாள்.

**வசந்த்**: இப்பொழுது இந்த ஆயுதத்தை என்மீது பிரயோகிக்கிறீர்களா? சரளாவை எனக்குத் தெரியும். நான் வேண்டுமானால் பணிந்து விடுவேன். ஆனால் அவள் ஒரு பொழுதும் பணிய மாட்டாள்.

**ராவ் சாகப் மேஹ்தா**: அவள் பணிய மாட்டாள் என்பது எனக்கும் தெரியும். உங்களைவிட அவள் உறுதியானவள். ஆனால் என்னைப் போலவே அவளுக்கும் நீங்க வீணாகப் பிடிவாதம் செய்வதாகத் தோன்றினால், இந்தப் பிடிவாதத்தை விடுமாறு அவள் கூறுவாளா, மாட்டாளா?

**வசந்த்**: அவளுக்கு அப்படியெல்லாம் தோன்றாது.

**ராவ் சாகப் மேஹ்தா**: ஏன்? (மணியை அடிக்கிறார்) அந்த அம்மாவை உடனே அனுப்பு.

**வசந்த்**: அவளையும் இங்கு வரவழைச்சிருக்கிறீங்களா?

**ராவ் சாகப் மேஹ்தா**: அவள் என்ன சொல்றான்னு கேளுங்கள். (சரளா வருகிறாள்) சரளாஜி! இவர்தானே மிஸ்டர் வசந்த் சுக்லா?

**சரளா**: (மெதுவாக குரலில்) ஆம்.

**ராவ் சாகப் மேஹ்தா**: இவர் அச்சுத்தை அடிக்கடி சந்தித்தது உண்டா?

**சரளா**: (மீண்டும் மெலிந்த குரலில்) ஆம்.

**ராவ் சாகப் மேஹ்தா**: நன்றாகத் தெரியுமா?

**சரளா**: தெரியும்.

**ராவ் சாகப் மேஹ்தா**: இவர் இதை ஒப்புக் கொள்ளும்படி எடுத்துச் சொல்ல முடியுமா?

**சரளா**: (அழுகை கலந்த குரலில்) வசந்த்— இதை ஒப்புக் கொள்...ள...

**வசந்த்**: (வறண்ட குரலில் சரளாவிடம்) நீங்கள் யாரிடம் பேசறீங்க?

**சரளா**: (வியப்புடன்) உங்களிடம்தான். ஏன்?

**வசந்த்**: (அதே குரலில்) எனக்கு இந்தப் பெண்ணைத் தெரியாது.

**சரளா**: (கூச்சலிட்டவாறு) வ..சந்த்...நீங்க...என்னை...அன்பரே (அவனை நோக்கி ஓடுகிறாள்)

**வசந்த்**: (உத்தரவிடும் குரலில்) எட்டி நில்லு. என்னிடமிருந்து விலகியே நில்லு. என்னைத் தீண்டி மாசுபடுத்தாதே.

**ராவ் சாகப் மேஹ்தா**: இதென்ன பயித்தியக்காரத்தனம், மிஸ்டர் சுக்லா? சரளா மார்பதியாவை உங்களுக்குத் தெரியாதா?

**வசந்த்**: தெரியாது. தெரியவே தெரியாது. ராவ் சாகப்! இந்தப் பெயருடைய இன்னொரு பெண்ணை நான் அறிவேன். அவளை நேசிக்கிறேன். அவளுக்காக என்னால் உயிரையும் கொடுக்க முடியும். யாரைப் பற்றித் தங்களிடம் பேசிக் கொண்டிருந்தேனோ அவள் வந்து...வந்து (தொண்டை அடைக்கிறது. செருமிக் கொண்டே) அவள் இறந்து விட்டாள்.

**சரளா:** (உரக்க அழுதவளாய்) வசந்த்....ஆண்டவனே! (கீழே விழுகின்றாள்)

**ராவ் சாகப் மேஹ்தா:** (மணியை அடிக்கிறார்) சீக்கிரம் போய் ஒரு டாக்டரை அழைத்து வா. இந்தக் கைதியை இங்கிருந்து அழைத்துச் செல். ஊம். சீக்கிரம் ஜல்தி... (காவலாளி, மற்றும் பலர் கூடுகின்றனர்)

திரை விழுகின்றது

# புது மலர்

## சிவகுமார் ஜோஷி

**பாத்திரங்கள்**

கல்யாணி
மிஸ்டர் முகர்ஜி
நத்தூசிங்
மிஸ்டர் சேன்
ஜட்ஜ் கோஷால்
மிஸ்டர் போஸ்
மிஸ்டர் சட்டர்ஜி
தீரஜ்
சச்சித்
மற்றும் பலர்

(இந்த நாடகத்திற்கு அரங்க மேடையை இரு பகுதிகளாகப் பிரிக்க வேண்டும். முன் பகுதி சாதாரணமானது. பாதிக்கு அதிகமான இடத்தைவிட்டுவிட்டு பின் பகுதி நாலரை அல்லது ஐந்து அடி உயரமான மேடைபோல உள்ளது. அரங்க மேடையின் இந்த இரண்டாம் பகுதியானது வேறு நிறமுள்ள ஒளி, மற்றும் திரைகளால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. முதற்காட்சியில் அரங்கத்தின் முற்பகுதியுடன், பின் பகுதியும் திறக்கப்படுகிறது. பிற்பகுதியில் ஒரு வரவேற் பறை நன்கு அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. நடுவில் சோபாசெட்டும், அருகிலே இரண்டு நாற்காலிகளும் உள்ளன. நடுவே உபயோக மற்றிருக்கும் ஒரு மேஜை, பின் சுவற்றில் ஒரு வாசல், அலங்கார வேலைப்பாட்டுடன் கூடிய பெரிய சாளரம். சாளரத்திற்கருகே ஒரு சிறிய முக்காலியில் டெலிபோன் வைக்கப் பட்டுள்ளது.

திரை விலகும் முன்னர் 'டென்ஷன்' நிறைந்த சூழ்நிலையை உணர்த்தும் பின்னணி இசை. இந்த இசை தீவிர மடையும் போது திரை விலகுகிறது. இதே நேரத்தில் அரங்கத்தில் மும்முறை ரிவால்வர் வெடிக்கும் ஓசை கேட்கிறது. இருளில் வரவேற்பறையிலிருந்து 'ஐயோ! செத்தேன்! என்ற அவலக் குரல். ஒரு மனித உடல் கீழே சாய்கிறது. இப்பொழுது இலேசாக ஒளி பரவுகிறது. மேஜைக்கும், சோபாவிற்குமிடையே போலீஸ் ஆபீசர் உடையில் ஒரு இளைஞன் இறந்து கிடப்பது தெரிகின்றது. அவளது சீருடையின் பெல்ட் முத லியன சோபாவின் மீது கிடக்கின்றன. ஒளி ஒவ்வொரு பொருளின் மீதும் சுழன்றுவிட்டு முடிவில் கையில் ரிவால்வாருடன் நாற்காலியைப் பிடித்துக் கொண்டு உக்கிரமாக நிற்கும் ஒரு யுவதியின் மீது நிலைக்கிறது. இதனைத் தொடர்ந்து அரங்கம் முழுவதும் இலேசான வெளிச்சம் பரவுகிறது.

**கல்யாணி:** ஓ! நீ எந்த முடிவைச் சந்திக்க வேண்டுமோ, அதுவே நேர்ந் திருக்கிறது. (திகிலுடன் இரண் டொரு முறை அறையைச் சுற்றி வந்த பின், ஏதோ யோசித்தவளாய் நிற்கிறாள். பின்னர் டெலிபோன் பக்கம் சென்று நம்பரைச் சுழற்றுகிறாள்— கல்கத்தா? ஒன், டபிள், ஜீரோ. ஒன் (1001) எஸ் ப்ளீஸ்... ஹலோ! எங்கிருந்து பேசுகி றீர்கள்? லால் பஜார் போலீஸ் ஸ்டேஷன்? ஆபீசர் இன் சார்ஜை கொஞ்சம் கூப்பிட முடியுமா? ஹலோ! ஆபீசர்...யார்? ஏப் இன்ஸ் பெக்டர் மிஸ்டர் முகர்ஜி? யெஸ். நான் தான் கல்யாணி, கல்யாணி மஜூம்தார். நான் பாவூ பஜார். சித்திரஞ்சன் அவென்யூவிலிருந்து பேசறேன் கிராசிங் பக்கத்தில் நிர்மல் லோகியா தெரு 12 நம்பர் வீடு நீங்க கொஞ்சம் இங்கே வறீங்களா? ஆமாம். ரொம்ப முக்கியமான விஷயம். ஆம், இப்பொ இங்கே ஒரு கொலை நடந்திருக்குது. கொலை. ஆமாம். யெஸ். கொலை. கொலையாளியா? கொலையாளி இங்கு தானிருக்கிறான். ஆமாம். நான்தான் அது. நான் கல்யாணி. பிளீஸ் ஸ்டார்ட், இம் மீடியட்லி.

(ரிசீவரைப் பொருத்திவிட்டு கல்யாணி நாற்காலியில் அப்படியே சரிந்து விழுகின்றாள். இறந்து கிடப்பவனை சில நிமிடங்கள் வரை வெறுப்புடன் பார்க்கிறாள். இதற்குள் வெளியே படிகளில் மனிதர்கள் ஏறிவரும் அரவம் கேட்கிறது. வெளியே பரபரப்பு, வியப்பு, திகில் நிறைந்த சூழ்நிலை.

**ஒரு மனிதன்:** (வெளியேயிருந்து) இதோ—இந்த இந்த அறையிலிருந்து தான் பிஸ்டல் சத்தம் கேட்டது.

**இரண்டாமவன்:** உள்ளே யார் இருப்பாங்க?

**மூன்றாமவன்:** (கதவைத் தட்டி) ஏய்! கதவைத்திற, திற கதவை!

(ஆவேசத்துடன் அறையைச் சுற்றி வரும் கல்யாணி வெறுப்புடன் சிரிக்கிறாள்)

**கல்யாணி:** ஊம் கூடிவிட்டது. கோழைகளின் கும்பல்

(வெளியேயிருந்து வரும் குரல்கள்) யாரது உள்ளே? நிச்சயம் யாரோ திருடனோ, கொள்ளைக் காரனோ புகுந்திருப்பான். (பல குரல்கள்) கதவைத் திற, திற கதவை.

**ஒருவன்:** எங்கேயாவது ஜன்னல் வழியே குதித்து ஓடிடப் போறான். நாலா பக்கமும் சூழ்ந்து நில்லுங்க. (மூடியிருக்கும் ஜன்னலைத் திறக்க முயற்சிக் கிறார்கள்)

**மற்றொருவன்:** போலீசுக்கு போன் செய். போலீஸை...

**கல்யாணி:** (உட்புறமிருந்து லேசாகக்கதவைச் சற்றே திறந்து கையில் ரிவால்வருடன் அவர்களின் முன்னே நிற்கிறாள்) அவசியமில்லை. நான் தெரிவித்தாகிவிட்டது. இங்கிருந்து போய் விடுங்கள். இங்கே யாருக்கும் வேலையில்லை.

**கும்பலில் ஒருவன்:** ஐயோ! அப்பா! சாட்சாத் சண்டி தேவிதான்.

**கல்யாணி:** சண்டிதான். ஜாக்கிரதை! ஒரு அடிகூட முன்னால் வெச்சிங்களோ!

**கும்பலில் ஒருவன்:** அட, ஏன் பயப்படுறே? பாரு! உள்ளே என்ன இருக்குது பாரு!

**கல்யாணி:** எதுவுமில்லை– அந்த ஆள் அப்படிப் பார்க்கத் தகுந்த மாதிரி எதுவுமில்லை.

(கதவைத் திறந்ததும், நாலைந்து பேர் உள்ளே நுழைகின்றனர்)

**ஒருமனிதன்:** (கூச்சலிட்டுக் கொண்டு ஓடுகிறான்) ஐயோ! அம்மா! கொலை! கொலை!

(வெளியேயிருந்து என்ன? என்ன? என்ற குரல்கள் வருகின்றன)

**இன்னொருவன்:** தாயே! துர்க்காதேவி, காப்பாற்று! காப்பாற்று! காப்பாற்று! (என்று கூவியவாறே வந்த வேகத்தில் வெளியேறுகிறான்)

**மூன்றாமவன்:** சண்டை! கொலை! கொலை!

(கும்பலுடன் கூடவே அரங்கத்தின் மற்றொரு கோடியில் கல்யாணி

அசையாமல் நிற்கிறாள். உள்ளே வந்தவர்களிடையே பேச்சுத் துவங்குகிறது. வெளியேயுள்ளவர்களும் உள்ளேயிருப்பவர் களும் சேர்ந்து கொள்கின்றனர்)

**ஒருவன்:** கையிலே பிஸ்டல்! ஒரடி முன்னால் போனாலும் தொலைந்தாய் தெரிஞ்சுக்க நல்லா!

**மற்றொருவன்:** நாகரீகமானவங்க வசிக்கும் இந்த வட்டாரத்தில் இதென்ன கொலையும், கிலையும்?

**மூன்றாமவன்:** பிடி அவளை! பிடிச்சுப் போலீஸிடம் ஒப்படைக்கலாம்.

(கீழே போலீஸ்வேன் வந்து நிற்கிறது. அதிலிருந்து காவலர்கள் இறங்கி மாடி ஏறி வருகின்றனர்)

(வெளியே உள்ள கும்பலிலிருந்து) போலீஸ் வேன் வந்து விட்டது. ஒடு—ஒடு நாம் இங்கே இருந்தால் நம்மையும் பிடிச்சிட்டுப் போயிடுவாங்கடா!

(உள்ளே இருக்கும் கும்பலிடையே கசமுச என்ற பேச்சு)

—பார்த்தால் நாகரிகமான பெண்மாதிரி தெரிகிறாள். ஆனால் பாரேன் இவள் செய்த காரியத்தை!

**ஒருவன்:** சரியான பைத்தியக் காரியாக இருப்பாள்! பைத்தியம்!

**மற்றொருவன்:** ஏதோ மர்மம் இருக்குது.

**மூன்றாமவன்:** போலீஸ் வந்துவிட்டது. இந்த சண்டி சொல்லியது நிஜம்தான். இவளேதான் போலீசுக்கு போன் செய்திருப்பாள் போலிருக்குது.

(வெளியேயிருந்து போலீசாரின் குரல்) விலகுங்கள். தூர விலகுங்கள்! இங்கே வேடிக்கை, ஒன்றும் நடக்கவில்லை. போங்க.

(உள்ளேயிருந்தும், வெளியிலிருந்தும் ஆட்கள் நழுவ ஆரம்பிக்கின்றனர். ஒரு சிலர் சாளரத்தினருகேயும்,கதவருகேயும் ஆவலுடன் நிற்கின்றனர்)

**கும்பலிலிருந்து ஒருவன்:** இதோ பாருங்க சார், கையில் ரிவால்வருடன் நிற்கிறாள்.

**மிஸ்டர் முகர்ஜி:** (பிரவேசித்தவாறு) இருக்கட்டும். நீங்க இங்கிருந்து நகருங்க!

**கல்யாணி:** உள்ளே அதிகமா போலீஸ்காரங்க வர வேண்டிய அவசிய மில்லை. நானே உங்களுடன் போலீஸ் ஸ்டேஷனுக்கு வரத் தயாராக இருக் கிறேன். இந்தாருங்கள் ரிவால்வர்.

**மிஸ்டர்முகர்ஜி:** ஆனால் நீ, இங்கேயே ஸ்டேட்மெண்ட் கொடுக்க வேண்டும். ஹவல்தார் நத்தூசிங்! டைரியில் எழுதிக் கொள்.

**நத்தூசிங்:** யெஸ்.சார் (டைரி எழுத உட்காருகிறான்) சொல்லு—நீ யார்?

**கல்யாணி:** நான் இங்க எதுவும் சொல்லப் போவதில்லை. இப்பொழுது நான் ஒரு கொலைகாரி. இதை விட அதிகமாக சொல்வதற்கு எதுவுமில்லை.

**மிஸ்டர் முகர்ஜி:** (சடலத்தைப்பார்த்து) அட! இது யாரோ போலீஸ் அதிகாரி போலத் தோன்றுகிறதே! இந்த ரிவால்வர் கூட சோபாவில் கிடக்கும் இவரது பெல்டிலிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது. ஹவல்தார். இந்த பொருள் களைப்பற்றி குறிப்பையெல்லாம் குறித்துக் கொள். ராமராய்! மெடிக்கல்

காலேஜிற்கு போன் செய்து ஒரு ஆம்புலென்ஸை வரவழைத்து பிணத்தைப் போஸ்ட் மார்டத்திற்கு எடுத்துச் செல் (நத்தூ சிங்கிடம் பிணத்தைச் சுட்டிக் காட்டி) ஹவல் தார்! உனக்கு இவரைத் தெரியுமா?)

**நத்தூசிங்**: (சிலநிமிடம் உற்றுப் பார்த்தபின்னர்) இல்லை சார், இது முன்பின் தெரியாத ஆபீசராகத் தோன்றுகிறார். (பிணத்தை அவர் பக்கமாகத் திருப்பி) சார், பாருங்க! குண்டு சரியாக மூக்கிற்கும் மண்டைக்கும் நடுவே பாஞ்சிருக்குது. மண்டையோடு பிளந்து போச்சு. முகம் அடையாளமே தெரியலே!

**கல்யாணி**: (ஏளனமாக) ஆபிசர்! போலீஸ் ஆபிசர்! ஊம் யாரானாலும் சந்தோஷம்தான். மிஸ்டர் முகர்ஜி! என் கையில் விலங்கிடுவதானால் மாட்டிக் கொள்ளுங்கள். ஆனால் ஓடிப்போகும் எண்ணம் எனக்குக் கொஞ்சமும் கிடையாது.

**ஒரு போலீஸ்காரன்**: கொஞ்சம் வெட்கமில்லாதவளாக இருக்கிறாள்? வெட்கமாக இல்லை உனக்கு?

**கல்யாணி**: வெட்கமா? அது என்னது?

**மிஸ்ர் முகர்ஜி**: வீண் பேச்சு வேண்டாம். நத்தூசிங்! நீ குற்ற வாளியை அழைத்துக் கொண்டு ஸ்டேஷனுக்குப் போ. அதற்கு முன் இந்த அறையை நன்றாகப் பார்த்து ஒவ்வொரு விஷயத்தையும் குறித்துக் கொள்.

(போலீசாரால் சூழப்பட்டுள்ள கல்யாணி அறையைவிட்டு வெளியே வருகிறாள். கும்பலிலிருந்து சிலர்)

**ஒருவன்**: வழிவிடப்பா— விடு வழியை.

**மற்றொருவன்**: என்ன கம்பீரம் பாரேன்.

**மூன்றாமவன்**: ஏதோ மகத்தான காரியத்தைச் சாதித்துவிட்டது போல.

**நான்காமவன்**: என்ன சொன்னாலும், இவள் நிஜமாகவே தைரிய சாலிதான்.

**ஐந்தாமவன்**: பத்திரிகைகாரர்களுக்கு விருந்து கிடைத்து விட்டது.

**ஆறாமவன்**: ஆமாண்டா! நாளைக்குப் பரபரப்பான தலையங்கம் வரும். பார்!

(மெல்ல மெல்ல மனிதர்களின் ஆரவாரம் அடங்குகிறது. நத்தூசிங் அறையிலுள்ள ஒவ்வொரு பொருளையும் மிக நுட்பமாக ஆராய்கின்றான். ராமராய் போன் அருகே சென்று ரிசீவரை எடுக்கிறார். இருள்சூழ்கின்றது. முக்கியமான திரைக்குப் பின்னே இரண்டடி இடைவெளிக்கிடையே வெண்ணிறம் போன்ற திரை விழுகின்றது.

(சற்று நேரத்திற்குப் பின் அதே இடத்தில் ஒளி மெதுவாக அதிகரிக்கின்றது. நீதி மன்றத்திற்குரிய உடைகளுடன் மூன்று ஜூனியர் வக்கீல்கள் பிரவேசிக்கின்றனர். பின்னால் நீதிமன்றத்தின் கோலகலமாக சந்தடி மிகுந்த சூழ்நிலை)

**மிஸ்டர் மைத்திரா:** (வக்கீல் நம்பர் 1) மிஸ்டர்! சட்டர்ஜீ! இன்று உமக்கு வழக்கு எதுவுமில்லாவிட்டால் வாரும்! ஜஸ்டிஸ் கோஷாலின் கோர்ட்டில் ஒரு ருசிகரமான வழக்கு நடக்குது.

**மிஸ்டர் சட்டர்ஜீ:** (வக்கீல் நம்பர் 2) எது? கல்யாணி மஜூம்தாரின் வழக்கா? தைரியசாலி பொம்பளை அவள்! போலீஸ் முன்னால் வாக்கு மூலம் தர மறுத்து விட்டாள். நான் சொல்ல வேண்டியதை செஷன்ஸ் கோர்ட்டில் சொல்லிக் கறேன்னு அடிச்சுச் சொல்லிட்டா. நான் கட்டாயம் போகப் போறேன். எனது கட்சிக் காரன் நோயாக இருக்கிறான்னு வாய்தா வாங்கிடறேன்.

**மிஸ்டர் போஸ்:** (வக்கீல் நம்பர் 3) (பெருமிதத்துடன்) அப்படீன்னா நானும் தேதியை தள்ளிப் போட வேண்டியிருக்கும்.

**வக்கீல் நம்பர் 1:** (வியப்புடன்) ஏன்? உனக்குகேசு இருக்கிறதா? அப்ப டீன்னா உன்கிட்டயும் கட்சிக்காரங்க வர ஆரம்பிச்சுட்டாங்கன்னு சொல்லு! பாராட்டுதல்கள்.

**வக்கீல் நம்பர் 2:** மிஸ்டர் போஸ்! பிராக்டிஸ் துவங்கி எத்தனை வருஷ மாயிற்று? (சிரிக்கிறார்)

**வக்கீல் நம்பர் 3:** நிச்சயமா ஒரு நாள் உன் கிண்டலுக்கு நான் பதில் சொல்லுவேன். ராஸ்பிகாரி கோஷோ, சித்திரஞ்சனதாஸோ ஒரேநாளில் புகழ்பெற்று விடல்லே.

**வக்கீல் நம்பர் 1:** ஓ! ஐ ஆம் வெரி சாரி, மிஸ்டர் சித்தரஞ்சன்

**வக்கீல் நம்பர் 2:** ஹர்ரி அப்! சீக்கிரம். இட் இஸ் தாஸ். ஆல்ரெடி லெவன் த்ர்ட்டி.

(மூவரும் செல்லுகின்றனர். மெல்ல மெல்ல வெண்ணிறத் திரை உயர் கின்றது. அரங்கத்தின் பிற்பகுதியின் உயரமான இடம், சிவப்பு நிறத்திரை யினால் மூடப்பட்டிருக்கிறது. அரங்கத்தின் முன் பகுதியின் நடுவே நீதிபதியின் உயர்ந்த ஆசனம் போடப்பட்டுள்ளது. நீதிபதியின் இடதுபுறம் குமாஸ்தாவின் மேஜையும் நாற்காலியும் உள்ளது. இதற்கு இணையாக தட்டெழுத்தர் அமருமிடமும் அதற்கு முன்னால் இடதுபுறம் குற்றவாளிக் கூண்டும் உள்ளது. நீதிபதியின் முன்னே பெரிய மேஜையுள்ளது. வலதுபுறம் ஜூரிகள் அமருமிடம் உள்ளது. சாதாரணமாக செஷசன்ஸ் கோர்ட்டில் பார்வையாளர்கள் அமர்வதற்கு செய்யப்பட்டுள்ளது போல ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது. ஒரு ஸ்பாட்லைட் நீதிபதியின் முகத்திலும், மற்றொன்று குற்ற வாளியின் மீதும் படும்படி ஒளி அமைப்பு செய்யப்பட்டுள்ளது. அரங்கம் முழுவதும் ஒளி விழுமாறு புட்லைட் அமைக்கப்பட்டுள்ளது. நீதிபதியின் தலைக்கு மேல் ஒரு ஸ்பாட்லைட் யாவரும் நீதிபதியின் வரவை ஆவலுடன் எதிர்பார்க்கின்றனர். பார்வையாளர்கள் கசமுச வென்று பேசிக் கொண் டிருக்கின்றனர். வலது புறமிருந்து பியூன் வருகிறான். அவனுக்குப் பின்னால் வயது முதிர்ந்த மிஸ்டர் கோஷால் வருகிறார். நீதிமன்றத்தில் அமைதி நிலவுகிறது. யாவரும் எழுந்து நிற்கின்றனர்)

**நீதிபதி கோஷால்:** (தனது இடத்தில் அமர்ந்து) மிஸ்டர் காங்குலி! முதல் வழக்கு?

**எழுத்தர்:** மேற்கு வங்க அரசுக்கு எதிராக மிஸ் கல்யாணி மஜும்தார்.

**நீதிபதி கோஷால்:** மிஸ்டர் சேன், உங்கள் வழக்கு தயாராக உள்ளதா?

**பப்ளிக் பிராசிகியூடர்:** யெஸ். மை. லார்ட்.

**நீதிபதி கோஷால்:** குற்றவாளியை ஆஜர் செய்யுங்கள்.

(விரித்த கூந்தலை முடிந்த வண்ணம், சால்வையை உடல் போர்த்திக் கொண்டிருக்கும் கல்யாணியை, சப் இன்ஸ்பெக்டர் முகர்ஜி குற்றவாளிக் கூண்டுக்கு அழைத்து வருகிறார். உடனே நீதி மன்றத்தில் கசமுசவென்ற பேச்சு. சத்தம் அதிகரித்ததும்)

**நீதிபதி கோஷால்:** ஆர்டர், ஆர்டர் கைதியின் தரப்பு வக்கீல் யார்?

**கல்யாணி:** வக்கீலா? எனக்கு எந்த வக்கீலும் தேவையில்லை. நான் கூற வேண்டிய விஷயம் தெளிவானது. மாற்றிக் கீற்றி எதையும் கூற வேண்டிய அவசியமில்லை. இதனால் எனக்கு எந்த வக்கீலும் தேவையுமில்லை.

**நீதிபதி கோஷால்:** நல்லது! மிஸ்டர் சேன்! நீங்கள் உங்கள் வழக்கை எடுத்துக் கூறலாம்.

**மிஸ்டர் சென்:** (எழுந்து நின்று) யெஸ். மைலார்ட்! (தொண்டையைக் கனைத்துக் கொண்டு) மை லார்ட் அண்ட் ஜெண்டில்மென் ஆஃப் தி ஜுரி. தங்கள் முன்னே நிற்கும் பெண்மணி கல்யாணி மஜும்தாரின் மீதுள்ள குற்றச் சாட்டு...

**கல்யாணி:** (இடைமறித்து) குற்றச்சாட்டா? என் மீதா?

**மிஸ்டர் சேன்:** நடுவில் பேசாதீர்கள்.

**நீதிபதி கோஷால்:** ஆர்டர், ஆர்டர்

**மிஸ்டர் சேன்:** (தொடர்ந்து படிக்கிறார்) இன்றிலிருந்து ஒரு மாதத்திற்கு முன்னர் 1950ஆம் ஆண்டு ஜுலை 22ஆம் தேதி சனிக்கிழமை இரவு ஒன்பதரை மணிக்கு லால் பஜார் போலீஸ் ஸ்டேஷனுக்கு ஒரு போன் வந்தது...

**கல்யாணி:** (சற்றே சலிப்புற்ற குரலில்) சுருக்கமாகச் சொல்லலாமே மிஸ்டர் சேன். தாங்கள் சொல்ல நினைப்பது...நானே...

**மிஸ்டர் சேன்:** சட்டம் ஒழுங்கின்படி தான் நீதிமன்ற நடவடிக்கைகள் நடக்கும்.

**கல்யாணி:** நீதி, ஒழுங்கு சட்டம் ஹ ஹ ஹா (சிரிக்கிறாள்) எங்கே நீதி? எங்கிருக்கிறது ஒழுங்கு?

**நீதிபதி கோஷால்:** நீங்கள் என்ன சொல்ல விரும்பறீங்க?

**கல்யாணி:** உங்கள், சட்டம், ஒழுங்கு பற்றி எனக்கு ஒரு அக்கறையும் இல்லை. நான் இவற்றை வெறுக்கிறேன்.

**நீதிபதி கோஷால்:** குற்றப் பத்திரிகையை படிக்க அனுமதியுங்கள். பிறகு என்ன சொல்ல விரும்புறீங்களோ, சொல்லலாம்.

**மிஸ்டர் சேன்:** நான் சுருக்கமாகவே கூறி முடித்துக் கொள்கிறேன். மிஸ் கல்யாணி மஜூம்தார் ஜூலை இருபத்தி இரண்டாம் தேதி இரவு, லோகியா தெருவில் பன்னிரண்டாம் நம்பர் இல்லத்தில் அடையாளம் தெரியாத ஒரு போலீஸ் ஆபீசரைக் கொலை செய்திருக்கிறாள்.

**நீதிபதி கோஷால்:** அடையாளம் தெரியாத ஆபீசரா? இதுவரை போலீஸ் துறை அவருடைய ஊர் பெயர் எதையும் அறிய முடியவில்லையா?

**மிஸ்டர் சென்:** மை லார்ட்! இறந்தவரது முகத்தில் குண்டுபட் டிருப்பதால் அடையாளம் கண்டுபிடிப்பது கடினமாக இருக்கிறது.

**நீதிபதி கோஷால்:** ஆனால் உடை, ரிவால்வர், முதலியவற்றிலிருந்தும், ஏன்? உங்கள் போலீஸ் ரெஜிஸ்டரில் அதிகாரிகளின் பெயர்கள் பதிவாகி இருப்பதிலிருந்து...

**மிஸ்டர் சென்:** இது விஷயத்தில் போலீஸ் இன்றும் மும்முரமாகத் தேடிக் கொண்டிருக்கிறது. ஆனால் இந்த வழக்கில் மிஸ் மஜூம்தார் ஒரு ஆளை கொலை செய்திருக்கிறார் என்பதுதான் முக்கியமான விஷயம்.

**நீதிபதி கோஷால்:** ப்ளீஸ் கோ ஆன் வித் யுவர் கேஸ்.

**மிஸ்டர் சென்:** யெஸ். மை லார்ட் (படிக்கிறார்) போன் செய்து, போலீஸ்க்குத் தெரிவித்துவிட்டு குற்றவாளி என்ற முறையில் தன்னைத் தானே போலீஸிடம் ஒப்படைத்துக் கொண்டாள். போலீஸ் ரிப்போர்ட்டின்படி மிஸ் கல்யாணி கிழக்கு வங்கத்தின் ஒரு ஆதரவற்ற இளம்பெண் என்று தெரி கின்றது. மேலும் இவள் தனது அழகு அறிவு எனும் வலையை வீசி பலரையும் சிக்க வைத்திருக்கிறாள் என்பது போலீசாரின் கணிப்பு.

**கல்யாணி:** (உரக்க கத்துகிறாள்) இது பொய், பெரும் பொய்.

**நீதிபதி கோஷால்:** ஆர்டர், ஆர்டர்.

**மிஸ்டர் சென்:** (தொடர்ந்து படிக்கிறார்) பலரையும் இவள் தன் வலையில் சிக்க வைத்திருக்கிறாள். அதுவும் கடந்த மூன்று மாதங்களில்.

**கல்யாணி:** (கோபத்தினால் பின்னும் உரக்க கத்துகிறாள்) சட்டம் ஒழுங்கு முறையின் காவலர்களே! நான் சொல்லப் போவதையும் கேளுங்கள். இது வரை பொறுமையுடன் நீதிமன்றத்தின் ஒழுங்கை காப்பாற்றி வந்தேன். ஆனால் இப்பொழுது நான் பேசுவதை யாரும் தடுக்க முடியாது.

**மிஸ்டர் சென்:** இது நீதிமன்றத்தை அவமதிப்பதாகும். மைலார்ட்!

**கல்யாணி:** சட்டப்படி இதற்கு என்ன தண்டனையுண்டோ, அதை எனக்கு அளிக்கலாம், மிஸ்டர் சென். இப்பொழுது நான் குற்றவாளி. என்னுடைய எண்ணம் குற்றத்தை மௌனமாக ஏற்று அதற்குரிய தண்டனையை பெறுவ தாகத்தான் இருந்தது. ஆனால் இன்று சட்டம், ஒழுங்கின் பெயரால் நீங்கள் எத்தகைய பொய்களை நீதி மன்றத்தின் முன் வைத்தீர்களோ அதைக் கேட்டபின் என்னால் சும்மா இருக்க இயலவில்லை. என்னைப் போன்ற ஆதர வற்ற, துன்பத்தில் உழலும் பெண்கள் சார்பில் நான் உங்களுடைய சட்டம், ஒழுங்குமுறைக்கு சவால் விடுகிறேன்.

**நீதிபதி கோஷால்:** நீங்கள் எதைச் சொல்ல விரும்பினாலும் அமைதியுடன் கூறுங்கள்.

**கல்யாணி:** அமைதியாகவா? இன்று என் இதயத்தில் பெரும் நெருப்பு மூண்டுள்ளது. என்னுடலில் ஆயிரமாயிரம் தேள்கள் ஒன்றாகக் கொட்டுவது போல் வேதனையுண்டாகிறது. நீங்கள் என்னை அமைதியுடன் இருக்கும்படி அறிவுறுத்துகிறீர்கள். என்னிடம் அமைதியையா எதிர்பார்க்கிறீர்கள்? நீதிபதி அவர்களே, தங்களுக்கு மகள் இருக்கிறாளா? மிஸ்டர் சென்! தங்களுக்கு உடன் பிறந்த சகோதரி இருக்கிறாளா?

**மிஸ்டர் சென்:** மைலார்ட்! விஷயம் மிதமிஞ்சிப் போகிறது. குற்றவாளி...

**நீதிபதி கோஷால்:** (அமைதியான உறுதி வாய்ந்த குரலில்) இவளைப் பேச அனுமதியுங்கள். மிஸ்டர் சென். (அனுதாபம் நிறைந்த குரலில்) சொல் லுங்கள் பெஹன்.

**கல்யாணி:** (தழுதழுத்த குரலில்) பெஹன்! சகோதரி! நீங்கள் என்னை பெஹன் என்று அழைத்தீர்கள்? என் தந்தையும் அன்புடன் என்னை இவ்வாறு தான் அழைப்பார். 1946ல் டாக்காவில் கலவரம் நடந்து கொண்டிருந்த சமயம், பல்கலைக்கழகத்திலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தவர், ஆவேசம் கொண் டிருந்த ஒரு கும்பலை சமாதானப்படுத்த முயன்றபோது, ஜாதி வெறியின் கூர்வாளுக்குப் பலியானார். நாங்கள் அனாதைகளாக்கப்பட்டோம். (அழ ஆரம்பிக்கிறாள்)

**மிஸ்டர் சென்:** யார்? புரொபசர் மஜும்தாரா? இந்து முஸ்லீம் வகுப்புக் கலவரங்களை அடக்கி அமைதியை நிலைநாட்டும் முயற்சியில் உயிரிழந்த புரொபசர் விமல் மஜும்தாரா? அவரா உன்னுடைய தந்தை?

**கல்யாணி:** ஆம். அவர்தான் என் தந்தை. இன்று கொலைக் குற்றத்திற்காக, உங்கள் முன் நிற்கும் குற்றவாளி நான்தான் அவருடைய பெண்!

**மிஸ்டர் சென்:** உங்களைப் போன்ற பண்புள்ள பெண்ணிற்கு ஏன் இப்படிப்பட்ட காரியம் செய்ய தோன்றியது?

**நீதிபதி கோஷால்:** உணர்ச்சி வசப்படாதீர்கள், மிஸடர் சென்! மேலே கூறுங்கள் மிஸ்கல்யாணி.

**கல்யாணி:** வங்கம், கிழக்கு, மேற்கு என இரண்டு பகுதிகளாகப் பிரிந்த பின்னும், நான், என் தாயார், தம்பியுடன் டாக்காவிலேயே இருப்பதென்று தான் முடிவு செய்தேன். ஆனால் மெல்லமெல்ல நிலைமை மோசமாகிக் கொண்டே வந்தது. எப்படியோ எம்.ஏ கடைசி வருடம் வரை வந்து விட்டேன். ஆனால் தேர்வு எழுதும் முன்னர் நான் படிப்பை விட நேர்ந்து விட்டது. என் தம்பியைப் படிக்க வைக்கவும், குடும்பத்தை நடத்தவும் வேலைக்குப் போவதைத்தவிர வேறு வழி எதுவும் புலப்படவில்லை. நாட்கள் செல்லச் செல்ல டாக்காவில் வசிப்பது எங்களுக்கு சிரமமாகிவிட்டது. முடிவில் பிப்ரவரி, மார்ச்சில் நடைபெற்ற கலகங்களில் குண்டர்களின் கொடுமைகளி

லிருந்து தப்புவதற்காக, நானும், அம்மாவும் தம்பியுடன் புகலிடம் தேடிக் கிளம்பி விட்டோம். ஆம் புகலிடம்! தாங்கள் கூறினீர்களே. அந்தச் சட்டம், ஒழுங்கு முறைப்படி. அரசாங்கம் தரும் புகலிடத்தைத் தேடி, ஒரு நாள் நாங்கள் சியால் (கல்கத்தா) ரெயில் நிலையத்தில் இறங்கினோம். நாங்கள் தங்க இடம் தேடிக் கொண்டிருந்தோம் அப்பொழுது ஒரு நாள்...

அரங்கத்தின் முற்பகுதியில் முற்றிலும் இருள் சூழ்கின்றது. பிரகாசமான ஒளியுடன் பின்னாலிருக்கும் திரை உயர்கின்றது. உயரமான அப்பகுதி ரெயில்வே வெயிட்டிங் ரூம் போன்ற அமைப்பு. ஆசனங்கள் போடப்பட டுள்ளன. அறையின் கதவு அரங்கத்தின் பிற்பகுதியில் உள்ளது. ஸ்டேஷனில் பலவிதமான கூக்குரல்கள். இங்குமங்கும் பயணிகளின் சாமான்கள். அறை யினுள்ளே தாறு மாறாகக் கிடக்கும் சாமான்களின் நடுவே கிட்டத்தட்ட ஐம்பது வயது மதிக்கத்தக்க ஒரு மூதாட்டி வெள்ளைப் புடவை அணிந்து வெள்ளை நிற சால்வையைப் போர்த்தியவளாய் ஒடுங்கியவாற அமர்ந் துள்ளாள். அவளது மடியில் தலை வைத்து, 15 வயதுள்ள சிறுவன் தூங்கிக் கொண்டிருக்கிறான். அவனது தலைமயிர் கலைந்து கிடக்கிறது. இருவரும் பிரயாணத்தினால் களைத்திருப்பது தெரிகின்றது.

**தீரஜ்:** (படுத்த நிலையிலேயே) அம்மா! அக்கா ஏன் இன்னும் வரவில்லை? எனக்கு ரொம்ப பசிக்கிறது.

**அம்மா:** கொஞ்சம் பொறுத்துக் கொள்ளப்பா, இதோ வந்து விடுவாள். முன்பின் தெரியாத இந்த ஊரில் வழிதப்பிவிட்டதோ என்னவோ! ஆண் டவனே என்ன சோதனை இது? இளவரசி போன்ற என் அருமை மகள், முன்பின் தெரியாத இந்த ஊரில் சாப்பாட்டிற்காக கடவுளே! இந்தக் கஷ்டம் என்று விடியும்?

**தீரஜ்:** அம்மா! என்னம்மா நடந்து விட்டது? இப்படிக் கவலைப்படறே? நான் கொஞ்சம் பெரியவனானதும் அப்பா மாதிரி நானும் படிச்சு பெரிய புரொபசராயிடுவேன் அப்புறம் நீ கவலையே படவே வேண்டாம். அக்கா கூட முன்னுக்கு வந்திடுவா. நாங்கள் இருக்கும் போது நீ ஏன் கவலைப் படணும்?

**அம்மா:** பின்னே நீ ஏன் பசின்னு தொந்தரவு பண்றே? (அரங்கத்தின் முற்பகுதியிலிருந்து கல்யாணி வெளிப்படுகிறாள். கையில் ஏதோ உணவுப் பண்டங்களுடன் வருகிறாள். நீதிமன்றத்தில் கல்யாணி ஒரு சால்வையைப் போர்த்திக் கொண்டு தலையை முடிந்து கொண்டிருக்கிறாள். இங்கு இந்தக் காட்சியில் வரும்போது சால்வையை எடுத்துவிட்டாள். கூந்தல் விரிந்து கிடக் கிறது) அவள் வரும்போது அவள் பின்னால் இரண்டு மூன்று இளைஞர்களும், நடுத்தர வயதுடைய ஒருவரும் வந்து கொண்டிருக்கின்றனர். ஒருவருக் கொருவர் ஏதோ ஜாடைகள், சமிக்கை செய்து கொள்ளுகின்றனர். கல்யாணி அதை அறிவதில்லை)

**கல்யாணி:** ரொம்பவும் பசிக்கிறதா தீரஜ்? உனக்காக நான் கொஞ்சம் சந்தேஷ், காரப் பொட்டலம் உருளைக்கிழங்கு எல்லாம் கொண்டு வந்திருக் கிறேன் பார். போய் உட்கார்.

**தீரஜ்:** (மகிழ்ச்சியுடன் கல்யாணியைத் தழுவிக் கொள்கிறான். அம்மா! நான் சொன்னேன். இல்லே? உனக்கு அக்காவைப் பற்றி இன்னமும் நல்லாத் தெரியாது.

இச்சமயம் அவர்கள் ஒவ்வொருவராக பிரவேசிக்கின்றனர். இலேசாகத் தொண்டையைக் கனைத்து தங்கள் வருகையைத் தெரிவிக்கின்றனர்)

**சச்சித்:** மன்னித்துக் கொள்ளுங்கள் அம்மா. நான்...நான் தான் சச்சித ராய். வங்கப் பெண்கள் பாதுகாப்பு கமிட்டியின் செயலாளர். எங்களது கமிட்டி, கிழக்கு வங்கத்திலிருந்து வரும் நூற்றுக் கணக்கான அனாதைப் பெண்கள், குழந்தைகளைக் காப்பாற்றும் பணியில் ஈடுபட்டுள்ளது. இவர்தான் ஸ்ரீமான் காங்குலி, சத்யேன் காங்குலி, எங்களது உதவிக் காரியதரிசி. இவர் சுவிருத்த தஸ்தீதார் எங்கள் மண்டலியின் பொருளாளர்.

**சுவிருத்:** நமஸ்தே மாதாஜி. நமஸ்தே மிஸ்...

**அம்மா:** இவள் பெயர் கல்யாணி. இவன் பெயர் தீரஜ்.

**சத்யேன்:** நல்லது! ரொம்ப நல்லது! பார்த்தால் முற்போக்கான எண்ணம் கொண்ட குடும்பம் போல தெரிகிறது.

**சச்சித்:** சத்யா—அவனைத் தடுத்து) நாங்க எதுக்கு வந்திருக்கோம்மா... நீங்கள் இதுபோன்ற நல்ல பணிகளில் ஈடுபட்டு எங்கள் கமிட்டியுடன் ஒத்துழைச்சிங்கன்னா; நல்லாயிருக்கும். துன்பத்தினால் பீடிக்கப்பட்டு, ஆபத்தில் சிக்கிய அபலைகளுக்கு உதவி செய்ய முடியும். உங்களைப் போன்ற படிச்ச பெண்கள்...

**அம்மா:** இதில் தவறென்னப்பா? இவளுடைய அப்பாவும் ஆசைப்பட்டது இதுதான். கல்யாணி, நாட்டின் நலனுக்காக சேவை செய்யணும்னுதான் அவரும் விரும்பினார்.

**சச்சித்:** நாங்களும் இதையேதான் சொல்றோம். மிஸ் கல்யாணி நீங்க எங்களுடன் வந்தால் இந்த நற்பணிக்காக சந்தா வசூலிப்பதில் உதவியாக இருக்கும்.

**சுவிருத்:** உங்களைப் போல எத்தனையோ சகோதரிகள், டாக்கா, பாரிசால், சடகாவிலிருந்து வந்திருக்காங்க. நீங்க இந்த நல்ல காரியத்தில் எங்களுக்கு உதவணும்...

**கல்யாணி:** என் தாயாருக்கு உடம்பு தள்ளலே. தம்பி சின்னவன். அதனால் இவங்களைக் கவனிக்கிறதுதான் இப்ப என் கடமை. அதைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியாது.

**சச்சித்:** இதைப் பற்றியெல்லாம் நீங்கள் கவலைப்படவே வேண்டிய தில்லை. அம்மாவிற்கு நாங்கள் தகுந்த ஏற்பாடு செய்கிறோம். தீரஜை பாலீகஞ்சிலுள்ள அரசினர் பள்ளியில் சேர்க்க ஏற்பாடு செய்யறோம்.

**அம்மா:** பிறகு என்னம்மா கவலை?

**சத்யேன்:** மிஸ் கல்யாணி! உங்களுக்கும் செகரடேரியட்டில், குறிப்பாக கிழக்கு வங்க அகதிகளுக்காக ஒதுக்கப்பட்டுள்ள பிரிவில் வேலைக்குக் கூட எங்களால் ஏற்பாடு செய்ய முடியும். சுவிருத்திற்கு அங்கே பலரையும் தெரியும்.

**சுவிருத்:** அதற்கென்ன? ரிஹாபிலிடேஷன் செக்ஷனில் பேனி விஸ்வாஸ் கிட்ட சொன்னாலாச்சு.

**அம்மா:** கல்யாணி! இவங்க எவ்வளவு நல்லவங்க பார்த்தியா?

**கல்யாணி:** அம்மா! முன்பின் தெரியாதவர்களுடன்...

**அம்மா:** ஊர் பூராவுமே நமக்கு முன்பின் தெரியாதது தான். மகளே! நல்ல மனிதர்களைச் சந்திச்சிருக்கோம் இன்னிக்கு.

(உயரமான மேடையின் திரை விழுகின்றது. மெல்ல மெல்ல முன் பகுதியில் வெளிச்சம் பரவுகிறது. இச்சமயம் கல்யாணி மீண்டும் குற்றவாளிக் கூண்டில் நிற்கிறாள். சால்வையைப் போர்த்திக் கொண்டிருக்கிறாள். கேசத்தை முடிந்து கொண்டிருக்கிறாள்.

**கல்யாணி:** அன்றய தினம் நான் அவர்களுடன் வெளியே சென்றேன். சந்தா வசூலிக்கின்றோம் என்ற சாக்கில் அவர்கள் என்னை விலையுயர்ந்த கார்களில் அழைத்துச் சென்றனர். மிகச் சிறந்த ஹோட்டல்களில் சிற்றுண்டி வாங்கித் தந்தார்கள். மாலையானதும் நான் எனது இருப்பிடத்திற்குத் திரும்ப விரும்பினேன். அப்பொழுது சுவிருத், யாரோ பனாரசிதாஸ் என்ற பணக் காரப் பிரமுகர் ஒருவர் இருப்பதாகச் சொன்னான். அவர் பெரிய வள்ளல். கடைசியாக அவரைச் சந்தித்து விட்டுத் திரும்பலாம் என்று சொன்னான்.

(ஆழ்ந்த பெருமூச்செறிந்தவளாய் வியர்வையைத் துடைத்துக் கொள்ளு கிறாள்)

**நீதிபதி கோஷால்:** நீங்கள் களைத்திருப்பது போல் தோன்றுகிறது.

**கல்யாணி:** இல்லையில்லை. களைப்பொன்றுமில்லை. யெஸ். இதன் பின் அவர்கள் நகரத்திலிருந்து தொலைவில் ஒரு பெரிய மாளிகைக்கு என்னை அழைத்துச் சென்றனர். மாளிகையின் அலங்காரமான தோற்றம் கவர்ச்சி கரமாக இருந்தது. பளபளவென்றிருந்த வரவேற்பறையில் என்னை உட்கார வைத்துவிட்டு, சற்று நேரத்தில் திரும்பி வருவதாகக் கூறி அவர்கள் விடை பெற்று சென்றனர். மணிக்கணக்காக நான் காத்திருந்தேன். ஆனால் யாரும் திரும்பி வரவில்லை. நள்ளிரவாகி விட்டது. என் மனத்தில் சந்தேகம் எழ ஆரம்பித்தது.

(மீண்டும் அரங்கத்தின் முற்பகுதியின் வெளிச்சம் குறையத் துவங்கி முற்றிலும் இருள் சூழ்கின்றது. பின் பகுதியின் திரை லேசாக உயர, நவீன நாகரீகத்திற்கு ஏற்ற முறையில் விலையுயர்ந்த பொருட்களால் அலங்கரிக்கப் பட்டுள்ள வரவேற்பறை தென்படுகிறது. ஓவியங்கள், படங்கள், நாற்காலிகள், சோபாக்கள், முதலியவைச் செல்வச் செழிப்பை உணர்த்தும் வகையில் உட்புற அலங்காரம் அமைந்துள்ளது. ஒரு நாற்காலியில் நிம்மதியற்ற

உள்ளத்துடன் கல்யாணி அமர்ந்திருப்பது தெரிகிறது. அவள் முகத்தில் உள்ளத்தின் கலக்கமும், திகிலும், தெளிவாகத் தெரிகின்றன. இச்சமயம் கல்யாணிக்கு இடது புறத்திலிருக்கும் கதவு திறக்கின்றது.அந்த வாயில் வழியாக, சச்சித், சுவிருத், சத்யேன், மற்றும் இந்திய மக்களின் பிரதி நிதிகளெனத் தோற்றமளிக்கும் ஆடவர்கள் பிரவேசிக்கின்றனர். உயரமும் பருமனுமாக ஒருபிரமுகர். கட்டான உடல் அமைப்பு, வாயில் வெற்றிலை, புகைந்து கொண்டிருக்கும் சிகரெட், கையில் மெல்லிய பிரம்பு. மெலிதான மல் துணியில் குர்த்தா, சூடிதார் பைஜாமா, வெஸ்ட்கட் செண்டின் நறுமணம். எல்லாம் சேர்ந்து அவர் இன்ன பிரதேசத்தைச் சேர்ந்தவர் என்று கூற முடியாத படி அமைந்திருந்தன.

**சுவிருத்:** (சிரித்துக் கொண்டே உள்ளே வருகிறான்) இதோ பாருங்கள், சேட்ஜி, இருபது வயதுப் பெண்.

**சத்யேன்:** ரோஜா மொட்டுப் போல.

**சச்சித்:** ஆமாம். சேட்ஜி முதல்லே ஒரு விஷயத்தை தெளிவாகச் சொல்லிடறேன். பெண்கள் நலனுக்கான நிதிக்கு குறைந்த பட்சம்...

**சேட்ஜி:** அட! எவ்வளவு ரூபாய் வேண்டுமானாலும் வாங்கிக் கொள்ளுங்கள். இதென்ன பெரிய விஷயம்? என்ன லஹோரிமல்ஜி! என்ன சொல்லுறீங்க?

**லஹோரிமல்:** இன்னிக்கு நான் என் உயிரை வேணுமானாலும் தரத்தயார். இப்படிப்பட்ட பேரழகியை அப்சரஸைத் தேடிக் கொண்டுவந்திருக்கும் போது...

**கல்யாணி:** (வெகுண்டெழுந்த) சச்சித் பாபு! எவ்வளவு நேரமாச்சுன்னு யோசிச்சுப் பாருங்க. அம்மாவும் தீரஜும் எவ்வளவு கவலைப்பட்டுக் கிட்டிருப் பாங்க!

**சச்சித்:** ஆமாம். மிஸ் மஜும்தார். இங்கே வேலை முடிஞ்சதும் நாம் உடனே புறப்பட்டுவிடலாம்.

**கல்யாணி:** இன்னும் என்ன வேலைபாக்கி இருக்குது?

**சேட்:** ராணி! இதை உன்னுடைய மாளிகைன்னு நினைச்சுக்க! நான், லஹோரிமல்ஜி, அப்புறம் இவங்க எல்லாரும் உன் அழகுக்கு அடிமைகள்.

**சச்சித்:** மை டியர் கல்யாணி!

**கல்யாணி:** இதென்ன சச்சித் பாபு! இம்மாதிரி அநாகரீகமான பேச்சு உங்களுக்கு அழகல்ல.

**சத்யேன்:** நாகரீகமான சமுதாயம் இங்கிருந்து தொலை தூரத்திலே இருக்கு கல்யாணி! (கல்யாணியை நோக்கிச் செல்லுகிறான்)

**கல்யாணி:** விலகி நில்! இல்லேன்னா நான் கூச்சல் போடுவேன்.

**சுவிருத்:** இது காடு. நடுக்காடு. இந்த நள்ளிரவு நேரத்திலே ஒரு பறவை கூட தன் சிறகை அடிக்காது. டு நாட் மேக் எ சீன். பீ பிஸினெஸ் லைக். உன்னுடைய

கஷ்டங்களுக்காகத் தான் இந்த வழியை ஏற்படுத்தி இருக்கிறோம். சேட்ஜிக்கு ரொம்ப தாராள மனசு.

**லஹேரிமல்:** ஆம். ராணி!

**கல்யாணி:** ராணியா? வாயை அடக்கிப்பேசு— சேட்!

**சேட்ஜீ:** அட! நீ ரொம்ப வீறாப்புள்ள பெண்ணா இருக்கியே. மிஸ்டர். காங்குலி! என் சார்பாக இவளுக்கு இன்னும் ஒராயிரம்— ரோஜா மொட்டல்ல!

**கல்யாணி:** ரோஜாவிலே முள் கூட உண்டு சேட்ஜீ இதை மறந்து விட வேண்டாம். ஒரு நல்ல குடும்பத்துப் பெண்ணை அவமானப்படுத்த உங்களுக் கெல்லாம் வெட்கமாக இல்லை? சச்சித் பாபு! நீங்கள் வாராட்டி வேண்டாம். நான் போறேன். என் வழியை நானே தேடிக் கொள்கிறேன்.

**சச்சித்:** இந்த நேரத்திலே எங்கே போவாய்?

**சத்யேன்:** இங்கிருந்து நகர்ந்தால், தெரியும் ஜாக்கிரதை.

**கல்யாணி:** விலகி நில்.. தூரப்போ..போ.. ஐயோ! என்னைக் காப்பாத் துங்களேன். காப்பாத்துங்களேன்.

(ஓட முயற்சிக்கின்றாள். கதவை நோக்கிச் செல்லுகிறாள். ஆனால் இரண்டு சேட்டுகளும் வந்து நின்று, உரக்க, பலமாகச் சிரிக்கின்றனர். இருள் சூழ்கின்றது. நெஞ்சைப் பிளக்கும் கூச்சலுடன் கல்யாணி தரையில் விழுகிறாள். தீவிதமான ஆவேசத்துடன் கூடிய பின்னணி இசை. மெல்ல மெல்ல அரங்கத்தில் ஒளி பரவுகின்றது. நீதி மன்றத்தில் அனைவருடைய முகங்களிலும் அனுதாபமும், ஆவேச உணர்வும் தென்படுகின்றது. கெட்ட கனவு கண்டு எழுந்தவள் போல், சங்கோசமடைந்தவளாய், சமாளித்துக் கொண்டு, உறுதியான குரலில் தனது பேச்சைத் தொடருகிறாள்.

**கல்யாணி:** எனக்கு நினைவு வந்ததும் தாறுமாறாக கலைந்து கிடந்த உடைகளுக்குள் ஆயிரமாயிரம் தேள்கள் கொட்டும் கொடிய வேதனையை உணர்ந்தேன். என் மனம் விசனமடைந்திருந்தது. உடலும் மனமும், மட்டுமல்ல, என் ஆத்மாவும் ரண காயப்பட்டுப் போய் விட்டது. நாற்புறமும் விழிகளைச் சுழற்றிப் பார்த்தேன். மூர்ச்சையடைந்த நிலையில் இரவோடிரவாக என்னை ஏதோ ஒரு இடத்தில் போட்டிருந்தார்கள்...தண்ணீர்!

**நீதிபதி கோஷால்:** பயப்படாதே! பியூன்! தண்ணீர் கொண்டுவா...

**கல்யாணி:** (சற்றே சமாளித்துக் கொண்டு, எழுந்து நின்று) வேண்டாம், வேண்டாம்— நான் சொல்ல வேண்டியதை கூறி முடித்து விடுகிறேன்.

(நீண்ட பெருமூச்செறிந்தவாறே) அந்த வீட்டிலிருந்து நான் மிகுந்த சிரமத் துடன் எழுந்து கீழே வந்தேன். ஆனால் எனக்குத் தலையைச் சுற்றியது. எனக்கு நினைவு வந்ததும்நான் மெடிக்கல் காலேஜின் ஜெனரல் வுார்டில் முன்பின் அறியாதவர்களின் நடுவிலே இருந்தேன். இரண்டு, இரண்டரை மாதத்தில் நான் சிறிது குணமடைந்தேன். இதனிடையே போலீஸ் தரப்பிலிருந்து எனது ரிப்போர்ட்டை பதிவு செய்யவும், வழக்கைப் பற்றி, ஆராயவும் வெவ்வேறு அதிகாரிகள் வந்து கொண்டிருந்தனர். என் உடல் நிலை சற்று சரியாகியதும்,

அரசின் சார்பாக பாவு பஜாரிலிருக்கும் நிர்மல் லோஹியா தெருவில் எனக்கு புகலிடம் அளிக்கப்பட்டது.

**நீதிபதி கோஷால்:** அதாவது அந்த சம்பவம் நடந்து இரண்டு மாதத்திற்குப் பிறகு நீ ஆஸ்பத்திரியிலிருந்து வெளியே வந்தாய் சரிதானே?

**கல்யாணி:** சார், பிறகு சென்ற சனிக்கிழமை நடந்த சம்பவம்...

(அரங்கத்தின் முற்பகுதியில் இருள் சூழ்கின்றது. மெல்ல மெல்ல அரங் கத்தின் பிற்பகுதியின் திரை உயரத் துவங்குகிறது. நாடகத்தின் ஆரம்பத்தில் கல்யாணி இருந்த அதே அறை. சோபா, நாற்காலிகள், டெலிபோன், முன் போலவே வைக்கப்பட்டுள்ளன. கல்யாணி படுக்கைக்குச் செல்ல ஆயுத்தம் செய்து கொண்டிருக்கிறாள். இதற்குள் கதவை ஓங்கி உதைத்துத் திறந்து கொண்டு, போலீஸ் ஆபீசரின் உடையில், கோணலான தொப்பி, கண்களில் கறுப்புக் கண்ணாடியும் மீசையுமாய் ஒரு இளைஞன் பிரவேசிக்கிறான். லேசாக தொண்டையைக் கனைத்துக் கொண்டு கல்யாணியின் கவனத்தைக் கவருகிறான்)

**கல்யாணி:** யார் நீங்க? இச்சமயம் இங்கென்ன வேலை?

**இளைஞன்:** (தொப்பியைச் சற்ற லேசாக உயர்த்தி) ஒகோ! ஏன் என்னை அடையாளம் தெரியவில்லையா? உன்னை விசாரித்துவிட்டுப் போகலா மென்று வந்தேன்.

**கல்யாணி:** (நாற்காலியுடன் ஒட்டிக் கொண்டுவிட்டவள் போல்) இல்லை. இல்லை—நீர் யாரென்று எனக்குத் தெரியாது. இந்நேரத்தில் எனக்கு யாரிடமும் எந்த வேலையும் கிடையாது.

**இளைஞன்:** (மெதுவாக கண்ணிலிருக்கும் கறுப்புக் கண்ணாடியை அகற்றியவாறு) சற்று கவனமாகப் பாருங்கள்! மிஸ் மஜும்தார்! மூன்று மாதங் களுக்கு முன்னால் சியால்தா ஸ்டேஷனில் சந்தித்தோமே? மறந்துட்டீங்களா?

**கல்யாணி:** யார்? யாரது? நீயா? ஓ, சச்சித்? சச்சித் ராய்? இந்த வேஷத்தில்? இந்த மீசை?

**இளைஞன்:** எல்லாம் போலி. வெறும் வேஷம் உன்னிடம் வரதுக்கு இதைவிட எளிதான வழி வேறெதுவும் தெரியவில்லை. இதைப் பார்த்துப் பய மாக இருந்தால், இதோ இவற்றையெல்லாம் கழட்டி தூரவைத்து விடறேன்.

(பெல்ட், ரிவால்வர், சிறிய கை கடிகாரம், தொப்பி, முதலியவற்றை சோபாவின் மீது வைக்கின்றான்)

**கல்யாணி:** நீ மீண்டும் இங்கு எதற்காக வந்தாய்? போய் விடு. போ. இங்கிருந்து போய்விடு—பாவி...நீசனே...

**சச்சித்:** நான் உன்னை உன் அம்மாவிடம் அழைத்துப் போக அல்லவா வந்திருக்கிறேன்.

**கல்யாணி:** எனக்கு அம்மாவிடம் போக வேண்டியதில்லை. அவங்களைப் பார்க்க வேண்டியதில்லை.

**சச்சித்:** ஏன் அப்படிச் சொல்லுறே?

**கல்யாணி:** சரியாத்தான் சொல்றேன். நான் உயிரோடிருக்கும் வரை என் அம்மாவின் முகத்தில் விழிக்கும் தகுதி எனக்கில்லை.

**சச்சித்:** ஆனால் உன் தம்பி, தீரஜ், உன் நினைவாகவே இருக்கான்.

**கல்யாணி:** எனக்கு அவனையும் பார்க்க வேண்டியதில்லை. நீ இங்கிருந்து போய்விடு.

**சச்சித்:** சரி..சரி..விடு இந்தப் பேச்சையெல்லாம். அதெல்லாம் பிறகு பார்த்துக் கொள்ளலாம்.

**கல்யாணி:** நீ இப்பொ இங்கிருந்து போகப் போறியா? இல்லையா? போ இங்கிருந்து!

**சச்சித்:** என் இதயம் தவிக்கிறது கல்யாணி, இங்கே வா! வா என் பக்கத்தில். அந்த சேட்டுகளை விட நான் பார்க்க மோசமாகவா இருக்கிறேன்?

**கல்யாணி:** நகரு...போ...நான் சொல்றேன் போ... (சச்சித் மெல்ல மெல்ல அவனை நெருங்குகிறான்) நகரு...தூரப் போ...எட்டி நில்...இல்லாட்டி... இல்லாட்டி (சோபாவிலிருக்கும் பெல்டிலிருந்து ரிவால்வரை உருவி எடுக் கிறாள்) இதைப் பார்த்தாயா?

**சச்சித்:** இது வந்து...நீ என்ன செய்கிறாய் கலயாணி! குண்டு நிரப்பப்பட்ட ரிவால்வர் (சமாதானப் படுத்தும் குரலில்) ...தனோடு விளையாடாதே, கல்யாணி. இதோ பார்! என்னிடம் வா. வர மாட்டாயா? சரி, நானே உன்னிடம் வருகிறேன்.

**கல்யாணி:** எட்டி நில்லு...போ...விலகிப் போ...அருகில் வராதே. (அறையில் சுற்றுகிறாள். மீண்டும் தனது பழைய இடத்திற்கே வந்து நிற்கிறாள். சச்சித் மெதுவாக முன்னேறி மேஜைக்கும், சோபாவிற்குமிடையே வந்து நிற்கிறான்)

**சச்சித்:** கல்யாணி! நான் உன்னை...

**கல்யாணி:** ஒரடி முன்னே வந்தால் கூட இந்த குண்டு உன் மார்பைத் துளைத்துவிடும்— சச்சித்! (ரிவால்வரை கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறாள்)

**சச்சித்:** அட! என்னை பயமுறுத்துகிறாயா? தங்கம்... ஹோ...ஹோ...ஹோ. .. (சிரிக்கிறான்)

((முன்னே வருகிறாள். அரங்கத்தில் ஒளி குறைகின்றது. மும்முறை குண்டு வெடிக்கும் சத்தம் கேட்கிறது. 'ஐயோ! அப்பா! செத்தேன்' என்ற கூச்சலுடன் சச்சித் கீழே வீழ்கின்றான். எங்கும் இருள் சூழ்கிறது. திரை விழுகிறது. நீதிமன்றத்தின் காட்சியில் பிரகாசமான வெளிச்சம். நீதிமன்றம் முழுவதும் அப்படியே ஸ்தம்பித்து நிற்கிறது. கூடியிருந்தவர்கள் உணர்வுக்கு வரும் முன்னரே விரித்த கூந்தலுடன் நிற்கும் கல்யாணி ஆவேசத்துடன் பேசத் துவங்குகின்றாள்.)

**கல்யாணி:** ஆம். நான் கொலைகாரிதான். மிஸ்டர் சென்! எனக்குத் தண்டனை கொடுங்கள். என்னைத் தூக்கிலிடுங்கள். என்னை...

**நீதிபதி கோஷால்:** அமைதியாக இரு கல்யாணி! ஆனரபிள் ஜென்டில்மென் ஆவ் தி ஜுரி, இவ்விஷயத்தில் உங்களுடைய கருத்தென்ன?

(ஜுரிகள் தங்களுக்குள் பேசிக் கொள்கிறார்கள்)

**ஜுரிகளின் தலைவர்:** எங்களுடைய கருத்தின்படி இந்தப் பெண் விடுதலை செய்யப்பட வேண்டியவள். இவள் சந்தர்ப்பத்திற்கு இரையாகி விட்டாள்.

**கல்யாணி:** இல்லை, இல்லை. தயவு செய்து என்னை விடுதலை செய்து விடாதீர்கள். நான் கை கூப்பி வேண்டுகிறேன். என்னைச் சாக விடுங்கள். தூக்கிலிடுங்கள். நான் கொலை செய்திருக்கிறேன். உண்மையாகச் சொல்லு கிறேன் நான் கொலைகாரிதான்.

**ஜுரிகளின் தலைவர்:** ஆனால் சகோதரி! சூழ்நிலை, சந்தர்ப்பங்களைக் கருத்தில் கொள்ளும் போது, நாங்கள் உன்னைக் குற்றமற்றவள் என்ற முடி விற்கு வந்துள்ளோம். தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டி, தற்காப் பிற்காக, நீ இதனைச் செய்துள்ளாய், இதனால் உனக்கு விடுதலை தரப்பட வேண்டும்.

**கல்யாணி:** (ஆவேசத்துடன்) விடுதலை. எதிலிருந்து விடுதலை? மரணத்தி லிருந்த பெறும் விடுதலை எனக்கு விடுதலையல்ல. நான் சாகவே விரும்பு கிறேன். நான் இறக்கத்தான் வேண்டும். இதுதான் எனக்கு விடுதலை. என்னுடைய இந்த பலவீனமான உடலில் கடந்த இரண்டு மாதங்களாக இன்னொரு ஜீவனின் துடிப்பு கேட்கிறது?

**ஒரே குரலில் யாவரும்:** என்னது! என்ன சொல்லுகிறாய்?

**கல்யாணி:** ஏன்? ஏன் பயப்பட்டுவிட்டீர்கள்? இந்தப் பாவம் என்னுடைய தல்ல. இந்தக் களங்கம் என்னுடையதல்ல. உங்களுடைய சமூகத்தில் நாகரீக மானவர்கள் எனக் கூறப்படுகிறவர்களுடைய பாவம் இது. இப்படிப்பட்ட வர்களின் பாவத்தையும், களங்கத்தையும் சுமந்துகொண்டு? நான் உயிர் வாழ வேண்டுமென்பதுதான் நீங்கள் கூறுவதன் அர்த்தமா? நியாயம் வழங்க அமர்ந் திருக்கும் உங்களிடம் இதுதான் நியாயமா என்று நான் கேட்கிறேன். சட்டத்தைக் காப்பாற்றுகிறவர்களிடம், சட்டம் எதற்காக இருக்கிறது என்று கேட்கிறேன். மறைந்திருக்கும் குற்றவாளிகளுக்கு உங்கள் சட்டம் என்ன தண்டனை விதிக்கிறது? கண்ணற்ற இச்சமுதாயத்தில், மிருகம் போன்ற மனிதர்களிடையே, களங்கத்தைச் சுமந்து கொண்டு வாழ்வதற்காக, நான் ஏன் உயிர் வாழ வேண்டும்? வேண்டாம்—முடியாது. நீதிபதி அவர்களே! எனக்கும், என்னுள்ளே வளரும் சிசுவிற்கும் மரண தண்டனை அளித்து எங்களுக்கு இக்கொடிய வேதனையிலிருந்து விடு தலை தாருங்கள். நான் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன், கைகூப்பி வேண்டுகிறேன்— பிச்சை கேட்கிறேன் நான் கொலை செய்திருக்கிறேன் எனக்கு தூக்கு தண்டனை கொடுங்கள்.

**நீதிபதி கோஷால்:** உணர்ச்சி வசப்படாதே— கல்யாணி நீ எடுத்த முடிவு, உன்னைக் காப்பாற்றிக் கொள்ள, உன்னுடைய தன் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளத்தான். நீ இருந்த சந்தர்ப்பச் சூழ்நிலைகளின்படி, சட்டத்தின்

பார்வையில், நீ எடுத்த முடிவும், செயலும் உன்னைக் கொலைகாரி என நிரூபிக்கவில்லை. இதனால் ஜூரிகளின் கருத்தையொட்டி, நான் உனக்கு கொலைக் குற்றத்திலிருந்து விடுதலை அளிக்கிறேன். நீ குற்றமற்றவள். இன்ஸ்பெக்டர்! இவளை விடுதலை செய்யுங்கள்.

**கல்யாணி:** விடுதலை பெற்று நான் எங்கே போவேன்? மனித மிருகங்கள் நிறைந்த இந்தச் சமுதாயத்தில் நான் எப்படி உயிர் வாழமுடியும்? (விடுதலை அடைந்து குற்றவாளிக் கூண்டிலிருந்து தயக்கத்துடன் கீழே இறங்கியவாறு) நான் நான் வருகிறேன்...தூரத்தில்—தொலைதூரத்தில் இப்பூமி தேவியின் மடியில்...! தாயே! சீதையைப் போல் நீயும் எனக்கு உனது மடியில் இடம் தா. சபிக்கப்பட்ட, பாவிகளின் சமூகத்தின் நிழல்கூட என்னைத் தீண்ட முடியாபடி எனக்கு அடைக்கலம் தா!

(மெதுவா, மெல்ல, மெல்ல, இடதுபுறம் நோக்கித் தள்ளாடியபடி செல்லுகிறாள். முகத்தில் துயரம் கவ்வி இருக்கிறது. இதற்குள் கல்யாணியின் முகத்தில் வெளிச்சம் வீசப்படுகிறது. நீதிமன்றம் முழுமையும், மங்கலான ஒளிபடர்ந்திருக்க, நீதிபதி கோஷால், மற்ற யாவரும், தலைகுனிந்தவாறு நிற்கின்றனர். மெல்ல மெல்ல கல்யாணியின் முகபாவம் மாறுகின்றது. அவள் யோசிக்கின்றாள். இதன் பின் தன்னுள்ளேயிருந்து வெளிப்படும் கம்பீரமான குரலைக் கேட்பவள் போல், தனது உடலின் இந்தியங்கள் யாவற்றையும் ஒடுக்கி, அந்தக் குரலைக் கேட்பதிலேயே ஒன்றிவிட்டவள் போல், அசையாது நிற்கின்றாள். முடிவில் பிறக்காத அக்குழந்தையின் வேதனையும் துயரமும் மிகுந்த குரல் கேட்கிறது)

**குரல்:** அம்மா! அம்மா! நீ எங்கே போகிறாய் அம்மா! நீ தற்கொலை செய்து கொண்டால் என் நிலை என்னவாகும்? நான் குற்றமற்றவள் அம்மா! நெருக்கடியான இடைக்காலத்தின் ஒரு விதை நான். நான் வாழ வேண்டும். அப்பொழுது தான் நாடும் வாழும். உனக்குத் தெரியாதா? நானும் உன்னைப் போன்றவள்தான். நீ தனியாள் அல்ல. என்னைப் போல இன்னமும் ஆயிரக் கணக்கான குழந்தைகள் உள்ளனர். அவர்கள் எல்லாரும் தன் மானத்தோடு வாழ ஒரு சந்தர்ப்பம் அளிக்க மாட்டாயா? நெருக்கடி நிறைந்த இடைக் காலத்தின் மிருகத்தனத்தைக் கண்டு உன்னுயிரைத் துறந்து விட்டால் நாம் எப்படித் தலை நிமிர்ந்து வாழமுடியும்? எழுந்திரு அம்மா? உன்னை சுதாரித்துக் கொள். உன் இதயத்தின் துயரத்தை தூர எறித்து விடு. எழுந்திரு அம்மா! எழுந்திரு அம்மா! (கல்யாணி அசையாது நின்று அந்தக் குரலைக் கேட்கிறாள். அவளது விழிகளில் புதியதொரு ஒளி பளிச்சிடுகிறது. முகத்தில் மெல்லிய புன்னகை படருகிறது)

**கல்யாணி:** வா...என் இளம் சிசுவே! உனக்கு நல்வரவு!

திரை விழுகின்றது

---

# கதையாசிரியர்களின் அறிமுகம்

**ரசிக்லால் சோட்டாலால் பாரீக்** (1897—1982) அறிஞர் இலக்கிய கர்த்தா மற்றும் பண்டைக்காலச் சரித்திர ஆராய்ச்சியாளர். காந்திஜி நிறுவிய குஜராத் வித்யா பீடத்தில் முதல் பத்து ஆண்டுகள் ஆசிரியராகப் பணிபுரிந்தவர். 'ஆர்கியாலஜி' (தொல்லியல்) என்னும் பத்திரிகையின் ஆசிரியராகவும், புராதண பாரதப் பண்பாடு, கலாச்சாரம், எனும் ஆராய்ச்சிப் பிரிவிற்குப் பேராசிரியராகவும் பணியாற்றியவர். நாட்டிய சாஸ்தி ரத்தைப் பற்றிய போதிய ஞானமும், நாடகம்—நாடக மேடைபால் ஆழ்ந்த நம்பிக்கையும் கொண்டவர். இவரது நாடகமான 'ஷர்விலக்' சாகித்திய அதாகமியின் பரிசைப் பெற்றது. இத்தொகுதியில் இடம்பெற்றுள்ள 'மைனா கூஜரி' அகமதாபாத், பம்பாய், தில்லி ஆகிய நகரங்களில் மேடை ஏற்பட்டுள்ளது. இவர் ஒரு கதைத் தொகுதி, ஆராய்ச்சிக் கட்டுரைகள் அடங்கிய ஒரு நூல். மற்றும் கவிதைத் தொகுதியொன்றையும் இயற்றி யுள்ளார்.

**யஷ்வந்த் பண்ட்யா** (1906—1955) படிப்பு எம்.ஏ.வரையில். ஒரு பத்தாண்டுக் காலம் இலக்கியப் படைப்பில் ஈடுபட்ட இவர் நாடகக் கலையின் உபாசகராக இருந்தார். இன்ஷூரன்ஸ் தொழிலில் ஈடு பட்டு தில்லியில் வசித்த போது இவரது எழுத்தாற்றல் தடைப்பட்டது. இதற்கு முன்னர் இவர் ஏழு நாடகங்கள் இயற்றி யிருந்தார். இவற்றில் சிறுவர்களுக்கான நாடகங்கள் மற்றும் ஒரங்க நாடகங்களின் மூன்று தொகுதிகள் அடங்கும். உரையா டல்கள், குட்டி நாடகங்கள், ஒரங்க நாடகங்கள் எழுதுவதில் இவர் முன்னோடியாகத் திகழ்ந்தார். 'வீணா' 'சரத்' போன்ற ஆண்டுப் பத்திரி கைகளைத் திறமையுடன் 'எடிட்' செய்து வெளியிட்டார். தனது மென்மை யான சுபாவத்தினால் தில்லியில் வசிக்கும் போது குஜராத்தின் கலாச் சாரத் தூதுவராக விளங்கினார் இவர்.

**படுபாயி உமர்வாடியா** (1899—1950) மாணவப் பருவத்திலேயே இவரது உள்ளத்தில் இலக்கிய ஆர்வத்திற்கு வித்திடப்பட்டு விட்டது. பட்டப் படிப்பை முடிப்பதற்கு முன்னரே இவர் 'சேதன்' 'வினோத்' எனும் இரு மாத இதழகள், பின்னர் 'சுதர்சன்' எனும் வார இதழைத் துவங்குவதில்

ஈடுபட்டார். 1920லிருந்து 1930 வரையிலான காலகட்டத்தில் இலக்கியம் படைப்பதில் ஆர்வம் கொண்டிருந்தார். அரசுப் பணியாளர், வழக்கறிஞர், அகமதாபாத் மில் முதலாளிகளின் சங்கத்தின் செயலர் என்ற முறையில் வாழ்க்கை அனுபவங்களும், மாறிக் கொண்டிருந்த தொழில்களும் இலக்கியம் படைப்பதில் அவர் கொண்டிருந்த ஆர்வத்தைக் குறைத்து விட்டன எனலாம். சமகாலத்து மனிதர்களின் தனிச் சிறப்பியல்புகளை சரளமான, ஆனால் சாதுரி யமான பேலாச் சித்திரங்களாக வடிப்பதிலும், சுவையான கடிதங்கள் எழுதும் பாணியில் இலக்கிய நயம் மிகுந்த விமரிசனங்களைத் தவிர, சிறுகதை, நாடகம், ஓரங்க நாடகங்கள் படைப்பதில் தனது எழுத்தாற்றலை இவர் திறமையுடன் வெளிப் படுத்தியுள்ளார். இப்சனின் பாணியில் பிரச்னைகளை மையமாகக் கொண்ட இவரது படைப்புகள் குஜராத்தி நாடகம் ஓரங்க நாடகங்களின் ஆரோக்கியமான ஆரம்பத்திற்கு எடுத்துக் காட்டாக விளங்குகின்றன. 'மத்திய கந்தா அன பீஜா நாடீகா', சகுந்தலா ரசதர்சன்' ஆகியவை இவரது நாடகப் படைப்புகளாகும்.

**உமாசங்கர் ஜோஷி** (1911) குஜராத்தின் தலைசிறந்த கவிஞர், அறிஞர், கதை, நாடகம், கட்டுரை, ஆராய்ச்சித்துறைகளில் முக்கியமான இடம் பெற்றவர். முப்பதாண்டுகளுக்கும் மேலாக குஜராத்தி இலக்கியம் கற்பிக்கும் பேராசிரியராகவும், சில ஆண்டுகள் குஜராத் பல்கலைக்கழகத்தின் துணை வேந்தராகவும் இருந்தவர். 'சமஸ்கிருத' என்ற மாத இதழின் ஆசிரியர். இரண்டு வருடங்கள் குஜராத் சாகித்திய பரிஷத்தின் தலைவராக இருந்தார். ராஜ்ய சபையில் ராஷ்டிரபதியினால் நியமயிக்கப்பட்ட அங்கத்தினராக இருந்தார். இவரது கவிதைத் தொகுதி யான 'நிஷீத்'திற்கு பாரதீய ஞானபீடத்தின் பரிசு கிடைத்தது. இவருடைய பத்து கவிதை நூல்கள், இரு கதைத் தொகுதிகள், ஒரு நாவல், ஐந்து ஆராய்ச்சிக் கட்டுரைகளின் தொகுதிகள், 'சாகுந் தலம்' 'உத்தர ராமசரித'த்தின் மொழி பெயர்ப்பு. ஓரங்க நாடகங் களின் இரு தொகுதிகள், ஒரு கட்டுரைத் தொகுதி, கவிதை நாடக வடிவத்தில் இரு சோதனை முயற்சிகளான கவிதைத் தொகுப் புகள் வெளியாகியுள்ளன. 'சாப்னாமாரா', 'ஷஹீத்' இவரது ஓரங்க நாடகங்களின் தொகுப்புகளாகும். முதலாவது தொகுப்பு. ஆசிரியரை பிரதேச மொழியின் யதார்த்தவாத ஓரங்க நாடகக் கலை வடிவம் என்ற பிரிவின் சிறந்த ஒரு படைப்பிலக்கிய கர்த்தாவாக நிரூபித்துள்ளது.

**துர்கேஷ் சுக்லா** (1911) குஜராத்தி இலக்கியத்தில் எம்.ஏ. சில வருடங்கள் வரை நடுநிலைப்பள்ளி ஆசிரியர். பின் முழு நேர எழுத்தாளர். கதை, கவிதை, நாடகங்கள் இவரது படைப்பாற்றலின் சிறந்த இலக்கிய வடிவங்களாக விளங்குகின்றன. ஒரு நாவல், மூன்று சிறுகதைத் தொகுதிகள், இரு கவிதைப் படைப்புகளின் ஆசிரியரான இவரது நாடகத் தொகுப்பு

அசாதாரணமான படைப்பாகும். 'பிரத்வினா ஆன்சூ' 'ஹைஹயேபார்' 'உத்ஸவிகா' முதலியன இத்தொகுதியின் குறிப்பிடத்தக்க நாடகங் களாகும். இவர் பல மேலைநாட்டு நாடகங்களை மொழி பெயர்த்துள்ளார். பள்ளி மற்றும் கல்லூரி மாணவர்களிடையே இவரது நாடகங்கள் பிரபல மானவை.

**சுனீலால் மடியா** (1922—1968) வாணிபத் துறையில் பட்டதாரியாக இருந்தும் பத்திரிகைத் தொழிலில் நாட்டமிருந்தது. சில ஆண்டுகள் அமெரிக்கத் தகவல் தொடர்வு இலாக்காவில் பணி புரிந்தார். பின்னர் அதிலிருந்து விலகி 'ரூமி' எனும் மாதப் பத்திரிகையைத் துவங்கினார். மாணவப் பருவத்திலேயே இலக்கியம் படைக்கத் துவங்கி விட்டார். 'குக்வந்தாப்பூர்' என்ற சிறுகதைத் தொகுப்பின் மூலம் சிறுகதை எழுத்தாளர் என்ற முறையில் பிரசித்தி பெற்றார். இதன்பின் நாவல், நாடகம், ஓரங்க நாடகம், கவிதை, ஆராய்ச்சி, விமரிசனம், கட்டுரை எனப் பல்வேறு இலக்கியத் துறைகளிலும் தனது பேனா வன்மையைக் காட்டியுள்ளார். மத்திய சௌராஷ்டிரத்தின் வட்டாரமொழியில் சிறுகதை, நாடகம், நாவல் முதலியவற்றைப் படைத்துள்ளதும், மக்களின் வாழ்வை யதார்த்த மாக சித்தரித்திருப்பதும் இவரது சிறப்பாகும். கிட்டத்தட்ட பத்து சிறுகதைத் தொகுப்புகள், பத்து நாவல்கள் வெளிவந்துள்ளன. 'ரங்கத', 'விஷ விமோசன்', 'ரக்த திலக்' முதலியன இவரது ஓரங்க நாடகத் தொகுப்புகளாகும்.

**புஷ்கர் சந்தர்வாக்கர்** (1920) எம்.ஏ. படிப்பை முடித்துவிட்டு ஆசிரியத் தொழிலை மேற்கொண்டார். சௌராஷ்டிரப் பல்கலைக் கழகத்தில் நாடோடி இலக்கியத்தில் ரீடராக இருந்தார். சிறுகதை, நாவல் மற்றும் ஓரங்க நாடக ஆசிரியர். நாடோடி இலக்கியத்தைத் திருத்தி அமைத்து வெளியிடுவதில் ஆர்வம் கொண்டு பல ஆண்டுகள் இத்துறையில் பணி யாற்றினார். வெளியாகியுள்ள இவரது படைப்புகளில் ஒன்றுக்கு மேற்பட்ட கதைத் தொகுதிகள், நாவல் நாடோடி இலக்கியங்கள் இடம் பெற்றுள்ளன. 'பியானோ படோஷி' 'யக்ஞ' இவரது இரு ஓரங்க நாடகத் தொகுப்புகளாகும்.

**பன்னாலால் படேல்** (1912) மெட்ரிக் வரையில் கூட படிப்பைத் தொடர இயலவில்லை. ஆனால் ராஜஸ்தானத்திற்கருகே உள்ள தனது பிரதே சத்தை நிலைக்களமாகக் கொண்டு வட்டார மொழி நாவல்கள் படைப் பதன் மூலம் குஜராத்திய வாசகர்களைப் பரவசப்படுத்திவரும் குஜராத்தி மொழியின் சக்தி வாய்ந்த இலக்கிய கர்த்தா இவர். இவரது 'வளாமணா' 'மதேல் நீவ்' எனும் சிறுகதைகள் முதலாவது மழைத்துளிகள் மண்ணில் விழுந்ததும் எழும் இனிய மணம் போல குஜராத் வாசகர்களிடையே கிளர்ச்சியூட்டியன. 'மானவீனி பவாயி' என்னும் நாவல் இவரது சிறந்த

படைப்பாகக் கருதப்படுகிறது. இந்நாவல் 1985-க்கான ஞானபீடப் பரிசைப் பெற்றது. தலைசிறந்த படைப்பாளர் என்ற முறையில் ரணஜீத்ராம் தங்கப் பதக்கம் இவருக்கு அளிக்கப்பட்டது. பல நாவல்கள், கதைத் தொகுதிகளின் படைப்பாளரான இவர் 'ஜமாயி ராஜ்' 'டோலியாம் ஸாக் சீஸ்மனா' என்ற இரு நாடகம் இவரது மற்றொரு ஓரங்க நாடகத் தொகுப்பிலிருந்து எடுக்கப்பட்டதாகும்.

**ஜயந்திலால்** (1909—1970) சுதந்திரப் போராட்டத்தில் பங்குபெற்ற காரணத்தினால் படிப்பைத் தொடர்ந்து பட்டதாரி ஆக இயலவில்லை. சுதந்திரம் பெற்றபின், பொதுவுடைமைவாதி ஊழியர். 'பிகரே மோதி' திரைப் படத்தின் நடிகர், டைரக்டர் ஆனபிறகு பத்திரிகையாளர், வெளியீட்டாளர், அச்சக உரிமையாளராகவும் இருந்தார். 'ரேகா' மாத இதழின் ஆசிரியர். 'சுதி' நூல் வரிசையின் வெளியீட்டின் மூலம் குஜராத்தி இலக்கியத்தில் புதிய ஒளி தென்பட்டது. இரு நாவல்கள், பல சிறுகதைத் தொகுதிகள், இரு கட்டுரைத் தொகுதிகள், நாடகமேடை— திரைப்படம் சம்பந்தப்பட்ட இரு நூல்களுக்குப் பின்னர் இவர் நான்கு ஓரங்க நாடகத் தொகுப்புகள் மற்றும் ஒரு முழுநேர நாடகத்தை இயற்றியுள்ளார். இவர் பதினைந்து மேலைநாட்டு நாடகங்களை மொழி பெயர்த்துள்ளார். இந்நூல்களிளல் டால்ஸ் டாயின் உலகப் பிரசித்தி பெற்ற நாவலான 'போரும் அமைதியும்' ஜார்ஜ் ஆர்வெல்லின் 'விலங்குப் பண்ணை' ஆகியவையும் அடங்கும். நையாண்டி கலந்த நடை இவருக்குக் கை வந்த கலையாகும். 'ஜவனிகா', 'அவதரண்', 'பிரவேஷ் பீஜோ', 'த்ரிஜோ, பிரவேஷ்', 'சௌதோ பிரவேஷ்' இவரது நாடக நூல்களாகும்.

**கிருஷ்ணலால் ஸ்ரீதராணி** (1911—1960) தேசியக் கல்லூரிகளில் கல்வி பயின்ற பின்னர் அமெரிக்கா சென்று ஆராய்ச்சியாளர் என்ற பட்டத்தைப் பெற்றார். அங்கு பல ஆண்டுகள் தங்கியிருந்து, பத்திரிகையாளர் எழுத்தாளர் என்ற பெயரில் பிரபலமடைந்தார். பாரதம், காந்தியடிகள், மற்றும் அவரது அகிம்சைப் போராட்டத்தைப் பற்றிக் கூறும் 'மை இண்டியா' 'மை அமெரிக்கா' 'வார் வித்அவுட் வயலென்ஸ்' போன்ற ஐந்து நூல்களை அவர் அமெரிக்காவில் எழுதினார். இப்புத்தகங்கள் ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளன. தாய்நாடு திரும்பிய பின்னர், தில்லியில் பல உள்நாட்டு, மற்றும் அமெரிக்கப் பத்திரிகைகளின் பிரதிநிதி என்ற முறையில் பணியாற்றினார். 1960-ல் இவர் அகால மரணமடைந்தார். இவரது படைப்பாற்றல் கவி, நாடகாசிரியர் என்ற முறையில் வெளிப் பட்டது. 'கோடியாம்' 'மோர்னாம் இடா' எனும் கவிதைத் தொகுப்புகள் 'வடலோ' 'பத்மினி' எனும் நாடகங்கள் ஆகியவை இவர் அமெரிக்கா செல்லும் முன் இயற்றப்பட்டவையாகும். ஓரங்க நாடகத் தொகுப்பான 'பியாகோரி' இந்தியாவிற்குத் திரும்பிய பின்னர் வெளியிடப்பட்டது. இத்தொகுதியிலுள்ள நாடகம் அத்தொகுப்பிலிருந்து எடுக்கப்பட்டதாகும்.

**குலாப்தாஸ் ப்ரோக்கர்** (1909) தொழில் பங்கு மார்க்கெட் புரோக்கர். தற்சமயம் தொழிலிலிருந்து விலகியிருக்கிறார். பட்டதாரியான பின்னர், தேசீயப் போராட்டத்தில் பங்கு கொண்டு சிறை சென்றார். இங்கு துவங்கிய இவரது எழுத்துப் பணி இன்றுவரை தொடர்கிறது. சிறுகதை ஆசிரியர் என்ற முறையில் இவர் இலக்கிய உலகுக்குப் பரிச்சயமானார். ஆறு சிறுகதைத் தொகுப்புகளுக்குப் பிறகு இவர் ஒரு கவிதைத் தொகுதியையும் இரு விமரிசனக் கட்டுரைத் தொகுதிகளையும் படைத்திருக்கிறார். நாடகத் துறையில் ஸ்ரீதன் சுக்லாலுடன் இணைந்து எழுதிய 'தூம்ர சேர்' நாடகத்தின் மூலம் இவரது பேனா தனது ஆற்றலை வெளிப்படுத்தியது. இவர் தனித்து எழுதிய 'ஜ்வலந் அக்னி' எனும் ஓரங்க நாடகத் தொகுப்பில் அது முழுமையைப் பெற்றது. இவர் பல ஆண்டுகள் பி.ஈ.என்.னின் செயலாளராக இருந்தார். குஜராத் சாகித்திய பரிஷத்தில் பல ஆண்டுகள் செயலராகப் பணியாற்றினார்

**சிவகுமார் ஜோஷி** (1916—) தனது பிறந்த ஊரான அகமதாபாதில் பட்டதாரியான பின் கல்கத்தா நகரத்தில் துணி வியாபாரத்தில் ஈடுபட்டுள்ளார். மாணவராக இருந்த காலத்திலிருந்தே நாடகம், நடிப்பு ஆகிய துறைகளில் ஈடுபாடு கொண்டிருந்தார். பின்னர் நாடக அரங்கத்தின்பால் ஈர்க்கப்பட்டார். எழுத்திலிருந்து ஆர்வம் அவரை நாடகம் எழுதத் தூண்டியது. 1050லிருந்து இவரது சிறந்த இலக்கியப் படைப்புகள் வெளிவரத் துவங்கின. இன்றுவரை எழுதப்பட்ட முழுநேர நாடகம், ஓரங்க நாடகங்களின் பட்டியல் நீண்டு கொண்டே போகிறது. சுமங்கலா', 'அங்கார்பஸ்ம', 'சாந்தீய தீபிகா', 'பூர்வாங்குர்', 'பாஞ்ச் மனானா பாரேவாம்', 'அனந்த சாதனா', 'சோனானி நீ ஹான்ஸ்டி ரூபானி நீ ஹன்ஸ்டி' முதலியவை புகழ்பெற்ற படைப்புகளாகும் இவர் பல சிறு கதைகள், நாவல்களும் எழுதியுள்ளார்.

Laser Typeset at M/S Sriram Graphics. New Delhi

Printed at M/S Modern Printers, Delhi